# கொங்குநாட்டரசி

அல்லது

# குணசுந்தரம்



ஈரோடு

"உலக ரகசியம்" பத்திராதிபர்

கோயமுத்தூர்

சி. கு. நாராயணசாமி முதலியார்

எழுதியது





சென்னை :

வி. நாராயணன் அண்டு கம்பெனி

புஸ்தக வியாபாரிகள்

4, கொண்டி செட்டித் தெரு

 1923 [விலை ரூ 1-4-0

கற்பு, வைராக்கியம் முதலிய அறிவுக்குணவாகிய இனிய விஷயங்களையே கதைப்போக்கில் இடையிடையே சந்தர்ப்பத்திற் கேற்றவாறமைத்தும், மைனர்களும், பிரபுக்கள் வீட்டுச் செல்வப் புதல்வர்களும் துஷ்டர்கள் கூட்டுறவால் குடி, விபசாரம், சூது, துராசாரம், எளியவரைத் துன்புறுத்தலாதிய தீயவழிகளில் ஈடுபட்டு அவற்றால் வீணே கெட்டு வறுமை, வியாதி, சிறைவாசம் முதலியவைகளால் துன்புறுவதையும் கண்டு, இனி யேனும் தஞ் செல்வச்சிறுவர்கள் கெட்டலையாதிருப்தற்கு எச்சரிகையாக அத்துஷ்டர்களது மோசடிச்செயல்களையும், பணம்பறிக்கும் தந்திர வகைகளையும், தாசிகளின் நயவஞ்சகச் சூழ்ச்சிகளையும் குடிகெடுக்கும் தொழில் முறைகளையும் அவர்கள் மனதில் நன்கு பதியுமாறு தெளிவுபெற விளக்கியும் ஒருவாறு இக்கதை முடிக்கப்பட்டிருக்கிறது.

அன்றியும், இதில் இடையிடையே வாசகர்கள் ஞாபகத்தில் வைத்துச் சிந்தித்துத் தெளியும் பொருட்டுப் படிப்பதற்கினிமையுடைய சில செய்யுட்கள் அழகாக அமைக்கப்பட்டுமிருக்கின்றன.

நாவல் முறையில் இதுவே என்னு முதன்மையாய் வரையப்பெற்றதாதலின், இதில் ஆங்காங்கு சில பிழைகள் காணவுங்கூடும். அவற்றை அறிஞர்கள் குற்றமாகக் கொள்ளாது "கல்லா வொருவனுரைப்பவுங் கண்ணோடி, நல்லார் வருந்தியுங் கேட்பர்" என்றபடி தோஷங் கூறாரென்று நம்புகிறேன்.

இதனை விரைவில் எழுதிமுடிக்கும்படி பலமுறை என்னைத் தூண்டியும், கதைப்போக்கையும், அமைக்குமுறைமையும் விவரப்படக்கூறியும் உதவிய மைசூர் ஸ்ரீமத் V. S. இராகவன் அவர்களுக்கும், பாயிர மூலம் தமது அபிப்பிராயத்தை எழுதி உபசரித்த எனது நண்பரும், ஈரோடு மகாஜன ஹைஸ்கூல் தமிழ்ப்பண்டிதருமாகிய ஸ்ரீமான் E. V.

அப்பாவு முதலியார் அவர்களுக்கும், இதனை என்னிஷ்டத்திற் கேற்ப அச்சிட்டுத் தமிழகத்திற்குதவிய ஸ்ரீமத் V. நாராயண அய்யரவர்களுக்கும் எனது மனமார்ந்த வந்தனம் என்றும் உரியதாகும். சுபம்.

சாரதா விலாஸம்
கோயமுத்தூர்
10-6-23

சி. கு. நாராயணசாமி.

# சிறப்புப் பாயிரம்

நாவலென்பது புதுவது புனைவதாகச் செய்யப்படுவ தொரு கதை. இது மேனாட்டுமுறை. இந்நாட்டில் அச்சியந்திர சாலைகள் பெருகப் பெருக நாவல்களும் நூற்றுக் கணக்காகப் புறப்படலாயின. அவற்றில் பெரும்பான்மை யானவை நடையழகின்றி அறிஞர்களால் ஒப்புகொள்ளகூடாத விதமாய் வாசகர்களின் மனதைத் தீநெறிக்கண் இழுத்துச் செல்வனவாய் அமைகின்றன. "கமலாம்பாள்," "காந்திமதி," "குணசீலன்" "விஜயமார்த்தாண்டம்" என்பன போன்ற சிற்சில நாவல்களே நீதி முதலியவற்றோடு செவ்விய நடையமைதியைப் பெற்றுலவுகின்றன. இம்முறையில் நாவல்கள் எழுதப்படாதகுறை இன்று மிருந்து கொண்டே வருகின்றது. எனது நண்பரும், இந்நூலாசிரியருமாகிய **ஸ்ரீமான் சி. கு. நாராயணசாமி முதலியாரவர்கள்** அதனைப் பரிகரிக்கும் வகையாய் **குணசுந்தரம்** என்னும் புதுவது புனைந்த இதனை அழகுடன் எழுதிமுடித்திருத்தல் மகிழ்தற்குரிய தொன்றே. அன்றியும் இதன் உள்ளுறையாகிய "**கானமும் கபடமும்**" "**உண்மையும் காதலும்**" "**இரகசியச் சந்திப்பு**" "**நினையாத நீக்கம்**" "**நினைக்குங்கேடு தனக்கு**" "**புவனமாதின் ஆசார சீர்திருத்தப் பிரசங்கம்**" "**குணத்தை மாற்றக் குருவில்லை**" "**பெரும்பதி மைனர்**" முதலான பாகங்களில் செவிக்குணவாய்ச் சிறந்து ஒழுகிய ஓசையும், விழுமியகருத்தும், அமையப் படிப்பார்க்கு மேன்மேலும்

ஊக்கமெழுத்தக்கவிதமாய் விஷயங்களை யமைத்துச் செல்லு தல் வியத்தற்குரியதே. மேலும், இக்கதை யமைப்பும், நடையழகும், கற்றோருளத்தைக் காதலிக்கச் செய்யவல்ல தென மற்றொரு முறை கூறுவது மிகையாகா தென்பது எனதபிப்பிராயம்.

நமது தமிழ் நாட்டுப் பழம்புலவர் சரிதங்களை எழுது வதில் கைதேர்ந்த இதன் ஆசிரியர், தமிழ் நாவல் எழுதுவ திலும் சிறந்தவராகக் காண்பதற்கு அதிசயிக்கிறேன்.

இவருக்கு அயில்வேற்கையனும் மயில்மேற் பெருமாள் இஷ்டசித்தியையும், தேகாரோக்கியத்தையும் தந்தருள் வாருக. சுபம்.

ஈரோடு
25-5-23

E. V. அப்பாவு முதலியார்
தமிழ் பண்டிதர்
மகாஜன ஹைஸ்கூல், ஈரோடு

# பொருளடக்கம்

உ

வேலுமயிலுந்துணை

# கொங்குநாட்டரசி

அல்லது

# குணசுந்தரம்

---

## I

## பெரும்பதி ஜமீன் மைனர்

"பேதைமை யென்பதொன் றியாதெனி னேதங்கொண்
டூதியம் போகவிடல்".

"நாணாமை நாடாமை நாரின்மை யாதொன்றும்
பேணாமை பேதை தொழில்"

(திருக்குறள்)

அப்பொழுதுதான் பொழுது புலர்ந்தது. காலைக்காற்று மனோகரமாய்ச் சில்லென்று வீசிற்று. பறவையினங்கள் தத்தம் கூடுகளை விட்டு வெளியே வந்து மரங்கள் தோறும் குடிசென்று கூவிக்களித்தன. தினகரன் தனது தினயாத்திரையினின்றும் உதயகிரியில் உருக்கிவார்த்த பசும்பொன்னைத்தோன்றச்செய்தான். ஜீவராசிகளெல்லாம் பொன்மேனி பெற்றுப்பொலிவுற விளங்கின. நல்லோர் வருகையைக் கண்டு நகைமுகஞ்செய்வதுபோல் தாமரை தன் இதழ்வி

ரித்து மலர்ந்தது. இத்தகைய அதிகாலையின் தினமொன்றில் மங்கலமிக்குவளர் கொங்குநாட்டில் காஞ்சிமாநதிபாய் வளப்பத்தால் செழிப்புமிக்குடைய பொன்பதியெனப்புகலும் **பேரும்பதியில்** கோழைபடா மேழிச்செல்வமுடைய வேளாளர் வாழ்கின்ற தெருவின் வடகோடியிலுள்ள நெடுந்தெருவில் சுத்த வெண்ணிறமாய்த் துலங்கி வானளாவிய உயர்ந்த முகட்டுடைய சிறந்த மாளிகை யொன்று காண்கின்றோம். அம்மாளிகையின் சீருடைய அமைப்பும், சிறந்ததோற்றமும், கண்டார் வியத்தற்குரிய காட்சியாய் விளங்கியது. இத்தகைய மாளிகையின் முன்வாசலில் தலையிற்பாகையும், தேகத்திற் சட்டையும், மார்பில் பில்லையும் அணிந்து சேவகஞ்செலுத்திய காவலாளிகளையுங் காணும்போது அது ஒரு பெரிய ஜமீன்தாரரின் சிறந்த பெருவீடென்று தெரியவரும். நீண்டு பரந்துயர்ந்த அம்மாளிகையின் இடைவெளியில் மேனாட்டின் ஆங்கிலப் பெயரில் "குரோட்டன்" (Crotons) களெனக் கூறுகின்ற அழகிய பலவர்ணப் புஷ்பச்செடிகளை மண்தொட்டிகளில் அம்மாளிகை முழுதும் அழகுடன் வரிசைபெற வைத்து வளர்க்கப்பெற்றிருந்தன. இவ்வினிய பூங்காவில் நாண்மலர்விரிந்து நன்மணங்கமழ்ந்து மாளிகை எங்கணும் பரவி மனதைப் பெரிதும் களிப்பித்துக் கொண்டிருந்தது. இத்தகைய மாளிகையின் அமைப்பையும் எழிலையும் யாவரே வருணிக்கவல்லார்? இனி இதனைவிட்டு மாளிகையின் உட்புறத்தைகாண முன் நடையைக்கடந்து சென்றால், முதலில் தென்படுவது இருபெருகூடங்களும், கூடங்களுக்கெதிரெதிராக விருக்கும் நான்கு பெரிய அறைகளுமேயாம். கூடத்தின் தரை சிமிட்டென்னும் ஒருவகைச்சுண்ணத்தினால் மெழுகப்பட்டு நிழலோடக் கூடியதாய் நன்றாக மெருகிட்டு பசந்து செய்யப்பெற்றிருந்தது. அத்தரையின் மீது ஆங்கில நாகரீகத்திற்குரிய சில ஈச்சேர்களும், சோபாக்களும், கான்

வால்ஸ் சாய்வு நாற்காலிகளும், விருத்தவடிவமைந்த பிரம்பு நாற்காலிகளும், வட்டவடிமான ரவுண்டேபிள்களும், சில பெஞ்சுகளும் வெகு அந்தமும் ஒழுங்குமாகப் போடப்பட்டிருந்தன. அந்நாற்காலிகளின் மீது பதனிட்ட சில புள்ளிமான் தோல்களும், சிறுத்தைத்தோல்களும், சாய்வதற்குமெத்தென விருக்குமாறு விரிக்கப்பட்டிருந்தன. தென்புறச்சுவற்றோடு சேர்ந்தாப்போல் போடப்பட்டிருந்த அழகிய நாற்கால் மேஜையின்மீது மைபோற்கருத்த "டேபிள் கிளாத்" (Table Cloth) விரிக்கப்பட்டு அதன்மேல் சில பீங்கான் பொம்மைகளும், மைக்கூடும், பேனாவும், லெட்டர் பேடும் (Letter Pad) தபாற் கேசுகளும் முதுகில் கில்ட்டினால் சித்திரிக்கப்பட்ட சில இங்கிலீஷ் புத்தகங்களும், வர்த்தமானப் பத்திரிகைகளும் வகையாக வைக்கப்பட்டிருந்தன. கூடத்தின் சுவற்றில் பலதேச சித்திரவல்லவர்களால் தெளிவாகத்தீட்டப்பெற்ற பலவர்ணச் சித்திரப்படங்களும், தங்க முலாம்பூசிப் பெருஞ்சட்டங்களிட்டு விலையேறிய பெரிய நிலைக்கண்ணாடிகளும், மாட்டியும் தொங்கவிடப்பட்டுமிருந்தன. இதுவன்றி நல்ல வால்சேட்டுகளும், உயர்ந்த லஸ்தர் குளோப்புகளும், எலக்டரிக்விளக்குகளும், கூடமெல்லாம் தொங்கிக்கொண்டிருந்தன. இது போலவே எதிரேயுள்ள வலது புறக்கூடத்தில் விரிக்கப்பட்டுள்ள நேர்த்தியான ரத்தினகம்பளத்தின்மீது போடப்பட்ட ஸ்பிரிங் கட்டலின்மேல் மகமல் திண்டுடன் வெகு ஒய்யாரமாகச்சாய்ந்து கொண்டிருந்த சுமார் பதினெட்டே வயதுடைய தருணனையும், அவனுக்கெதிரில் சமீபத்தில் உயர்ந்த இரண்டாசனங்களில் வீற்று அவனோடு சம்பாஷித்துக்கொண்டிருந்த இருவாலிபர்களையும் காணலாம். இம்மூவரில் கட்டலின்மீது சாய்ந்துகொண்டிருப்பவர் அம்மாளிகைக்கு அதிபராகிய "**மைனர் ஜமீன் குழைந்தைவேலப்**

**பனும்,"** எதிரிலிருப்பவர் அவருடைய அந்தரங்க நண்பர்களென்றும், ஒருவருஞ்சொல்லாமலே வாசிப்போர்உணர்ந்து கொள்ளலாம். அவ்வதிகாலையில் அங்கு என்னவிஷயமாகச் சம்பாஷித்துக்கொண்டிருக்கிறார்களென்பதைச் சில நிமிஷங்கள் நின்று கவனித்தால் அறிந்துக்கொள்ளலாம். ஆனால் அவர்கள் பிறர் அறியாவண்ணம் வெகு மெதுவாகப்பேசிக்கொண்டிருந்தபடியால் சிலவிஷயங்களே செவியிற்பட்டன. இதனிடையில் யாரோ இருவர் தெருவின் நடையில் காவல் காக்கும் சேவகருடன் வீட்டெஜமானன் உள்ளேயிருக்கிறாரா? பார்க்கச் சமயமா? என்று கேட்டுக்கொண்டிருக்கும் சப்தம் காதில்விழ, அவர்கள் யாவரென்றறியச்சென்று பார்க்க, மைனர் ஜமீன் தந்தையார் "**குமரகோட்டம்பிள்ளை**" யவர்களின் உண்மை நண்பர்களும், அவ்வூர்க் கணக்கரும் மணியகாரரு மென்றறியபட்டது. அவர்கள் உள்ளிருந்து சம்பாஷிக்கும் சிநேகிதர்கள் தன்மையுணர்ந்து மிகவருந்தி அந்தோ! அநியாயமாய்க் குடிகெட்டு விடும்போலிருக்கிறதே! இப்பாவிகள் எத்தனை குடிகெடுத்த குணக்கேடர்கள், காலஞ்சென்ற என் நண்பரிருந்தால் இப்பேடிகள் இவ்வரண்மனையுள் நுழையமுடியுமா? இத்தகைய அற்பர் கூட்டுறவு வேண்டாமென்று எத்தனை தரம் எடுத்துரைத்தாலும் இம்மியும் கவனிக்கின்றாரில்லையே! இதற்கென்செய்வது? என்று மைனர் குழந்தை வேலப்பனைக்குறித்து விசனப்படுவதையுங் கேட்டுக்கொண்டு திரும்பவும் கூடத்திற்கு வந்தபோது அக்குடிகேடர் இருவரில், ஒருவன், எப்படியாவது அக்காரியத்தைச் சென்று விசாரித்து முடிவு செய்துக்கொண்டுவந்து விபரம் அறிவிக்கத் தவறுவதில்லை யென்றான்.

ஜமீன்:—சந்தோஷம். அப்படியே சென்று விசாரித்து வாரும். ஆனால், உருப்படிமட்டும் மிக நல்லதாயும் முதல் தாமாயுமிருக்கவேண்டும் கவனமிருக்குமா! என்றான்.

குடிகேடர் இருவரில் ஒருவன் பெயர் ‘மாதவன்’ மற்றொருவன் பெயர் ‘கோவிந்தன்.’ மாதவன் கூறுவது :—

அதுகூடவா நானறியாது போனது? நானெப்பொழுதும் சாமான்ய காரியங்களில் தலையிடுவதில்லை. “குட்டுப்பட்டாலும் மோதிரக்கையால் குட்டுப்படவேண்டும்” என்பதை நன்றாகக் கவனத்தில் வைத்துக்கொண்டிருக்கிறேன்.

ஜமீன் :—இதில் நீர் மெத்தக் கெட்டிக்காரரென்பதை நானறிவேன். இருப்பினும் ஞாபக மூட்டினேன்.

மாதவன் :—கோவிந்தா! மணி பத்தாய்விட்டது. பத்தரைக்கெல்லாம் வரதராஜன் வரச்சொன்னது உனக்கு ஞாபகமில்லையா? சரி, புறப்படு நேரமாகிறது.

கோவிந்தன் :—ஆமாம் மாதவா! வரதராஜன் வரச்சொன்னது வாஸ்தவமே, இன்று அவர்கள் அவசியம் வந்துவிடுவார்களென்றும், நீங்கள் அவர்களை நேரில் பார்க்கவேண்டுமென்றிருந்தால் சரியாகக்காலை பத்தரைமணிக்கெல்லாம் தன்வீட்டருகேவந்தால் தானழைத்துச்சென்று காண்பிப்பதாகவும் சொன்னானே சரி போவோம் புறப்படு வென்று இருவரும் எழுந்து மைனரிடம் விடை பெற்றுக்கொண்டு விரைவில் வருவதாகச் சொல்லி வெளியில் வந்தனர். வந்தபோது இவர்களெதிரில் தெருநடையில் நின்றுக்கொண்டிருந்த அவ்வூர் கணக்குமணியகாரர்களைக்கண்டு அஞ்சினரேனும், ஒருவாறு மனதைத் தைரியப்படுத்திக்கொண்டு விருந்தாளாகிய அவ்விருவர்களை நோக்கிப் பரிகாசமுறையில் ஏது காலைவேளையில் இவ்வளவு சாவகாசம்? க்ஷேமந்தானே! ஜமீன்தாரைக்காண வந்தீர்களோ? போய்ப்பார்க்கலாம். தனியாய்த்தானிருக்கிறார்கள். ஏன் தெருவில் நிற்கவேண்டும்? என்றனர்.

கணக்கர் :—தங்கள் போன்ற பெரியமனிதர்கள் அவரோடு பேசிக்கொண்டிருக்கையில் நாங்கள் இடையில் வந்து நின்றால்

தங்கள் சம்பாஷணைகளுக்கு ஓர் தடையும், தங்கள் கௌரவங்களுக்குத் தாழ்வும் வந்து விடுமோ வென்று பயந்தே தான் வெளியில் நின்று கொண்டது. ஜமீன் விருத்திக்குரிய தங்கள் சம்பாஷணை முற்று முடிந்து விட்டதோ! சரி போய்வாருங்கள். நாங்கள் உள்ளே செல்லுகின்றோம்.

**மாதவன்** :—அக் காலத்துக் கர்நாடக மனுஷாளுக்கு நாகரீகமாய்ப் பேசத் தெரியா தென்று சொல்லுவார்கள். தங்கள் வரையும் அது பொய்பட்டது. தங்கள் வார்த்தை மெத்த சாமர்த்தியமாகக் காண்கிறதே!

**கணக்கர்** :—எங்கள் சாமர்த்தியமெல்லாம் தங்கள் சாமர்த்தியத்தின் முன் மின்மினிபோலாய்விட்டது.எங்கள்நேசமெல்லாம் ஒருவர் உயர்வதற்கும், ஒழுங்கோடிருப்பதற்குமே உபயோகப் பட்டுவந்தது. இக்காலத்துச் சிநேகம் அப்படியில்லை, மோசடியும், வஞ்சக நட்பும், குடி கெடுத்துப்பணம் பறிக்கும் செய்கையாகவே காணப்படுகிறது. காலவித்தியாசத்திற்கு யாரை நோவது?

**மாதவன்** :—காலத்தின்கோலத்தை மாற்றுவதற்குத்தாங்களாவது ஏதேனும் நூதனமானஓர் ஏற்பாடு செய்யக்கூடாதா? கிராமங்களில் கணக்குமணியகாரர் செய்யும் அக்கிரமங்களுக்கும், அட்டூழியங்களுக்கும்ஓர் அளவுண்டா? நீங்களிட்டதே சட்டமாய் அனைகள் சொத்தைப் பறிமுதல் செய்து அவர்களும் அவர்கள் குடும்பங்களும் தலையெடுக்காத படி நசிக்கச்செய்து விடுகின்றீர்களே? அதைவிடவா! நாங்கள் செய்வது அநியாயமாய்த்தோன்றுகிறது. தங்களோடு பேசிவீணுகக் காலதாமதம் செய்வதற்கு இப்பொழுது சாவகாசமில்லை என்று சொல்லி அங்கு நின்றும் சென்றனர்.

**மணியகாரர்** :—அவ்விரு பதர்களும் தங்களிருவரையும் சிறிதுங்கவனியாமல் தங்களையும், தங்கள் தொழிலின் இழிவையுங்குறித்துக் கேவலமாகக் கூறிச்சென்றதற்கு மெத்த

வருந்தினரெனினும் செய்வதொன்றுமில்லை யானதால் "புல்லர்தம் சொல்லுக்கஞ்சிப் பொறுப்பது" போல் பொறுத்து உள்ளே சென்றனர்.

**மைனர்** :—மிகச்சிறுவனும், பெருந் தன்மையில்லாச் சிறுபிள்ளைச் செயலும், அற்பர் கூட்டுறவு விருப்பமுடையதென மதிக்கும் விவேகமும், அன்னிய மாதரைக் கண்ணியங் குலைக்கும் அறிவீனமும், பணச்செருக்கால் எதையும் செய்துமுடிக்கலாமென்னுந் துணிபும், ஆங்கிலக்கல்வியால் யாரையும் மதியாது கர்வங்கொள்ளும் சுபாவமும் மிக்குடையவனானதால், வந்த அவ்விருவர்களையுங் கண்டு சிறிதும் மதியாமல், ஏது காலைவேளையில் இவ்வளவு சாவகாசம்? ஊர்க்குள் வேலையில்லைப்போலும். கவர்மெண்டார் உங்களுக்குத் தரும் மாத நிவேதனம் முன் பட்ட கடன் போலும். சரி, வந்த காரியமென்ன? சீக்கிரஞ் சொல்லுங்கள். எனக்கு அதிக வேலையிருக்கிறது வெளியிற் செல்ல வேண்டும்.

**கணக்கர்** :—வேலையில்லாமல் நாங்களிங்கு வரவில்லை. எப்பொழுதும் எங்களுக்கு வேலையுண்டு. எங்களைவிடத் தங்களுக்கதிக வேலையிராதென் றெண்ணுகின்றோம். பிதுரார்ஜிதப் பொருள் உள்ளவர்களுக்கு வீண்கர்வமும், தற்புகழ்ச்சியும், தன்மதிப்பும் உலக ஆடம்பரப்பிரியமுந் தவிர வேறு கவலையும் வேலையுமேது? வீண் பேச்சேன். இப்பொழுது இங்குவந்து போனபிரபுக்கள் யாவர்?

**மைனர்** :—யாராயிருந்தாலென்ன? உங்களுக்கேன் அந்த விசாரணை?

**கணக்கர்** :—எங்களுக்கு இந்த விசாரணை யில்லாமல் மற்ற யாவர்க்கென்றிருக்கிறீர்கள்? எங்கள் பிராணப் பிரியராயிருந்து காலஞ் சென்ற தங்கள் தந்தையார், தமது மரணகாலத்தில் எங்களை அருகிலழைத்துப் பையன் சிறு

வன், விடலை, அற்பர் கூட்டுறவால் கெட்டுப் போகாதிருக்க என்னைப்போலிருந்து புத்திமதி கூறி ஜாக்ரதையாகவிருந்து பார்த்துக்கொள்ளும்படி சொல்லிச் சென்றார். அவர் சொல்லிச் சென்றபடி நடந்து கொள்ளவேண்டுவது எங்கள் கடமையெனக் கொண்டிருக்கிறோம். அக்காரணத்தினாலேயே தங்களையும் விசாரிக்கத்துணிந்தது.

**மைனர்** :—உங்களைப்போல் பைத்தியக்காரர்கள் இவ்வுலகத்திலிராரென்று நினைக்கிறேன். தந்தையார் ஏதோ சுர வெறியால் சில வார்த்தைகளைப் பிதற்றினால் அதை வேத வாக்கியமெனக் கொள்ளுதல் அறிவீனமன்றோ? நாகரிகம் நனிசிறந்து ஆங்கிலவியாபகத்தால் அறிவு முதிர்ச்சிபெற்று அடிமை வியாபாரத்தினின்றும் விலகிச் சுதந்தர மேலிட்டு வருகின்ற இக்காலில், கொடிய வழக்கமென்னும் பழக்கத்தையும், மூடாசாரத்தையும் கைவிடாது காத்து வருகின்ற நீங்கள் தானா எனக்கு நல்வழிபூட்டி எனது ஆஸ்திகளையும், ஜமீனையும் நிலைநாட்ட வந்தவர்கள்? உங்கள் செயல் வெகு நன்றாயிருக்கிறது என்று சிறிது சினந்து கூறினான்.

**கணக்கர்** :—"கிழவன் பேச்சுக் கின்னாரக்காரன் கேளான்" என்பதுபோல எங்கள் வார்த்தை தங்கள் மந்த செவிக்கேறவில்லைபோலும். அற்பர் கூட்டுறவின்தோஷமே, முதறிவுடைய தங்களது தந்தையை சுரவெறியரென்றும், எங்களைப் பித்தம் பிடித்த பேதையரென்றும் சொல்லவைத்தது. இனியும், அவ்விதம் சொல்லி எங்கள் மனதை வருத்தச் செய்யாதீர். நாங்கள் உமது தந்தையாரிடத்து நெருங்கிப் பழகி அவருடைய பெருந்தன்மை, நற்குணம், கருணை, பரோபகாரம், சாந்தம் அடக்கம், முதலிய அருங்குணங்களை அறிந்து அவர்பால்நேசங்கொண்டிருந்ததுபோல் அவர் தவப் புதல்வராகிய தங்கள் பாலும் அவ்வாறேயிருக்க நினைந்து நாங்கள் இங்கு அடிக்கடி வருவதேயல்லாமல் மற்றெதற்கு?

மைனர் :—தந்தை கர்நாடக மனிதர், உலக நாகரீகம் உணராதவர். கிணற்றுத்தவளை நாட்டுவளப்பம் அறியாதவாறுபோல் பணம்படைத்த அருமைக்குரிய போகம் நுகராது வீணேயிறந்தனர். நானும் அவ்வாறேயிருந்து இறந்துபோகவேண்டுமென்பது தங்கள் விருப்பம்போலும்.

கணக்கர் :—நாங்கள் தங்களை அவ்விதம் சொல்லவரவில்லை. எங்கள் கர்நாடகத்திற்கும் தங்கள் இங்கிலீஷ் முறைக்கும் வெகுவித்யாசமுண்டு. அந்த முறை எங்களுக்கு ஒருபோதும் பிடிக்காது. அதனைப்பற்றித்தாங்கள் எத்தனை உயர்வாக எடுத்துக்கூறினாலும் எங்கள் மனதிலும் ஏறாது. கொள்ளவும் மாட்டோம். ஏனெனில், அது தற்புகழ்ச்சியில் மயங்கக்கூடியதாய், வீண்பணவிரயத்திற்கேதுவாய், அந்தஸ்துக்கு மீறிய அலங்காரங்களுக்குள்ளாக்குவதாய் துஷ்ட சிநேகத்திற்குந் தொடர்புண்டாக்கிக் கேவலநிலைமைக்குத் தாழ்த்துவதாய் உள்ளதுபற்றித் துராசாரமும், பழக்கவிரோதமுமான இதனை விட்டொழித்து நன்மார்க்கத்தைக் கொள்ளவேண்டுமென்பதே எங்கள் விநயமான வேண்டுகோள் என்றனர்.

மைனர் :—அது ஒருபோதும் என்றால் முடியாதகாரியம்.

கணக்கர் :—"மூத்தோர் சொல்வார்த்தை யமிர்தம்" என்றுகூறுவதையேனும் தாங்கள் கேட்டதுண்டா ?

மைனர் :—கேட்டிருக்கிறேன். அது ஒரு பிரமாணமும், உயர்வு மாகமாட்டாது. வயதுபோன ஒரு கிழவி ஏதோ வாய்க்குவந்ததை உளறிவைத்தால் அதனை அறிவுடையோர் அங்கீகரிப்பார்களோ ?

கணக்கர் :—நாங்கள் அங்கீகரிக்கத்தக்க பிரமாணந்தானேது ?

மைனர் :—ஷேக்ஸ்பியர், கோல்டுஸ்மித், டாக்டர் போப், ரெவரெண்டு பிஷப், முதலிய மேதாவிகள் மொழிந்த

வைத்த அனுப வாக்குகளைத்தான், நான் ஆதாரமாகக் கொள்வது.

**கணக்கர் :**—சரி இத்தகைய அபிப்ராயமுள்ள தங்களோடு சம்பாஷிப்பது வீணேயாகும்.

**மைனர் :**—எனக்கும் தங்களோடு சம்பாஷிப்பதில் அவ்விதமே. சரி போய் வருகின்றீர்களா ? எனக்கும் வெளியிற் செல்லவேண்டிய அவசர காரியமிருக்கிறது.

**கணக்கர் :**—அப்படியே செய்யுங்கள். நாங்கள் போய் வருகிறோம். என்று அவ்விருவர்களும் வாடிய முகத்துடன் மைனரைத் தலை நிமிர்ந்துகூடப்பார்க்க மனமின்றி மனதிற்குள் வேதனை கொண்டவராகி இவன் சீக்கிரம் கெட்டலைவான் என்று சிந்தித்துக்கொண்டு வெளியில் வந்துவிட்டனர்.

**மைனர் :**—தனது வாலிப மூர்க்கத்தாலும், செல்வச் செருக்காலும் பின்விளைவை யோராது நமது நிலைமைக்கு எக்காலத்தும் பங்கம் வராதென்று மனோராஜ்யம் செய்து கொண்டு பெரியாரை யிகழ்ந்ததில் சிறிதுங் கவலையின்றித் தன்வேலைமேற் சென்றான்.

முன் மைனரிடத்து விடைபெற்று வெளியிற் சென்ற மாதவனும், கோவிந்தனும், தம்மிருவருக்குள்ளேயே நாமிருவரும், அழகில் ஒப்புயர்வற்றுத் தெய்வரதிபோல் விளங்குகின்ற நவயௌவன யுவதியொருவளைத் தேடித் தருவதாகக் கூறி நாள்தோறும் நல்ல பணம் பெற்று குடிக்கும், கூத்தியார்க்கும் கொடுத்து வீணே நாள் கழிக்கின்றோம். நாம் குறிப்பிட்டுக் கூறிய பெண்ணரசியார் எங்குகிடைக்கப் போகிறாள். நாமென்னமோ இங்கிருக்கிறாள், அங்கிருக்கிறாள் என்று பணம் பெறும்பொருட்டுப் பொய்பேசிக் காலங் கடத்திவருகிறோம். இன்னம் எத்தனை நாளைக்கிப்படிச் சொல்லி வயிறு வளர்ப்பது. இன்றைக்கும் அவ்விதமே சொன்னால் பணம் பெறுவது கூடாதகாரியம். நம்பிக்கையும்

இறந்துவிடுவோம். இன்றைக்கு எப்பாடு பட்டாவது நாம் அதுவிஷயமாகப் பல விடத்துஞ்சென்று புலம் விசாரித்துக் கண்டு பிடிக்கவேண்டும். அல்லது வரதராஜனைக் கொண்டாவது ஏற்பாடு செய்யவேண்டும். என்று தீர்மானித்துக் கொண்டு அவன் வீடு நோக்கிச்சென்றனர்.

II

## கானமும் கபடமும்

" கண்டுமொழி பேசி மனங்கண்டுகொண்டு கைவிலையாய்க்
கொண்டுவிடு மானர் பொய்க்கூத்தொழிவ தெந்நாளோ "

(தாயுமானவர்)

பெரும்பதி யென்பது தன் பெயருக்கேற்றபடி பெரிய நகரமாயிராதபோதிலும், பார்வைக்கு அழகும் அமைப்புமாய், ஒழுங்காயுள்ள தெருக்களுங்கூடிய கடைவீதிகளும் நிறைந்ததாயுள்ள ஓர் சிற்றூர். சுமார் ஐயாயிரம் வீடுகளும், நான்கு பெரிய தெருக்களும், பதினையாயிரம் குடித்தொகையுமுடையன. மற்றும் சிறு தெருக்களும், பல சந்துக்களும் ஏராளம். ஆதியில், இவ்வூர் சிறிய குப்பமாயிருந்தது. இதில் சில வேளாளரும், விப்பிரரும், செட்டிகளும், சேணியரும், அவர்கள் உபயோகத்திற்கு வேண்டிய கருமான், தச்சன், பொற்கொல்லன், வண்ணான், அம்பட்டன் முதலியோரும் வசித்து வந்தனர். அப்பொழுதிருந்தது இரண்டொரு தெருக்கள் ; அவைகளும் சிறுத்துக் குறுகி யிருந்தன. நாள் செல்லச் செல்ல இரண்டு வீதி நான்கு வீதிகளாய் இப்பொழுது நாலெட்டு வீதிகளாயின. வேளாளருக்குப் பின் வேதியர் குடிபுகப் பிறகு வணிகர் வர, அவர்களுக்குப் பின் செட்டிகள் சேரக் கைக்கோளர் காலடி வைக்க இன்றுஎல்லாச் சாதியரும் நிறைந்தனர். கிராமமாயிருந்த பெரும்பதி,

நாளாவட்டத்தில் ஜனத்தொகையிலும், விஸ்தீரணத்திலும் உயர்ந்தன. வியாபாரமும் செழித்தது. வருவாயும் உயர்ந்தது. ஆங்கில நாகரீகமும் மெள்ள நுழைந்து பரவின. இதனால் அறமும் ஆண்மையும் அறவே மறைந்து, மறமும் பொய்யும் மல்கியது. விபசாரமும் தலையெடுத்து நின்றது, போதாக் குறைக்குச் சூதும் வாதும் துர்க்குணங்களும் தொடர்ந்து இவ்வூரில் நிலைபெற்றோங்கின. களையால் நெற்பயிர் மடிவது போல் அற்பர்களால் பெருந்தன்மையும் பழைமையான குடும்பங்களும் நசித்து வருகின்றன.

இத்தகைய பெரும்பதியிலுள்ள சிறு தெருக்களின் வட கோடியிலுள்ள **"சேவலடிப்பிள்ளை தெரு"** வில், மேல்புரம் சிரேணியில், காண்போர் கண்விருந்தா யமைந்து உயர்ந்து சிறந்து விளங்குகின்ற மூன்றடுக்கு மாளிகையைக் காணலாம். இதன் புத்தம் புதிய அமைப்புக்கும், விசித்திர வேலைப் பாட்டுக்கும், அத்தெருவழியே செல்வோர் அதிசயித்துச் சற்று நிமிர்ந்து நின்று பார்க்காமற்போவது அபூர்வமென்றே சொல்லவேண்டும். இத்தகைய அழகிய மாடிவீட்டின் நிலா மணி முற்றத்தில் உயர்ந்த ரத்தின கம்பளம் விரிக்கப்பெற்ற ஆசனமத்தியில் அழகுபெற வீணையொன்றைக் கையிலேந் திச் சுமார் 18 வயதேயுடைய தருணியொருவள் வீற்றிருந் தாள். அவள் மைதிட்டிய நீல விழியும், உருண்ட முகமும் சிறந்த நுதலும், அப்பொழுதலர்ந்த தாமரையன்ன சிவந்த கன்னமும், காமுகரை வருத்தவல்ல தன்மையுடையனவாய்ச் சிறந்திருந்தன, திரண்டு பருத்துயர்ந்து கச்சுக்கடங்காது நிமிர்ந்து பூரித்துக்காணும் அவளது ஸ்தனபாரங்களுக்குப் பிரபுக்கள் தனம் எம்மாத்திரம்? அவள் புன்சிரிப்புக்கு ஒரு கோடி பொன் சரிப்படாதென்றால், அவள் அழகைப்பற்றிக் கூறுவானேன்? இங்ஙனின ஒய்யார நாரிமணி தன்னிரு காதுகளிலும் அணிந்திருந்த இரண்டு வைரத்தோடுகள்

மின்னலொளியைப் பரிகாசித்துக்கொண்டிருந்தன. உயர்ந்த வைரமிழைத்த கழுத்தட்டிகையும், கல்லிழைத்த மாங்காமாலையும் பெருவிலை மதிப்புடையன. கையிலுள்ள கெட்டிக்காப்பும் கொலுசும், அவள் கைக்குப்பொருந்தி அழகுபெற விளங்கிக்கொண்டிருந்தன. உயர்ந்த வெண்ணிறப் பட்டுப் பீதாம்பரமொன்றையிடையிலுடுத்திநவரத்தினங்களிழைத்த ஒட்டியாணமிட்டு வில்வெட்டு ரவிக்கை யணிந்து, ஒய்யாரமாக வீற்றிருந்தது, வீணைக்குரிய அந்நாமகளே இக்கோலம் பூண்டு வந்தனளோவென்று காண்போர் சந்தேகிக்கக்கூடியதாயிருந்தது. இவ்வளவு சம்பிரமத்துடனுள்ள இவ்வனங்கனுள் தன் எதிரிலுள்ள வீணையைச் சுருதி கூட்டித் தளிர் போன்ற அழகிய விரல்களால் தந்திகளை மீட்டிக்குளிர்ந்த நாதத்துடன் குயில்போற் கூவும் தொனியையுடைய தனது சாரீரத்தைச் சேர்த்து இனிமையாகப் பாடிக்கொண்டிருந்தாள். மாலை ஏழுமணி வேளையானதால் சந்தடியின்றி தெரு நிஸ்ஸப்தமாயிருந்தது. வீணாநாதமும், சாரீரத் தொனியும் வெளியிலிருப்போருக்குகூட வெகுதெளிவாகக்கேட்டுக்கொண்டிருந்தன. ஆரம்பத்தில் முகாரியில் "**எப்புடு கிருபாகல்குனோ இனகுலதிலகா**" என்ற கீர்த்தனையும், தீர சங்கராபரணத்தில் "**கருணீஞ்சுடக்கிதே சமயமையா**" என்ற கீர்த்தனையும் பாடியது வெகு நன்றாயிருந்தது. பாட்டின் இனிமையைப்போலவே வீணைமீட்டி வாசித்ததும் மிகுசமத்காரமாயிருந்தது. கமகம் தானம் இவைகள் வாசிக்கிற முறை தற்கால சம்பிரதாயமின்றிப் பூர்வ கிரமத்தையொட்டி வெகு நுணுக்கமாக வாசித்தாள். இராக ஆலாபனம் செய்யும்போது கமகமும், ஓரிக்கைகளும், அபார சங்கதிகளும், வெகுநிதானமாய்க் கைவிரல்களின் நுனியிலிருந்து எதோ மந்திர சக்தியால் ஒழுகிக்கொண்டேபோவது போல்காணப்பட்டன. அவளுடைய இனிய சாரீரத்திற்கும், குளிர்ந்த

வீணை நாதத்திற்கும், சிறிதும் வேற்றுமையின்றி ஒற்றுமை போல் ஒருமைப்பட்டிருந்தன. காம்போதி ராகத்தைச் சுகமான வழியில் ரவைஜாதிகளுதிர இவ்வளவு சமத்காரமாய்ப் பாடினதை எவருங்கேட்டிருக்கமாட்டார்கள். சுரம் பாடுகிற நேர்மையும், நிரவல்களின் பந்தாவும், தாளக்கட்டும் வெகு சிறந்ததாயிருந்தன. 'அருட்பாவையும், தாயுமானவர் பாடலையும்' அர்த்தமுணர்ந்து பதச்சேதமின்றி இசைதழுவி வெகு உருக்கமாய்ப் பாடியது, சித்தமிளகித் தேகம் பரவசமடைந்து கண்ணீர்மல்கி ஆனந்தபாஷ்பம் சொட்டச் செய்து விட்டது. இங்ஙனம் சங்கீத வித்வான்களும் தயங்கும்வண்ணம்பாடி வீணை வாசித்துக்கொண்டிருந்த இவள், எதையோ நினைத்துகொள்ள அதனால், அமைதியுடன் நிலைபெற்ற மனம் சிதறி வேறுபடக் கானரஸங்கெட்டு வீணாநாதமும் விரசமாய்த் தொனித்தன. "விருப்பமே நினைப்புக்கு மூலம்" என்பது ஓர் ஆங்கிலப் பழமொழி. இத்தருணத்தில், "நீலக்கடல் வெள்ளத்துதித்து மேலெழுந்த வெண்ணிறமுள்ள சந்திரன் என்கிற சிற்பியானவன், தனது கிரணங்கள் என்கிற கைகளை மேலே பரவச் செய்து மிகுந்த வெள்ளிய நிலவாகிய வெண்ணிறச் சுண்ணச் சாந்தினால் திருமாலினது நாபிக்கமலத்திலிருந்து முன்பு தோன்றின அண்டகோளம், பழையதாய் விட்டதெனப் புதுப்பிக்கத்தோன்றியதுபோல் ஆகாய வீதியில் தோன்றினான்." தென்றலும் அடுத்துள்ள மலர்க்காவிற் படிந்து நறுமணங் கவர்ந்து வெகு மிருதுவாகத் தவழ்ந்தது. மாஞ்சோலையில் தீங்குயிலும் தன்னினிய குரலெடுத்துக் கூவின. இவைகள் ஒன்றுகூடியபோது பருவ மாதருக்கு வேறு பகைவரும் வேண்டுமோ! இங்ஙனம் சிறிதுநேரம் சென்றுகொண்டிருக்க, அம்மாளிகையின் முன் வாசலில் இரண்டு குதிரை பூட்டியஉயர்ந்த பீட்டன் வண்டி யொன்று வந்து நின்றது. சாரதி இருவர்களில் ஒருவன், சட்டென்றெ

முந்து கீழிறங்கிவந்து வண்டியின் கதவு திறந்து வணக்கத்தோடு நின்றான். அவ்வண்டியில் சுமார் 18 வயதேயுடைய வாலிபன் ஒருவன், வெகு ஒய்யாரமாகக் கால்மேல் கால்போட்டு வீற்றிருந்தான். அவன் நவநாகரிகப் புதுமைக்குரிய உயர்ந்த டுயிட் ட்ரவசரும் (tweed Trouser) ஓப்பன் அண்டிங் கோட்டும் (Open Hunting Coat) நல்ல பட்டுக் கலர் காலரும் (Coller) கட்டியிருந்தான். அக்கோட்டுக்கு அலங்காரமாகத் தங்கச் சையினோடு கூடிய பிரசித்திபெற்ற வெஸ்டு அண்டு வாட்சுக் (West End Watch Co.) கம்பெனியாரின் சரியானகாலங் காட்டக்கூடிய சிறந்த கெடியாரமும் தொங்கவிடப்பட்டிருந்தது. தலைப்பாகை மிகு விலையேறப் பெற்றதென்பது அதன் முன்பக்கத்தில் சில வைரமிழைத்த முகப்பாலறியப்படும். பாகையின் உச்சியில் வெண்பட்டு குச்சென்றும் பார்வைக்கு அழகாய் தொங்கி மெதுவாக அசைந்துகொண்டிருந்தது. காதிலணிந்துள்ள இரண்டு வைரக் கடுக்கனும் வானின்று தவறிய இரு நட்சத்திரங்கள் செவித்துளையில் ஒட்டிக்கொண்டிருப்பதுபோற் காணப்பட்டன. வலதுகையிலுள்ள கண்டாமணியுடன் கூடிய சிங்கமுகப்பொன்தோடாவும், விரல்களில் சிறந்தவஜ்ர மோதிரங்களும் பெருஞ் செல்வந்தனென்பதை விளக்கி நின்றன. இத்தகைய பெருமையுடன் வீற்றிருப்பவர் யாவரென்றறியக் கதாவாசகர்கள் விரும்புவராதலால், நாம் இன்னாரென்பதை அறிவித்துவிடுவோம். இவன்தான், தந்தை சொற்கடந்து தாயுரை மீறிப் பணக்கொழுப்பால் யாரையும் மதியாது கர்வித்து விருதாகோஷ்டியில் சதா திரிகின்ற "ஜமீன் மைனர் குழந்தை வேலப்பன்" இவன்சாரதியால் திறக்கப்பட்ட வண்டியினின்றும் கீழிறங்கிக்காலிலணிந்துள்ள அமெரிக்கன் பூட்சு அழகுபெறச் சப்திக்கக் கைவீசி நடந்து அம்மாளிகையின் வாசற்படியேறினான். அம்மாளிகை அவ்வூரில்

பிரசித்திபெற்ற "**தாசி லலிதா**" என்பவள் மனை. இவள் தன் வீடு தேடிவரும் காமுகரைத் தன் கட்டழகாலும், கானரஸத்தாலும் களிப்பித்து, வஞ்சக நடிப்பாலும், மாய்மாலத்தாலும் மதிமயக்கிப் பொய்யன்புகாட்டிப் பொருள் பறித்து வறியராக்கிவிடுவதில் கைதேர்ந்த வல்லவள். இத்தகைய நயவஞ்சகியின் வாசற்படி வந்த மைனரை அவ்வீட்டு வேலைக்காரி கண்டு சட்டென்றோடி மேடையிலுள்ள தன் எஜமானிக்கு மைனர் வரவை யுணர்த்தினள். அவள், ஒரு வியாஜத்தை மனதில் வைத்துக்கொண்டு எதிர்கொண்டழையாது இருந்த விடத்தில் இருந்தபடியே யிருந்து "**மேலே வரச்சொன்னார்கள்**" என்றுபோய்ச் சொல்லென்றுத்திரவிடப், பரிசாரிகையும் அங்ஙனமே வந்து பகர்ந்தாள். ஜமீன்தார் தாசி லலிதா, இன்று தம்மை எதிரேற்றுபசரிக்கவாராது இருந்த காரணம் யாதென ஆலோசிக்கத் தொடங்கினனேயல்லாமல், தம்மைச் சிறிதும் மதியாதொழிந்ததற்குக் கொஞ்சமும் வருந்தினனில்லை. ஆசை வெட்கமறியாதன்றோ! மேலும் மைனர் காமுகன் தானே. கனத்தை விரும்புவனோ! மேலேவரச்சொன்ன ஒரு வாசகமே சுப சூசகமென்று சந்தோஷித்து உற்சாகமேற்கொண்டு சட்டென வீட்டினுள் நுழைந்து கூடம்கடந்து மாடிப்படியேறி நிலாமண்முற்றஞ் சேர்ந்தான். வந்தவனை, லலிதா பார்த்தும் பாராதபாவனையில் வீணையில் திருஷ்டியும், அதில் கவனமுஞ் செலுத்தி மீட்டி வெகு உருக்கமாகத் தன் இனிய சாரீரத்தில் "**சுப்பராம ஐயர் பதத்தில்**" நீலாம்புரி ராகத்தில் அமைந்த "**காதலெனக்குத் தந்த கண்ணாளனையெவள் கைவசப்படுத்திக்கொண்டாளோ**" என்னும் அழகிய இத்தமிழ்ச் சாகித்தியத்தைப் பாடிக்கொண்டிருந்தாள். மைனர் சரசியும், கல்வியறிவும் உடையவனாதலால், பாட்டின் பதமுணர்ந்து, கானத்திலும் ஈடுபட்டு, நன்போகனுக்காமாய், லாவண்ய நிதியாய் அங்கே வெளியில் வீற்றிருக்கும்

அவள் ஒப்பற்ற அழகிலும் மயங்கி, ஆச்சரியவசத்தனுய், ஒன்றும்பேச இயலாதவனுகித்தாளுகவே அங்குள்ள ஆசனம் ஒன்றில் உட்கார்ந்துகொண்டான். இங்ஙனம் சிறிது நாழிகை சென்றது. பாட்டும் முடிந்தது. வீணை நாதமும் அடங்கிற்று. ஐந்து நிமிஷம் யாதோர் அரவமுமின்றி நிஸ்சப்தமாயிருந்தது. ஜமீன்தாருக்கு இருக்கை கொள்ளவில்லை. விரகவாதனை அதிகமாயிற்றுத் தாளாதவராய் "பிரியமுள்ள லலிதா? என்ன நீ இன்றைக்கு; இவ்வாறு நடக்கத்துணிந்தது? எனது வரவுகாணும் நீ தாயைக்கண்ட சேய் தாவி வருவதுபோல்வரும் வழக்கமிருக்க, நான்வந்து இதுவரையும் ஏனென்று கேளாமலும், ஏறிட்டுப் பார்க்காமலும் மௌனங் கொண்ட காரணந்தானென்ன? உத்திரமொன்று தட்சணம் சொல்லுக" என்ருன்.

பதிலில்லை.

என்ன லலிதா! நீ செய்த தப்பிதத்தையும் ஒரு பொருட்படுத்தாது நானுக வலுவில் பேசமுந்தியும், நீ பேசத்தொடங்காமலும், பதில் கூருமலும் ஏதோ ஒருவாருகவிருக்கின்றனையே! விவரமென்ன? ஏனிப்படியிருக்கவேண்டும்?

அதற்கும் பதிலில்லை.

திரும்பவும் கண்மணி! என்ன இவ்வளவு சாகஸம், எனது மொழிகள் உன் காதில் விழவில்லையா? விழுந்தும் பதிற் சொல்ல மனமில்லையா! ஏனித்தனை பிடிவாதம். விரைவில் உன் முத்தான வாய்திறந்து உத்தரஞ் சொல்லுக.

அதற்கும் பதிலில்லை:

மீண்டும், பிராணப்பிரியே! நீ இவ்வாறு மனம் வருந்த நான் செய்த பிழைதானென்ன? தெரிவித்தால் அதற்கொரு பரிகாரமும் மன்னிப்பும் தேடமாட்டேனே! என்று கூறி அவள்பக்கத்தடுத்துச் சமீபத்திருந்த வீணையை யொருபுறத்தொதுக்கி, அவள்மோவாய்க் கட்டையை மெதுவாகப்

பிடித்து அதில் ஒரு முத்தமொன்று வைத்தான். அதற்கவள் உடன்படாதவள்போல் அவன் கையை அப்புறந்தள்ளித் தன் கன்னத்தையும் ஒருபுறம் திருப்பிக்கொண்டனள்.

இதுகண்ட ஜமீன், இவள் கோபத்தின் தாபத்தை யுணராது இரண்டு நிமிஷம் ஆலோசித்து ஓ! ஓ !! மறந்தேன். கோபத்திற்குக் காரணமறிந்தேன். ஞாபகத்திற்கு வந்தது. என்று தனது சட்டப்பையிலிருந்து மெருகிட்டுப் பிரகாசிக்கின்ற புத்தம் புதிய மோகாமாலையை யெடுத்து அவள் அழகிய கழுத்திலணிந்து உன்கோபந் தணிந்தன்றோ ? இனித் தாராளமாய்ச் சம்பாஷிக்கலாமே என்றான்.

**லலிதா** :—தான் மனதிற்குள் சங்கற்பித்துக் கொண்டிருந்த வியாஜம் வெற்றிகொண்டதற்கு அந்தரங்கத்தில் அடங்கா மகிழ்ச்சி கொண்டாளெனினும், அதனை அத்தனை எளிதாக வெளிக்குக் காட்டக்கூடாதென நினைத்து, தனது கோபம் ஒருவாறு சிறிது தணிந்துள்ள தென்பதைமட்டும் காட்டவேண்டி, மந்தகாசந்தவழ்ந்த தனது அழகிய வதனத்தில் சிறிது புன்னகை புரிந்து பஞ்சரக்கிளி மழலை மிழற்றுவதுபோல் கொஞ்சி மொழிந்து, காமம் நிறைந்த மோகப் பார்வையில் என்னைத் தொடாதீர்கள், எட்டிப்போங்கள். எனக்கேன் மோகாமாலை, இந்நேரமிருந்து சரஸமொழிந்து சல்லாபஞ் செய்துவந்த அவளுக்குக் கொண்டணியுங்கள். என்று கழுத்திலிட்ட காசிமாலையைக் கழற்றத் தொடங்கினாள். மைனர் சட்டென அவள் கையைப் பிடித்துக்கொண்டு லலிதா ! என்ன அபாண்டம். அன்னியாயமாகப் பழி கூறுகின்றனையே ! இது உனக்கு நியாயமா ? என்றான்.

நியாயமில்லாமலென்ன ? நான் ஒரு காலமும் அநியாயமும், அபாண்டமுஞ் சொல்லுகின்றவளல்ல. உண்மையை ஒளிக்காமல் சொல்லும் சுபாவமுடையவள். இவ்வொருவருஷமாக என்னுடன் நெருங்கிப்பழகிய தாங்கள் இதனை உண

ராது போனது ஆச்சரியமே! இருக்கட்டும், நேற்றிரவு தாங்கள் இங்கிருந்து செல்லும்போது நாளை மாலை ஏழு மணிக்கெல்லாம் நான் வந்துவிடுவேன். நீ வீணைவாசித்துப் பாடிக்கேட்க ஆசைப்படுகிறேன் என்று உத்திரவிட்டுச் சென்றீர்களன்றோ? அதன்படியே நான் குறித்தகாலந் தவறாமல் வீணையுடன் பாடிக்கொண்டு தங்கள் வருகையை நாடிய வண்ணமாயிருந்தேன். சொல்லியபடி ஒன்பதடித்துப் பல நிமிஷங்களாகியும் வாதிருந்தீர்கள். இதனால், நான் எண்ணுவதென்ன? எட்டுமணிக்கெல்லாம் வழக்கம்போல் வருகிறவர் இன்றைக்கு இவ்வளவு நேரமாய் வாரமலும் சொன்னசொல் தவறி நிற்பதையும் உணரும்போது இதில் ஏதோ சூதிருப்பதாக நினைக்க அதில் கோபமேற்படுவது சகஜந்தானே! இக்காலத்தில் உண்மை யன்புடன் நடந்து கொள்பவரை யார் கவனிக்கிறார்கள்? என்றாள்.

காதலீ! நீ என்னென்னமோ பேசுகிறாயே! உண்மையை உணர்ந்தாயில்லை. நான் எதிர்பாராததும், நிராகரிக்கமுடியாததுமான சில அதிமுக்கிய அலுவல்கள் என்னை வந்து சூழ்ந்துகொண்டன. வேறு வழியில்லை. மிராசுதாரர்கள் நிலசம்பந்தமான சில வழக்குகளையும் முடிவுசெய்ய அவசரம் நேர்ந்தது. இவ்வேலைகளே எனது தாமதத்திற்குக் காரணம். நீ நினைக்கிறபடி ஒன்றுமேயில்லை.

**லலிதா** :—தாங்கள் சொல்வது முற்றும் உண்மைதானா? உறுதி கூறுவீர்களா?

**ஜமீன்** :—ஆம். முற்றும் உண்மையே, திருவுளமறியச் சொல்லுகிறேன்.

மோகனமாலை பெறுவதற்காகச் செய்த பொய் நடிப்பை மெய் நடிப்பாகக்காட்டி. ஜெயந்தேடியவகையில் லலிதா உள்ளுக்குள் மேலும் பேரானந்தங் கொண்டாள். பிரபுக்களின் அறியாமைக்குப் பரிகசித்தாள். காமுகர் அசட்டுத்

தன்மைக்கு அதிசயங்கொண்டாள். பின்னர் மைனர் மனம் ஆனந்தம் அடைவதற்கேற்ற சாகஸங்கள் எவ்வளவு வேண்டுமோ அவ்வளவும் நடித்துக்காட்டி மோகக் கடலுள் மூழ்க வைத்தாள். அதன்மேல் அவர்கள் நடந்துகொண்ட விவரங்களை இங்கு விவரிக்கவேண்டிய அவசியமில்லை.

# III

## உண்மையும், காதலும்

“ அன்போ டியைந்த வழக்கென்ப வாருயிர்க்
கென்போ டியைந்த தொடர்பு”

(திருக்குறள்)

பெரும்பதியின் வடக்கில் சுமார் ஐந்துமைல் தூரத்திலுள்ளது “மாவுத்தம்பதி”. இது குடித்தொகையிலும், ஜனத்தொகையிலும், நாகரீகத்திலும் பெரும்பதியைவிடச் சற்று தாழ்ந்திருந்தாலும் உழுதுண்போரும், உழுவித்துண்போருமாகிய வேளாளரை மிகுதியாய்த் தன்னுட்கொண்டு வாணிபத்தாற்சிறந்து செல்வத்தால் உயர்ந்து பெருமை பெற்றிருந்தது. அன்றியும்,

“ தள்ளா விளையுளுந் தக்காருந் தாழ்விலாச்
செல்வருஞ் சேர்வது நாடு”

என்னும் இலக்கியத்திற்கும் ஒருவாறு பொருந்தி மேம்பட்டு விளங்கியது. திருவின் கிழத்தியாகிய செந்திருமடந்தையும், பாவின் கிழத்தியாகிய நாமகள் நங்கையும், இம்மாவுத்தம்பதியைத் தமது நல்லிருக்கையாகக் கொண்டனரென்றால், இச்சீரூரின் சிறந்த நலம் எத்தகையதென்பதை நமது வாசகரே உணர்ந்து கொள்வாராக. திருவிலங்கிய இத்தகைய திருப்பதியினைச் சூழ்ந்து பல மாஞ்சோலைகளும், தென்னந்தோப்புகளும், வாழைத்தோட்டங்களும் எதேஷ்டமாய்

வளம்பெறவோங்கி நலம் பெற்றிருந்தன. இதனால் இப்பதி பின்னும் பேரழகுபெற்று நேத்திரானந்தத்தை விளைவித்துக் கொண்டிருந்தது. நஞ்சை நிலங்களோ கண்ணுக்கெட்டிய தூரம் ஒரே பரப்பாய்ப் பச்சைக்கம்பளம் விரிக்கப்பட்டிருப்பதுபோற் காணப்பட்டன. மலைப்பிரதேசமானதால் சிறுகுன்றுகளும் பள்ளத்தாக்குகளும், சிற்றாறுகளும் மிகுதியாயிருந்தன. மான்மரை முதலிய புல்வாய் மிருகங்களும், மயில், கிளி, காடை, நாகணவாய், முதலான இல்லுறைப் பறவையினங்களும் அப்படியே. மாலைப்போதில் உலாப்போவதற்கு வெகுரமணியமான இடங்கள் பல. இன்னும் புகழ்ந்து பேசுதற்குரிய இந்நற்பதியில் பாரம் பரியமான உயர்குடும்பஸ்தரும்; செல்வப் பெருக்கில் சிறந்து விளங்குபவரும் சீமான் பெரியவீட்டு "**முத்து வேலப்பர்.**" இவர் தம் அருங்குணச்செயலும், பெருங்குணத்தன்மையும், உதாரகுண நிதானமும், கல்வி மாட்சியும், கசடறமொழியும் வன்மையும், கருணையுருவும், அருள் பொழி விழியும்; புலவர் புகழ்ந்து கூறும் பெற்றியதாய்ச் சிறந்திருந்தன. கணக்கற்ற திரவியவான். இத்தகைய உத்தமருக்கு "**வேணுகோபலன்**" என்றோர் ஆண் மகனும், **குணசுந்தரம்**, என்னும் ஒருபெண்மணியும் மக்களாயுதித்திருந்தனர். வேணுகோபாலனோ! செல்வச்செருக்கினால் இளமையில் படியாமலே துஷ்டர் கூட்டுறவைமேற்கொண்டு, வீணேகெட்டு, அவமே நாள்கழியத் தந்தை மனம்நோவ நடந்துவந்தான். குணசுந்தரம் சிறுவயதிலேயே தனதுகடமையுணர்ந்து தந்தைதாயுரை கடவாது அவராணையை வேதவாக்காக மதித்து அச்சம், நாணம், மடம், பயிர்ப்பு என்னும் நிறைகுண நான்கையும் கவசமாகக் கொண்டு யாவர்க்கும் "**நல்லாள்**" என நடந்து வந்தாள். இளமை முதலாகக் கல்வியிற் கரைகடந்த காதல்மேற்கொண்டு இடைவிடாது அனவரதமும் வருந்திக்கற்று வந்ததினால்

"வித்யாவதி" "குணச்செல்வி" என்று எவரும் போற்றி புகழ்ந்துரைக்குமாறு பெயர் சிறந்தாள்; இவளது கல்வியழகைப்போலவே இவளது மெய்யழகும் சிறந்து விளங்கியது. மெல்லிய கொடி போன்ற தோற்றமும், வனப்பமைந்த வதனமும், அழகமைந்த அங்கமும், வியத்தற்குரிய விலோசனமும், பிறைபோன்ற நுதலும், வில்போன்ற புருவமும், வெகு மனோகரமாய்ப் பார்ப்போர் கண்களைப் பறிக்குந் தன்மைவாயிருந்தன. கருங்கற்சொல்லின் கைவல்ல சிற்பியொருவன் தன் திறம்பெறச் செதுக்கிய சுவர்ணபிம்பமெனத் திகழ்ந்தனள். ஆலம் விழுதுபோல் நீண்டு கருவனப்பமைந்து அழகிய குஞ்சி, முடிகுலைந்து பின்புறத்தில் சிறந்த இடைக்குக்கீழ் தொங்கிக்கொண்டிருந்த அழகை யாவரே வருணிக்க வல்லார்? அன்பு ததும்பிப்பொழியும் நோக்குடன் நீலமணி போன்ற நிறத்துடன் காதளவோடிய கண்கள் கருணை நிறைந்து பிரகாசித்துக்கொண்டிருந்தன. இளஞ்சிவப்பேறிய மெல்லிய உதடுகள், சிறிதசைவதினால் அவள் திறந்தவாய், வெள்ளிய முத்துக்கோர்வையினையொத்த பல்வரிசைகளோடு காணப்பட்டது. கண்டார் வியந்து காதலிக்கற்குரிய அவளது செம்பிர உருவத்தோற்றத்தைப் புகழ்ந்துகூறமுற்படும் கவிவல்லார், அழகின் அவதாரமென்றே முடிவை எழுத முற்படுவர். இத்தகைய பேரழகுவாய்ந்த குணசுந்தரம் தன்னுடனொத்த விஜயன் என்பவனுடன் நெருங்கிப்பழகி நேசம்பாராட்டிவந்தாள்; அவன் இவளுக்கு அத்தை மகன் உறவினன். குணசுந்தரம் மாளிகையிலேயே வளர்ந்தவன். இளமைமுதல் இவ்விருவர்களும் உடன்பிறந்த சகோதரர்கள்போல் ஒன்றுகூடிப் படிப்பிலும், புசிப்பிலும், ஏகோபித்து வளர்ந்து அன்பின் கொழுகொம்பெனச் சிறந்திருந்தனர். விஜயன் விஜயனாகவே விளங்கினான். இவன் இன்சொல்லும், எழில்நிறை அழகும், சீரிய ஒழுக்கமும், சிறந்த

கல்வியும், அன்பினுயர்வும், அடகத்தின்மேம்பாடும், பரிவின் குணமும், கருணைச்செயலும் ஆகிய உத்தம வழிகள் உயர்ந்தோரால் ஒருங்கே பாராட்டிப்புகழக்கூடியதாய்ச் சிறந்திருந்தன; இவ்வளவிலும் உயர்வுபெற்ற இவன் செல்வத்தில் மட்டும்வெகுவாகத் தாழ்ந்திருந்தான். செல்வமின்றேல் இவன் உயர்வு சிறவா தொழியுமன்றோ?

"அத்திட்ட கூறை யறைச்சுற்றி வாழினும்
பத்தெட் டுடைமை பலருள்ளும் பாடெய்து
மொத்த குடிப்பிறந்தக் கண்ணுமொன் றில்லாதார்
செத்த பிணத்திற் கடை"

"பிறந்த குலமாயும் பேராண்மை மாயுஞ்
சிறந்ததங் கல்வியு மாயுங்—கறங்கருவி
கன்மேற் கழூஉங் கணமலை நன்னாட!
வின்மை தழுவப்பட் பட்டார்க்கு"

என்ற உலகானுபவமும் உண்மை தானே! ஆனதால் இவன் அழகும், கல்வியும் பிறரால் புகழ்ந்துரைக்கும் பெற்றியின் பாற்படவில்லை.

ஆனால், குணசுந்தரம்மட்டும் ஆடவரிற்சிறந்த இவ்வாண்மகனைத் தனது இருதய கமலத்தின் வெகு மேலானவிடத்தில் வைத்துப் போற்றிவந்தாள். கற்றாரைக் கற்றார் காமுறுவது இயல்புதானே. குணசுந்தரம் தனது பதினைந்தாவது வயதில் புஷ்பவதியாய் மங்கைப் பருவமடைந்தாள். அதுமுதல் இந்துக்கள் ஆசாரப்படி வயது வந்த ஆண்பிள்ளைகளோடு சேர்ந்து பேசவும், நெருங்கிப் பழகவும் தடுக்கப்பட்டவளானாள். நிற்க.

மாவுத்தம்பதியிலேயே "மணவாளன்" என்றொருபிரபு பெருஞ்சீமானாய் வெகு செல்வத்தோடு வாழ்ந்து வந்தான். செல்வத்திற்குரிய தோற்றமும், அதற்கேற்ற நாகரிகமும், மற்ற நடை நொடிபாவனைகளும் இவனைச்சாராது ஒதுங்கி

யிருந்தன. இதற்குப் பேதைமையும், ஊழ்வினையுமே காரணமெனக்கூறவேண்டும். மணவாளன், இயற்கையிலேயே வெகு மந்தமானசுபாவத்தன். கல்வியறிவில்லாதவன். இத்தகையன் நாகரீகத்தை நாடுவதும், மேற்கொள்ளுவதும் எங்ஙனம்? செல்வமுள்ளவிடத்தில் கல்வியில்லா தொழிவது காட்சிப் பிரமாணமன்றோ!

"இருவே றுலகத்தியற்கை திருவேறு
தெள்ளிய ராதலும் வேறு"

என்பது பொய்யாமொழி. அன்றியும்,

பல்லான்ற கேள்விப் பயனுணர்வார் பாடழிந்
தல்ல லுழப்ப தறிதிரேற்—றொல்சிறப்பி
னாவின் கிழத்தி யுறைதலாற் சேராளே
பூவின் கிழத்தி புலர்ந்து.

எனவருஞ்சான்றும் இங்குக் கொள்ளத்தக்கன.

மணவாளன் தன்மை இவ்வாறிருந்தும், அழகிய குணசுந்தரத்தை விவாகஞ் செய்துகொள்வதில், அவன் மட்டற்ற ஆவலும், குன்றாமுயற்சியும் மேற்கொண்டிருந்தான். இரண்டொருதரம் குணசுந்தரத்தை மணமகளாகத்தரும்படி பெரிய வீட்டு முத்துவேலப்பர்பால், தக்காரைத் தூது போக்கினன்; அவரும் சிறிதுகாலஞ்சென்றபின் தெரிவிப்பதாக மறுமொழி கூறி அனுப்பினர். இவ்வாறு சில மாதங்கள் சென்றன. இடையிடையே வேணுகோபாலன் மட்டும் குணசுந்தரத்தை எவ்வகையிலும் மணவாளனுக்கு விவாக முடித்துவைப்பதாக வாக்களித்து அவனிடத்துப் பெரும் பொருள் பறித்து விருதா செலவு செய்துவந்தான். குணசுந்தரம் பருவமடைந்தநாள் முதலாக விஜயனைச்சந்திக்கவும், சந்தித்தாலும் முன்போலச் சல்லாபித்துச் சம்பாஷிக்கவும் இட மில்லா திருந்த தென்பதை முன்னரே கூறினோம். இப்படியும் சிலமாதங்கள் கழிந்தன. குணசுந்தரம் முன்னி

லும் இப்பொழுது பதின்மடங்கு பேரழகு பெற்று விளங்கினாள். இவளைக்கண்டாரெவரும், திருவோ! திருவின்செல்வமோ! கற்பகமோ! காமர் பூங்கொம்போ! காமரதித்தங்கையோ! மின்னற்கரசியோ! மேனகைச்செல்வியோ! என்று வியந்து புகழ்வர்.

இத்தகைய மங்கையர்க்கரசி சிலசமயம் தனது தந்தையின் அனுமதிபெற்றுத் தோழி கமலாவுடன் மாலைவேளையில் உலாவுதற்குத் தங்களுக்குச் சொந்தமாயுள்ள அழகிய பூங்காவிற்கு வருவாள். சிலசமயம் விஜயனும் அங்கு வந்துபோவான். ஒரு நாள் குணசுந்தரம்மட்டும் தனியாக அச்சிங்காரத் தோட்டத்தில் ஒரு இடத்தில் போடப்பட்டிருந்த நல்லாசனமொன்றில், அழகுபெறவீற்று மேற்குத்திசையில் அஸ்தமிக்கும் மாலைச்சூரியன் செங்கிரணங்களின் மின்னொளியையும், மேககூட்டத்திற்காலும் பலவித உருவத் தோற்றங்களையும் மலைச்சிகரங்களின் உன்னதக்காட்சிகளையும், பிரமசிருஷ்டியின் இயற்கைநலங்களையும்கூர்ந்து கவனித்துக்கொண்டிருந்தாள். பறவையினங்கள் சல்லாபமாய் இனிய தொனியோடு கூவித் தன்னிருக்கை நாடிச்செல்வதைக்கண்டு களித்தும், அன்புடன் ஆணும் பெண்ணுங்கூடி மகிழ்வதை நோக்கிக் காதலித்தும், கருணாநிதியாகிய கடவுளின் அற்புத சிருஷ்டியின் அபார மகிமையைக் கொண்டாடி மகிழ்ந்து வியந்து கொண்டிருக்கையில், விஜயம் திடீரென அங்குத்தோன்றி குணசுந்தரம்! இதென்ன நீ இங்கு தனித்து வீற்றிருந்து எதனையோ கூர்ந்து கவனிப்பதும், வியப்பதும் மகிழ்வதுமாய் இருந்துகொண்டிருக்கிறாய். தோழி கமலா! இன்று உன்னோடு துணைவரவில்லையா! என்றான்.

குண:—அவள் வரவில்லை. என்னமோ இன்று வீட்டில் வேலை அதிகமென்றும், விரைவில்வருவதாகவுஞ் சொன்னாள்.

**விஜயம்** :—குணசுந்தரம்! நீ இதற்குமுன் எதையோ குறித்து ஆலோசித்துக்கொண்டிருந்தனையே! அதை என்னிடத்துக் கூறக்கூடாதா!

குண :—ஒன்றுமில்லை. ஈஸ்வரசிருஷ்டியின் தோற்றத்தில் காணப்படுகின்ற இயற்கையரசியின் எழில் நலங்களைக் கண்டு அவைகளின் அபாரமகிமைக்கு வியந்துகொண்டிருந்தேன்.

**விஜயம்** :—குணசுந்தரம்! இயற்கையரசியின் எழில் நலங்களைக்கண்டு மகிழ்வதும், கருணாநிதியாகிய கடவுள் அற்புத சிருஷ்டிகளின் அதிசயங்களைக் கண்டு வியப்பதும், உன் போன்ற நுண்ணறிவுடைய மாதராரேயன்றிக் கண்ணிருந்தும் குருடராய அறிவிலாப் பேதையர்களறியார்கள்.

குண :—என்னை அறிவுடையாள் என்றும், உயர்வுடையாள் என்றும்,பெருமைப்படுத்திக்கூறவந்தது என்பாலுள்ள அன்பின் மிகுதிபற்றியன்றி, உள்ளபடி அவ்வுயர்ச்சிக்கு நான் உரியவளல்ல.

**விஜயம்** :—அதிருக்கட்டும். வேணுகோபாலன் உன்னை மணவாளப்பிரபுவுக்கு மணஞ்செய்து தருவதாக வாக்களித்திருப்பதாகக் கேள்விப்பட்டேன். அது உண்மைதானா?

குண :—அதென்னமோ! நானறியேன்.

**விஜயம்** :—சுக்கறியாத கஷாயமா! என்பதுபோல உன் சம்மதம் அறியாமலா! உன் தமையன் அவருக்கு வதுவை செய்து தருவதாக வாக்களித்திருப்பான்.

குண :—என் அறிவு என் சுவாதீனத்திலில்லாதிருக்குமானல்: நான் மணவாளனை மணஞ்செய்து கொள்வதாக வாக்களித்திருக்கக்கூடும்.

**விஜயம்** :—ஆனல் நீ யாரை மணஞ்செய்துகொள்வதாகத் தீர்மானித்துக்கொண்டிருக்கிறாய்?

குண :—அதைப்பற்றி உமக்கேன் விசாரம்?

விஜயம் :—என்னமோ தெரிந்துகொள்ளலாமென்ற ஆவல் தவிர வேறொன்றுமில்லை.

குண :—தெரிந்துகொண்டு நீர் செய்வதென்ன?

விஜயம் :—செய்வது ஏதாவதிருக்கும்.

குண :—அது இன்னதெனச் சொல்லக்கூடாதா?

விஜயம் :—சொல்லித்தானாக வேண்டுமோ! ஆனால், நான் சொல்லக்கூடிய விஷயம் என் நிலைமைக்குச் சற்றுமீறியிருப்பதால் அதை உன்னிடத்துச் சொல்வதற்கு அஞ்சுகின்றேன்.

குண :—என்னிடத்து இளமை முதல் நன்றாய்ப்பழகி என் குணநிசயத்தையும், கொள்கையையும் நன்குணர்ந்திருந்தும் உமது சொந்த அபிப்பிராயத்தை என்னோடு சொல்ல அஞ்சுவதற்கு நான் அதிசயிக்கிறேன்.

விஜயம் :—இளமைமுதல் உன்னோடு பழகி உறவு கொண்டு உன் அருமை பெருமைகளை நான் உணர்ந்திருந்தாலும், இப்பொருளுலகத்தில் உயர்வையும், உன்னதஸ்திதியையும் உத்தேசித்தே நட்பின்தன்மை சிறப்படைகின்றது. அந்த வகையை நினைந்து சற்றுத் தயங்கவேண்டியிருக்கிறது.

குண :—நீர் கூறுவது முற்றும் உண்மையே. என்றாலும் நான் பொருளையும், போகத்தையும் விரும்புகின்ற பேதைப் பெண்ணல்ல;

“ அறுசுவை யுண்டி யமர்ந்தில்லா ளூட்ட
மறுசிகை நீக்கி யுண்டாரும்—வறிஞராய்ச்
சென்றிரப்பர் ”

“ யானை யெருத்தம் பொலியக் குடைநிழற்கீழ்ச்
சேனைத் தலைவராய்ச் சென்றோரு—மேனை
வினையுலப்ப வேறாகி வீழ்வர் ”

எனவரும் அநுபவம் நிறைந்த அறவுரைகளை நன்குணர்ந்த அறிஞரும் பொருளைப் பொருள் படுத்துவரோ! மனிதர்

என்பார்க்கு இருக்கவேண்டிய அருங்குணங்கள். கல்வி, ஈகை, அன்பு, கருணை, குலம், குடிப்பிறப்பு முதலிய உத்தமச் செயல்கள். இவைகளை உடைமையாகக்கொண்டவர்களைத் தான் நான் உத்தமராகக் கருதி மதிப்பது.

**விஜயம்** :—அங்ஙனமாயின் உன்கொள்கை வெகுநன்று. உன் பெருந்தன்மைக்கு அனந்தகோடி வந்தனம். என்னுள்ளத்தில் நெடு நாளாகக் குடிகொண்டு என் மனத்தைப் பெரிதும் வருத்திவருகின்றதொன்றுண்டு. அது காதல் என்னும் பொருள்பெறும். அத்தெய்வவரத்தை உன்மூலகமாகப்பெற்றுப் பெருவாழ்வு கொள்ளக்கருதுகின்றேன். எனது வேண்டுதலையேற்று எனக்குகந்த மனைவியாகுவையோ! என்று வெகு உருக்கத்துடன் வினவினன்.

**குண** :—அன்பு ததும்பிய விஜயனின் உருக்கமான வேண்டுகோளைக்கேட்ட குணசுந்தரம், உள்ளுக்குள் வெகுவாகமகிழ்ந்தனளேனும், அதனை வெளிக்குத்தோற்றுவிக்காமல், மௌனம் அரைச்சம்மதம் என்பதை மேற்கொண்டு வாளாவிருந்தாள்.

**விஜயம்** :—குணசுந்தரம்! என்ன எனது வேண்டுகோளைக்கேட்டு ஏதுங்கூறுமல் மௌன விரதமேற்கொண்டனை! என் நிலைமைக்கு நான் கேட்டது கர்வம் கொண்டதாகக் காட்டுகிறதா? அல்லது அன்பு பெருகி நாணங்கொண்டனையா? சற்று தலையுயர்த்தி என்னைப்பார்! உன்நேத்திரங்களிலிருந்து கண்டுக்கொள்ளுகிறேன் என்ன, குணசுந்தரம் தலையுயர்த்தி முகமலர்ந்து புன்னகை புரிந்தனள். அவள்முகம் வசந்த காலத்தலர்கின்ற தாமரை நாண்மலரையொத்தது; நாணத்தால் அவள் முகம் சிவந்ததேனும் மறு நிமிஷத்தில் கார்காலத்து மேகம்போல் மாறிற்று.

குண :—என் அன்பின் அமுதே! நீ மனதில் கொண்டுள்ள கவலையொழி. வெகுகாலத்திற்கு முன்னரே என்

மனத்தில் உன்னையே என் அன்பின் காதலனாகக்கொண்டு விட்டேன். என் உறுதியை இனி எவராலும் அசைக்கமுடியாது ; இன்னுங்கேள், என்னுயிர் என் தேகத்திலிருக்கும் வரை கோடீச்சுரப் பிரபுவா யிருந்தாலும், மன்மதனே மானிடகோலம் பூண்டு மாலையிடவந்தாலும் சம்மதியேன். உன்னையன்றி என் உண்மைக் குரிய அன்பன் இவ்வுலகத்தில் யாருமேயில்லை ; உலகத்திலுள்ள எல்லாப் பொருள்களிலும் நீயே உயர்ந்தவன், உன் பட்சமுள்ள அன்பு ஒன்றேயெனக்கு வேண்டத்தக்கது. இது சத்தியம். முக்காலும் நம்பு. என்று அவனை மார்புற இருகத்தழுவி முத்தமிட்டாள் ; அவனும் ஆகமுற நன்குதழுவி அவள் மெய்யன்பிலும் மேலன்பாக இனிய முத்தமொன்றை அவள் இதழில் பொருத்தினன். கலப்பற்ற காதலும், உருக்கமுள்ள அன்பும் அவர்கள் இருதயத்தில் ஊடுருவிப்பரவியது. சிறிது நேரம் இருவரும் ஆனந்த சாகரத்தில் மிதந்தனர் ; இச்சமயத்தில் அருகிலுள்ள பூங்காவினின்றும் யாரோ வருவதாகச் செடிகளின் அசைவினல் தெரிந்தது. இருவரும் சட்டெனப்பிரிந்து விலகிநின்றனர். இதற்குள் வேணுகோபாலனும் சமீபித்தான். சமீபித்தவன் குணசுந்தரத்தை நோக்கி நீ இங்கென்னசெய்துகொண்டிருக்கிறாய் என்றான்.

குண :—ஒன்றும் செய்யவில்லை; பொழுது போக்கிற்காகச் சற்று உலாவ இங்கு வந்தேன். தோழி கமலா சற்று நேரத்திற்குள் வருகிறேன். இங்கேயே இருக்கவும். என்று சொல்லிப்போனாள். அவள் வரவிற்காகக் காத்துக்கொண்டிருக்கிறேன். என்றாள்.

வேணுகோபாலன் :—குணசுந்தரம் ! விஜயனேன் இங்கு நிற்கவேண்டும்? ஒரு தனியிடத்தில் வயதுவந்த பெண்ணொருவள் தோழியின் சகாயமின்றித் தனித்திருக்கும்போது ஓர் ஆடவன் வரக்கூடுமா ?

குண :—அவராக வரவில்லை. உலாவுதற்காக இந்தவழியாகச்சற்று தூரத்தில் விரைவாகச் சென்றுகொண்டிருந்தனர். நானுகவே கையசைத்து அவரை இங்கு அழைத்தேன்.

வேணு :—வயது வந்த நீ ஒரு ஆடவனை வலுவில் தனியிடத்துக்கு அழைக்கக்கூடுமா !

குண :—சிறுவயதுமுதல் ஒரேயிடத்தில் கல்விகற்றும், ஒருசேரவிளையாடியும், ஒருதாய் வயற்றுப்பிள்ளைகள் போல் வேற்றுமையின்றிப் பழகியும், உறவுகொண்ட நேசத்தால் அழைத்தேன். மற்ருேர் ஆடவனை இங்ஙனம் அழைக்கத் துணிவனே !

வேணு :—இனி மறந்தும் இவ்வித காரியங்களைச்செய்ய முற்படாதே ! கவனமிருக்கட்டும். சரி புறப்படு. மாலைச் சூரியன் அஸ்தகிரியில் வீழ்ந்தான்.

குண :—நல்லறிவும், சுயபுத்தியும் சொந்தமாயுள்ள எனக்குத் தாம் ஒன்றும் போதிக்கவேண்டுவதில்லை. நமது முன்ருேர் சுயமரியாதையை நன்கு காப்பாற்ற வேண்டுமென்ற கவலை என்மனதில் அழுந்தப்பதிந்திருக்கிறது.

வேணு :—அங்ஙனமாயின், வெகு நல்லதுதான். இருட்டுகிறது புறப்படு. வீட்டுக்குச்செல்வோம் என, சரியென்று குணசுந்தரம் சம்மதிக்க, மூவரும் வீடுநோக்கிச்சென்றனர்.

# IV

## துஷ்டர் துராலோசனை

"உறுவது சீர்தூக்கு நட்பும் பெறுவது
கொள்வாருங் கள்வரு நேர்"

முதல் அத்தியாயத்தில் ஜமீன் குழந்தை வேலப்பனுடன் சம்பாஷித்துக்கொண்டிருந்து விட்டு விரைவில் திரும்பி வருவதாகச் சொல்லிச் சென்ற மாதவன், கோவிந்தன் என்ற இருவரும் யாவர்? அவர்கள் சென்றகாரியம் என்னவாயிற்று? என்பதைப்பற்றிச் சிறிது கவனிப்போம். "தீயார் சொற் கேட்பதுவுந் தீது, அவர்கள் குணங்களுரைப்பதுவுந் தீது" ஆனதால், அவர்கள் குணக் கேட்டையும், தீயசெயலையும் இங்கு விவரிப்பது அரிய காலக்கழிவும், வீண் சிரமுமேயாம். ஜமீன் அரண்மனையில் கணக்கு மணியக்காரர்களுக்கும், அவர்களுக்கும், சில நிமிஷங்கள் நடந்த சம்பாஷணைகளினாலேயே வாசகர்கள் அவர்கள் யோக்யதையை நன்கு அறிந்துகொண்டிருக்கலாம். ஆனதுபற்றிக் கூறவேண்டாம். எனினும், அத்தீயோர் சூழ்ச்சியினின்றும் நல்லோரை விலகி நிற்கச் செய்யவேண்டுவது அறிஞர் கடமை யானதாலும், கதைத் தொடர்ச்சிக்கு அவர்கள் செயல் காரணமாகக் காண்பதாலும் அத்தீயோர் செயலைச் சிறிதே விளக்கத் துணிந்தமென்க.

"மூர்க்கரை மூர்க்கர் முகப்பர்" "வேம்பன்றோ காக்கை விரும்புங் கனி" என்னும் முதுமொழிப்படி மாதவனும் கோ

விந்தனும் துஷ்டமித்திரனாகிய வரதராஜன் வீடுதேடிச்சென்றார்கள். அத்துஷ்டன்வீடு அவ்வூரின் தென்கோடியில், ஒரு முடுக்கிலுள்ள சந்தின் கடைசியிலிருந்தது. கூரைவேய்ந்த அவ்வீடு இருகொட்டடிகளையும், சிறு கூடம் ஒன்றையும் உடைத்தாயிருந்தன. அதில் அவன் காலங்கழித்து வந்தான். உள்ளிக்கி மரிக்கொழுந்தெனப் பெயர் சூட்டி அதன் மீது பனிநீருந்தெளித்தாற்போல் அபய வரதனாகிய திருமாலின் திருப்பெயரை இவன் வகித்தது வருந்தக்கூடியதே. குடிகெடுப்பதும், கூட்டிக்கொடுப்பதும், சூதாடுவதும், களவு செய்வதும், குடிப்பதுமே இவனது தொழில்கள். இவைகளினால் வரும் ஊதியத்தால் இவனும் இவனது வைப்பு நாயகியும், வயறு வளர்த்து வருவர். இத்தகைய அந்தஸ்திலுள்ள வரதராஜனை மாதவனும், கோவிந்தனும் தேடி வந்தனரென்றால், இவர்கள் யோக்யதையும், குணமும் இவர்கள் கொண்டுள்ள நோக்கமும் எத்தகையதென்பதைச்சொல்லவும் வேண்டுமோ!

இனி இவர்களுள் நடந்த சம்பாஷணையைக் கவனிப்போம். வந்த இருவரில் மாதவன்,வீட்டுத் தலைவாயிலிருந்தபடி வரதராஜா! என்று கூப்பிட்டான். உள்ளிருந்த அவன் யாரது என்று கேட்டான். நான்தான் மாதவன் என்று பதில் கூற, வரதராஜன் சட்டென்று வெளியில்வந்து பார்க்க, மாதவனும் கோவிந்தனும் நிற்பதைக்கண்டு பிரியமுள்ள சிநேகிதர்களே! வாருங்கள்! வாருங்கள்!! என்று அவர்களுக்கு முகமன் கூறி உள்ளே அழைத்துச் சென்று அவர்களுக்குவேண்டிய உபசாரஞ் செய்து விரித்த பாயொன்றில் இருத்தினான். சிறிது நேரம் க்ஷேமலாபங்களைப் பேசிவிட்டு மாதவன் வரதராஜனை நோக்கி நண்பரே,நாங்கள் இங்கு வந்தகாரியம் இன்னதெனத் தாம் முன்னமே அறிந்திருப்பீரென்று நம்புகிறோம்.

வரதராஜன் :—என்ன! ஜமீன் மைனர் விஷயந்தானே.

மாத :—ஆம்.

வரத :—அதற்கென்ன ஆலோசிப்போம்.

மாத :—என்ன ஆலோசிப்பது. பிரமாதகாரியம். தலைபோய் விடுமா?

வரத :—அப்படியல்ல. நீர் ரொம்பவும் அவசரப்படுகிறீர். பெரிய வீட்டுவிஷயம். நன்றாக ஆலோசித்தே செய்யவேண்டும். மாட்டிக்கொண்டால் உபத்திரவம். நாமெல்லாம் கண்டிப்பாக ஜெயில் சேரவேண்டியதாய் ஏற்படும்.

கோவி :—மாமா! வரதராஜன் சொல்வது வாஸ்தவமே. எக்காரியத்தையும் தீர்க்கமாக நினைத்தே செய்யவேண்டும். அவசரப்பட்டால் காரியங்கெட்டுவிடும். பதறாதே பொறு.

மாத :—சரி நன்றாக ஆலோசியுங்கள்.

வரத :—ஆலோசிப்பதிருக்கட்டும். நாம் முடிக்கவேண்டிய காரியம் வெகு சிரமப்பட்டு உயிரையும், திரணமாக மதித்துச் செய்யவேண்டும். அப்படிச்செய்வதினால் நமக்கேற்படும் ஆதாயமென்ன? அதை முதலில் நன்றாகத் தீர்மானித்துக் கொண்டீர்களா? காரியம் முடிந்தபின் விழிப்பது விவேகமல்ல. காற்றுள்ளபோதே தூற்றிக்கொள்ளவேண்டும்.

கோவி :—அந்தவகையில் நாங்கள் சிறிதும் ஏமாறமாட்டோம். அதுவிஷயத்தில் ஐயமுங்கொள்ளவேண்டுவதில்லை. காரியமட்டும் நன்றாக முடிந்துவிட்டால் உத்தேசிக்கிற தொகையைப் பெற்றுவிடலாம். ஜமீனர் விடலை, மேலும் சாமி, டாம்பீகன். பணத்தை லட்சியஞ்செய்கிறவனல்ல. லலிதாவிலும் சிறந்த அழகியாயிருந்துவிட்டாலோ! பணத்தை ஆயிரமாயிரமாக அட்டைபோல் உறிஞ்சிவிடலாம்.

மாத :—இந்த ஒருவருஷத்திற்குள் லலிதாவுக்கு 30 ஆயிரம் ரூபாய்வரையுங் கொடுத்துவிட்டான். அபாரசெலவாளி. வெறும் வாய்ப்பேச்சிலே நாங்கள் இதுவரையும் 1,000 ரூபாய் சம்பாதித்து விட்டோம். இதைவிட இதற்கு என்ன அத்தாட்சி வேண்டும்.

**வரத :**—ஆயின், மெத்த சந்தோஷம். நண்பர்களே! நான் உங்களைக் காலை 11-மணிக்கு வரச்சொன்னது என்னத் திற்கென்றால், கும்பகோணத்திலிருந்து அழகிய பெண்மணி ஒருத்தி வந்திருக்கிறாள். அவள் அய்யங்கார் வகுப்பு. வயது சுமார் பதினெட்டிருக்கும். சமீபத்தில்தான் கணவனை யிழந்ததாகத் தெரிகிறது. நல்ல ரூபம், ஆனால், வலது முழங்கையில் மணிக்கட்டு வரையும் நெருப்புப்பட்டு புண் ணாகித் தழும்பேறிப் பார்க்கச் சற்று விகாரமாயிருக்கி றது. இது தவிர வேறுவகையில் ஒருகுற்றமும் சொல்வதற் கில்லை.

**மாத :**—இவ்விகாரத்திற்குத்தானா? எங்களை வரச்சொன் னது. இம்மாதிரிப் பெண்கள் வேண்டியபேர்களை நாங்களே சம்பாதித்து விடுவோம். தாங்கள் ஏதோ பிரமாதமாகப் பேசியதில் அரிய பெரிய காரியமாயிருக்குமென்று மயங்கி விட்டோம். இச்சாமானியத்திற்கு நாம் துன்பப்படவும், சிறைக்காளாகவும், வேண்டியதில்லையே என்றான்.

**வரத :**—சலித்துக்கொள்ளாதீர்கள். உமது கருத்தென் னவென்பதைக் கவனித்தேன். உமது மைனருக்கேற்ற மங்கையும், நமது வருவாயின் அதிஷ்ட தேவதையையும் பற்றிக் கூறுகின்றேன். கேட்பீராக? இவ்வூருக்கு ஐந்தாவது மைலிலுள்ள மாவுத்தம்பதியில் பிரபல சீமான் பெரியவீட்டு முத்துவேலப்பரைப்பற்றிக் கேள்விப்பட்டதுண்டா? அவர் குமாரத்தி அருங்குணச் செல்வி "**குணசுந்தரம்**" என்னும் விண்ணவர்க்கரசியைப்பற்றியே நான் குறிப்பிட்டது. இவ ளது குணம், குலம், அழகு, அமைப்பு, வடிவு, இவைகளைப் பற்றி அற்பர்களாகிய நாம் வருணிக்கக்கூடிய அருகதை யுள்ளவர்களல்ல. அது கற்றுவல்ல கவிஞர்களுக்கே சொந் தம். இன்னும் விவாகமில்லை. வயது பதினாறு. ஆனால், அப் பெண்ணரசியை எவ்விதம் கவர்ந்து செல்வதென்பதுதான்

பெருத்த யோசனை. அதனைத்தான் உங்களோடு கலக்கவும் ஆலோசித்துப் பேசவும் வரச்சொன்னது.

**மாத :**—குணசுந்தரம் வீட்டைவிட்டு வெளியில் வருவதில்லையோ?

**வரத :**—வராமலென்ன? மாலைவேளைகளில் உலாவுவதற்காகத் தங்களுக்குச் சொந்தமாயுள்ள சிங்காரத் தோட்டத்திற்கு வருகிறாள்.

**மாத :**—வருவதானால் தன்னந்தனியாகவா? மற்றும் யாரோடேனும் சேர்ந்தா?

**வரத :**—ஆண் துணையில்லை. அவள் உயிர்த்தோழி கமலத்தோடு வருகிறாள். சிலசமயங்களில் அவள் அத்தைமகன் விஜயனும் உடன் வருவதாகக் கேள்வி.

**மாத :**—நல்லது, இதற்கு நான் ஒரு தந்திரம் சொல்லுகிறேன். அந்தப்படி செய்தால் நாம் நினைத்தகாரியம் வெகு எளிதில் நிறைவேறிவிடும், அதிகமும் சிரமப்படவேண்டுவதில்லை.

**வரத :**—அத்தந்திரந்தானென்ன? விளங்கவுரையுமே.

**மாத :**—நீர் நினைக்கிறபடி குணசுந்தரத்தைக்கண்டு சம்பாஷிக்கவும் வேண்டாம். சம்மதிக்கச் செய்யவும்வேண்டாம். விரைவாக ஓடக்கூடிய ஒரு மோட்டார் வண்டியும், ஒரு துணிப்பந்தும் ஆகிய இரண்டுசாதனங்களைத் தயார்செய்து கொண்டு குணசுந்தரம் உலாவ வரும் தோட்டத்தின் அருகில் வண்டியை ஒரு மறைவிடத்தில் நிறுத்திவிட்டு இரண்டொருவர் செடிகளின் மருங்கில் பதுங்கிக்கொண்டு தோழி ஏதேனும் காரியார்த்தமாக அகலும் சமயம் பார்த்திருந்து உடனே பருந்து கோழிக்குஞ்சைத் தாவித் தூக்கிச்செல்வது போல் அவள் வாயில் பந்தை வைத்தடைத்துத் தூக்கிக் கொண்டு வந்துவிடவேண்டும்.

**வரத :**—இது ஒருநல்ல தந்திரந்தான். ஆனால் சௌகரியப் படவேண்டும் ?

**மாத :**—சௌகரியப்படாமலென்ன ? முயன்றால் முடியாமற்போகாது. இக்காரியத்தை நானே செய்து முடிக்கிறேன். நீங்கள் நான் தெரிவித்த சாதனங்களை மட்டும் தேடிக்கொடுத்தால் போதுமானது.

**வரத :**—தேடித் தருகிறோம், ஆனால், இதுவிவரங்களை யெல்லாம் மைனருக்கு அறிவிக்கவேண்டாமா ?

**கோவி :**—அவசியம் அறிவிக்கவேண்டும். அறிவித்து ஒரு மோட்டார்வண்டியும்குணசுந்தரத்தைப் பத்திரப்படுத்தி வைப்பதற்கு ஒரு தனிவீடும், ஆபத்து நேர்ந்தால் தப்பித்துக் கொள்வதற்குச் சில ஆட்களும், ஆயுதங்களும், வழிச் செலவுக்குச் சிறு தொகையும், தயார்செய்து கொண்டுதான் இக்காரியத்தில் இறங்கவேண்டும்.

**வரத :**—நியாயந்தான். இவ்விவரங்களை மைனருக்குச்சென்றறிவித்து அவர் சம்மதம் பெற்று வேண்டுகாரியங்களுடன் வாருங்கள். இரண்டொருநாளையில் அமாவாசையும் வருகிறது. நல்ல இருட்டு. அந்தக்காலத்தில் இந்தக்காரியத்தைச் செய்துமுடிப்பது வெகு சுலபம்.

**கோவி :**—அப்படியே செய்துக்கொண்டுவருகிறோம். என்று மாதவனும், கோவிந்தனும் வரதராஜனிடத்தில் விடை பெற்றுக் கொண்டுமைனர் அரண்மனையை நாடினர்.

V

## மணவாளன் பகற் கனவு

*அறிவுடையா ரெல்லா முடையா ரறிவிலா*
*ரென்னுடைய ரேனு மிலர்.*

(திருக்குறள்)

சென்ற அத்தியாயத்தில் மணவாளனைப்பற்றி ஒரு சிறிது கூறியது வாசகர்கட்கு ஞாபகத்திலிருக்கலாம். அதிற் கூறியதுபோக எஞ்சிய விஷயங்களை விளக்குவது அவசியமானது. அதனை இங்குக் கூறத்தொடங்குகிறோம். '**மணவாளன்**' என்பவன், மாவுத்தம்பதியிலுள்ள பிரபுக்களில் சிறந்த சீமான். மிராசுபாத்தியத்திலும் மிக்குயர்ந்தவன். பொன் விளையும் புதுமையுடைய போகபூமிகளை ஏராளமாகவுடையவன். இன்னும் பலவிருந்தென்ன? கல்வியும்; அதனையொட்டிய அறிவும், நாகரிகமும் இல்லையென்றால், அச்செல்வத்தாலடையும் பயனென்ன? மணவாளன் செல்வவந்தன் வீட்டுப்பிள்ளையானதால், கல்வியைக் கருதிக் கற்க நினைத்திலன் போலும். தந்தை கர்நாடக மனுஷராயிருந்ததால் தன்னைப் படிக்கவைக்கத் தவறியிருக்கலாம். தன்னறிவு தனக்கு வந்தபின், கல்வியைக் கவனமுடன் கற்கவேண்டியது யாருடைய பொறுப்பு? மணவாளனதன்றோ! ஒருவன் உயர்வதற்கும், ஒழுக்கமடைவதற்கும் கல்வியன்றோ வழிகாட்டி. அதனைச் சிந்திக்கவில்லையென்றால், மணவாளன்

எத்தகைய மடமையையும் உலகியலையும் உணராதவன் ஆகின்ருன்; பெருஞ்செல்வமிருப்பதினுலேயோ கல்வியைக் கற்கக் கூடாதென்பது கருத்தா? அச்செல்வங்கள் சிதறுண்டு போகாமலும், மேலும் பெருகிப் பலவகையிலும் சிறப்பதற்கும், கல்வியன்ருே அத்தியாவசியமானது. இதனைத் தனவந்தரும், அவர் வீட்டுச் செல்வப்பிள்ளைகளும் கவனிக்கின்ருர்களில்லை. பூர்வ புண்ணியவசத்தால் தங்கட்குக் கிடைக்கப்பெற்ற நிலையற்ற செல்வத்திற்குச் சிறிது காலம் அதிகாரிகளாக ஏற்படுவதினுலேயே நன்மார்க்கத்திற்குரிய பல அம்சங்களும் தங்களை வந்து அடைந்துவிட்டதாக அபிப்பிராயம்போலும், 'திருவேறு தெள்ளியராதலும் வேறு' என்பதை இவர்கள் அறியாதொழிந்ததற்கு நாம் வருந்துகிருேம், இந்த வகையைச் சேர்ந்தவர்களில் மணவாளனும் ஒருவன். இவனுக்கு இப்பொழுது வயது 25. பிரபுவீட்டுப் பிள்ளையானதால் போஷணைக்குக் குறைவின்றித் தேகம் நல்லபுஷ்டியடைந்திருந்தது. அநாகரிகமும், மடமையும் மேற்கொண்டிருந்ததால் செல்வவந்தர்க்குரிய சிறப்புக்களொன்றும் செய்துகொள்வதற்கு அறியாதவனுயிருந்தான். இதனுல் இவன் நாகரிகவாசிகளின் நோட்டத்திற்கு உரிமையற்றவனுமொழிந்தது வியப்பல்ல. எப்பொழுது ஒருவனுக்கு நாகரிகம் என்னும் போர்வையில்லையோ, அப்பொழுதே அவன் பலரால் விரும்பப்படாதவனுவது சகஜம். மணவாளன் சீமான் வீட்டுப் பிள்ளையானதால் பந்துக்கள் பலர் நான், நீ யென்று பெண்தரப் போட்டிகொண்டு முன்வந்தனர். "உண்டானபோது கோடானகோடி உறன்முறையார்—தொண்டாடித்தொழுது நிற்பார்" என்பது உலகியல்பன்ருே! தாய் தந்தையர்க்கும், பந்துகட்கும் சம்பந்தம் வைத்துக்கொள்வதில் சம்மதந்தான். மணவாளனுக்குமட்டும் இஷ்டமில்லை. என்? திருவும் கல்வியும் சிறந்து அழகே ஒரு

யாடுகொண்டு, நெருங்கிய உரிமையும் உறவுமுள்ள பெரிய விட்டு முத்துவேலப்பர் அருங்குமாரத்தி குணசுந்தரத்தை நினைத்திருக்கும்போது, வேறு சாமான்யப் பெண்களை மணக்க விரும்புவரோ? மேலும், குணம், குலம், பணம், மணம், அழகு, அந்தஸ்து முதலிய எல்லா விஷயங்களிலும் சிறந்து விளங்கும் ஒரு குடும்பத்தில் பெண்கொள்வதில் எவர்க்கும் பிரியமேற்படுவது சகஜமே. அறிவும், அழகும் இல்லாதொழியினும், ஆசையென்பது எவர்க்கும் பொதுவன்றோ! மணவாளன் சமயநேர்ந்தபோதெல்லாம் முத்துவேலப்பரிடம் தக்காரைத் தூது போக்கி முகூர்த்த விஷயத்தை நிச்சயித்து வரும்படி செய்துவந்தான். அவரும் பதிவுபோல் பொய்ப்புறமாகப்பதில் அனுப்பிவந்தார். இங்ஙனம் நாள் பல கடந்தன.

வேணுகோபாலன் மட்டும் தன் தங்கையை மணவாளனுக்கு வதுவை செய்து தருவதாக உறுதிவாக்களித்து வந்தான். இது ஒருவகையில் மணவாளனுக்கு ஆறுதலையும், நம்பிக்கையும் தந்துவந்தன. மணவாளன் ஆறுதலடையும் போதெல்லாம் வேணுகோபாலன் ஆதாயத்தையடைந்துவந்தான். அவ்வாதாயம் தன் தங்கையைத் தருவதற்காகப் பெறும் பரிசுத்தொகையேயாம். இங்ஙனம் பெறும்பணத்தையெல்லாம் வேணுகோபாலன் தாசி, வேசிகளுக்கும், துஷ்டர் கூட்டுறவுக்குமாக வீணே விரயஞ்செய்து வந்தான். வேணுகோபாலன் கேட்கும்போதெல்லாம் மணவாளன் பணம்கொடுக்கத் தவறினானில்லை. தன் காதலுக்கே ஓர் பேராதரவாக விளங்கும் காந்தாமணி, குணசுந்தரத்தைத் தனக்கு மனைவியாகச் செய்யவல்ல ஓர் மகோபகாரிக்குக் கேவலம் சிறிது பொருள் தருவது பெரியகாரியமாகக்கருதுவரோ? விஷயத்தைப் பகுத்தறியுங் குணமும், அயலான் நோக்கத்தைக்கண்டுணரும் சக்தியும், அறிவுடையானுக்கன்றோ சொந்தம். அவ்வறிவு

கல்வியாலன்றோ வரவேண்டும். அஃதில்லாத மணவாளன் செயல் வியர்த்தமாகத்தானே முடியும். குணசுந்தரம் கேவலம் ஒரு சாமானியப் பெண்ணல்லவே. உயர்குடிப்பிறந்த உத்தமச்செல்வியன்றோ! அதிலும் கோடீஸ்வரப் பிரபுவாகிய பெரியவீட்டு முத்துவேலப்பர் அருமந்தப் புதல்வியென்றால் வேறு கூறவும் வேண்டுமோ! இத்தகைய உயர் குலக்கொடியை, குணத்தால், கேவலம் துஷ்டனும், தூர்த்தனுமாகிய வேணுகோபாலன் மணஞ்செய்து தருவதாக வாக்களிப்பதை அறிவுள்ளார் நம்புவரோ! இச்சொல்லை நம்பியிருக்கும் மணவாளன் பேதைமை எத்தகையதென்பதை வாசகரோ உணர்ந்துகொள்வாராக.

இங்ஙனம் நிகழ்ந்து வருகையில், ஒருநாள் மணவாளன் வேணுகோபாலனை நோக்கி! என்ன வேணுகோபாலரே? வீணாக நாள் கழிகின்றனவே. எனது நெருங்கிய உறவினர் பலர், பருவமடைந்துள்ள தமது மங்கைகள் பலரை எனக்கு விவாகம் செய்து தருவதாக ஒருவர் மேலொருவர் மேலாடிப் போட்டி போட்டுக்கொண்டு வருகின்றனர். ஒவ்வொருவரும் சிறந்த அழகிகள் என்று கேள்வி? நீர் கொடுத்திருக்கும் வாக்குறுதியைக் கெட்டியாக நம்பிக்கொண்டு நான், அவர்கள் யாவருக்கும் ஒருபதிலும் சொல்லாமல் யோசித்துச் சொல்வதாக நாள் கழித்து வருகிறேன். நீரோ இன்று நாளையென்று சொல்லிவருகிறீர். உமது தந்தையோ! யோசிப்பதாகக் கூறிவருகின்றார். இதற்கு இன்று ஒரு முடிவு சொல்லவேண்டும் இனித் தாமதிக்க முடியாது என்றான்.

**வேணுகோபாலன்** :—நீர் கேட்பது நியாயமே நான் பதில் சொல்லித்தானகவேண்டும்.

**மணவாளன்** :—என்ன பதில் சொல்லுகிறீர். விவரமாகக் கூறும்.

**வேணு** :—இதோ கூறுகிறேன். இன்றுமாலை குணசுந்தரம்

எங்களுக்குச் சொந்தமான சிங்காரத் தோட்டத்திற்கு மாலை வருவாள். அவளுடன் துணையாகத் தோழி கமலமும் வருவாள். அப்பொழுது நாமிருவரும் அங்குச் சென்று அவளுடன் இதுவிஷயத்தைப்பற்றி ஆலோசிக்கவேண்டுமென்பதே.

மணவா :—நீரும் நானுமிருந்துகொண்டு குணசுந்தரம்! என்னைக் கலியாணம் செய்துகொள்ள நீ என்ன சொல்லுகிறாய்? என்று நான் தான் எப்படி கேட்பது! அவள்தான் நாணமின்றி எங்ஙனம் பதில் சொல்லுவாள்.

வேணு :—நீரும் நானும் அங்கு சென்றதும், நான் கமலாவை ஒரு காரியமாக வெளியிற் சென்று வருமாறு வேலைவிட்டு, நானும் விரைவில் வருவதாகச் சொல்லி அங்கு நின்றும் அகன்றுவிடுகின்றேன். அச்சமயத்தைத் தாம் இழந்துவிடாமல், அவள் அபிப்ராயத்தை நன்றாக அறிந்து கொள்ளும்.

மணவா :—இதுவும் ஒரு நல்ல யுக்திதான். நான் அந்தப்படியே செய்கிறேன்.

வேணு :—அப்படியே செய்யுங்கள். ஆனால், ஒன்றுமட்டும் ஞாபகத்திலிருக்கவேண்டும். அதாவது பெண்களுக்கு ஆடையாபரணங்களில் மிகுந்த விருப்பமுண்டென்பது தாங்கள் அறிந்ததுதானே. ஆனதினால், குணசுந்தரம் மெத்த சந்தோஷிக்கும் வகையில் உயர்ந்த பட்டாடையொன்றும், வைரமிழைத்த கல்லட்டிகையொன்றும், மற்றும் வேண்டுமவைகளையும் உடன்கொண்டுவரவேண்டும். அப்பொழுது அவைகளைக் கொள்ளும் விருப்பத்தால் உமது கோரிக்கை நிறைவேறக் கூடும். நான்கூறுவது பொருத்தமாகவிருக்கிறதா? என்றான்.

மணவா :—நீர் கூறுவது முற்றிலும் பொருத்தமே. அந்தப்படியே ஏற்பாடு செய்கிறேன். என்றுகூறி வேணுகோபாலனை அனுப்பிவிட்டு மணவாளன், குணசுந்தரத்தின் அந்தஸ்துக்கும், அழகுக்கும் ஏற்றபடி சிறந்த காசிப்பீதாம்பரப்

பூட்டாப் புடவையொன்றும், அதற்கேற்றபடி விலைமதிப்புடைய அசல் சரிகைப்பட்டு ரவிக்கையொன்றும், உயர்ந்த வைரமிழைத்த மாங்காமாலை யொன்றுமாகத் தயார் செய்து கொண்டு வேணுகோபாலன் வரவுக்காகக் காத்துக்கொண்டிருந்தான்.

# VI

## இரகசிய சந்திப்பு

" அன்புக்கு முண்டோ அடைக்குந்தாள்."

குணசுந்தரம் அன்றுமாலை தன்பேரன்பிற்குரிய விஜயத்தினிடத்தில் தனது சிங்காரத்தோட்டத்தில் ஆர்வத்துடன் அழகாகச் சம்பாஷித்துக் கொண்டிருக்குமிடையில் தன் சோதரன் வேணுகோபாலன் வர, அதனால் தங்கள் இனிய சம்பாஷணை ஒரு முடிவு பெறாமல் தடைநேர்ந்ததென்பது வாசகர்களுக்கு ஞாபகமிருக்கலாம். அதனை நினைந்துகொண்டு குணசுந்தரம்! அன்றிரவு தனது நல்லறையில் உயர்ந்த ஆசனமொன்றில் தனியாக வீற்றிருந்து, விஜயன் தன்பால் வைத்திருக்கும் உண்மைகாதலுக்கும், உறுதிபெற்ற அன்பிற்கும் மெத்த மகிழ்ந்தாள். தன்பொருட்டுத்தன் அரிய பிராணனையும் தியாகஞ்செய்யத்தயாராயிருப்பதாகமொழிந்த அருஞ்சொல்லுக்கு மெத்தவியந்தாள்! அவன் மொழிந்த ஒவ்வொரு சொற்களும் கலப்பற்றதாய் இனிப்புநிறைந்ததாய் அன்பின்நிழல் ஆடிக்கொண்டிருப்பதைக்கண்டாள். அவன் மிகவும் இரங்கிய உள்ளத்தனாய் நான்மிக ஏழை,பொருளற்றவன், உயர்ந்த அழகு, அதற்குரிய செல்வம், செல்வத்திற்கேற்ற மதிப்பு இவை நிறைந்த சீமாட்டியாகிய நீ! என்னை ஒரு பொருள் படுத்தி என்மொழிக்கு இரங்குவையோ! நான் அதை உன்னிடத்துத் துணிந்து சொல்வதற்கும் அஞ்சுகின்றேன். ஆனால், இவ்வேழையால் பருகி உனது அருங்குண,

தையும், பெருந்தன்மையையும் நன்குணர்ந்தவளானதினால், எனதுண்மையையும், கருத்தையும் ஒழியாது சொல்வது குற்றமாகாதென்றும், “ உற்றதுமொழிந்தால்அற்றதுபொருந்தும்” என்பதில் தனக்கு நம்பிக்கையுண்டென்றும் கூறிய அவனது அமுதவாசகங்கள் கற்றுணர்ந்தோர்க்குரிய அடக்கத்தையும், சீலத்தையும் நன்குகாட்டுகின்றனவே’ என்று பலமுறை நினைந்தும், தன்னுட் கூறியும், சிந்தித்தும் பேரானந்தங்கொண்டாள். முடிவில் தனக்கு அவன்மீதுள்ள நீங்காவிருப்பத்தையும், மெய்க்காதலையும் நன்கு விளக்கிக்காட்டி விடவேண்டுமெனத் தீர்மானித்துத் தன் தோழி கமலாவிடம் அடியில் வருமாறு சிறுகடிதமொன்று எழுதியனுப்பினாள்.

கலைமகள் நிலயம்,
சித்திரைமாதம் 20-ந்தேதி.

எனது பேரன்புக்கே ஓரணிகலனாகச் சிறந்து விளங்கும் பெருங்குணச்செல்வமே! அனந்தகோடி நமஸ்காரம்.

கண்ணே !

இன்றுமாலை 4-மணிக்கு எனது சிங்காரத் தோட்டத்தின் லதாகிரகத்திற்கு உமது அரியநல்வரவை வெகுஆவலுடன் எதிர் பார்க்கின்றேன். அங்கு அந்தரங்கத்தில் நெருங்கிச் சம்பாஷிக்கவேண்டிய சில அதி முக்கிய விஷயங்களிருக்கின்றன. தவறாது வந்து, முன் எதிர்பாராது பிரிந்த அன்பின் கொடியை இணைத்துச் செல்லவேண்டுகிறேன்.

தங்கள் பிராணப்பிரியை,
குணசுந்தரம்.

முகம் அன்றலர்ந்த செந்தாமரை யெனமலர்ந்து புன்னகை தவழ்ந்து கொண்டிருந்தது. குணசுந்தரத்தின் மனமும் திருஷ்டியும் விஜயத்தின் வருகைமீது பதிந்திருந்ததால், விஜயம் தூரத்தில் வரும்பொழுதே அவன் வருகையைக் கண்டுகொண்டாள். அவன் அழகிய நடையையும் அங்க அமைப்பையும், முகவிலாசத்தையும் உற்றுநோக்கினாள். கல்வி, நல்லறிவு, ஒழுக்கம், உயர்குலம், அழகு இவைகளை ஒருங்கழித்த கடவுள், விஜயத்திற்குச் செல்வத்தையேன் செய்யமறந்தார்? என்று தன்னுள் வினவிக் கொண்டாள். அதற்கும் ஒருகாரணமிருக்கத்தான்வேண்டு மென்று விடையும் வருவித்துக்கொண்டனள். அதிருக்கட்டும். வருகிறவன் விஜயனோ! அல்லது வேறொருவனோ வென்று குணசுந்தரம் ஐயங்கொண்டாள். சிறுவயதுமுதல் இதுவரையும் அவனோடு பழகியநாட்களில் ஒருநாளேனும் விஜயம், இத்தகையகோலங்கொண்டு மலர்ந்தவதனத்துடன் திகழ்ந்ததைக் கண்டாளில்லை. ஆனதால், அவள் ஐயங்கொண்டது சகஜமே. தன்னையே நோக்கி வருவதையும், அவன் இனிய புன்சிரிப்பையும், மெல்லியசாயலையுங்கண்டு தான் கொண்ட ஐயம் நீங்கினாள். அதற்குள் அவனும் சமீபத்தான். குணசுந்தரம் வாரும் விஜயா! கடிதங் காலத்திற் கிடைத்ததா! என்று நல்வரவு கூறி எதிர்கொண் டழைத்தாள்.

**விஜயம்** :—ஆம், கிடைத்தது. என்னன்பே! அதிற் குறித்தபடி காலந் தாழ்க்காது வந்துவிட்டேன்.

**குண** :—விஜயா! என் கண்ணே! மெத்த சந்தோஷம். இதுவரையும் நாம் நினைத்தபடி இங்கு நம்மிருவரையும் கூட்டிவைத்த கடவுளுக்கு முதலில் வணக்கங் கூறுகிறேன்.

**விஜயம்** :—அதுதான் அறிந்தோரின் சிறந்தகடமை. நானும் அவ்வாறே துதி செலுத்துகிறேன்.

**குண** :—பிரியமுள்ள விஜயம்! அன்று நம்மில் நிகழ்ந்த

அரிய இனிய சம்பாஷணையினிடையில் சோதரன் வேணு கோபாலன்வந்துவிட்டதினால் சம்பாஷணை முற்றுப்பெறாது வருத்தத்தோடு பிரிய நேரிட்ட விஷயம். ஞாபகந்தானே!

**விஜயம்** :—ஞாபகமில்லாமலென்ன? அதுபற்றி நான அடைந்த மனோவேதனையும், சஞ்சலமும் என்மனதை விட்டுக் கொஞ்சமும் அகலவில்லை. இப்பொழுது நினைத்தாலும் துக்கமுண்டாகிறது.

**குண** :—எனக்கும் அவ்விதமே. அதைத் தனித்துக்கூறுவதற்கே உமக்கு அழைப்புக்கடிதம் விடுத்தது. இன்றுநான் உமக்கு இறுதியாய்க்கூறுவதொன்றுண்டு. அதுகடவுளறியக் கூறும் சத்தியவாக்கு. அதாவது:—'எனது அழகிய உடலும், இனிய உயிரும் இதுமுதல் உமக்குச்சொந்தமானவையென்பதே. இனி எத்தகைய இன்பதுன்பம் வரினும் அவைகளைப் பொருட்டாகக் கொள்ளமாட்டேன். நீர் இதுவிஷயத்தில் ஒருசிறிதும் சந்தேகப் படவேண்டுவதில்லை. முக்காலும் சத்தியமென்றாள்.

**விஜயம்** :—கண்மணீ! அங்ஙனமாயின், நான் பெரும்பாக்கியவானே! என்பிறப்பும் பயன்பெற்றது. இவ்வாக்குறுதியை எல்லாம் வல்ல தெய்வம் ஈடேற்றத் திருவருள் பாலிக்குமாக.

**குண** :—பரஸ்பர அன்பினால் கட்டுப்பட்ட நானும் தன்னியளாயினேன்.

**விஜயம்** :—இது என்மீதுள்ள அன்பின்மிகுதியால் கூறும் உபசாரமொழி. உண்மையில் அது பொருந்தாது.

**குண** :—என்ன! அப்படிக் கூறுகின்றீர். ஏன் பொருந்தாது?

**விஜயம்** :—இவ்வுலகில் பொருளற்றவன், எவ்வளவு அழகனும். அறிவுடையவனாயினும், அவன் நடைப் பிணத்திற் கொப்பானவன் என்று உலகம் பழித்துக் கூறும். உலக

னுபவமுணர்ந்த அறிஞரும், உலகங்காட்டிய இவ்வுண்மையைச் செய்யுள் வடிவில் பின்னோர் உணர்ந்து தெளியும் பொருட்டு எடுத்துக்காட்டாக மொழிந்தும் வைத்துள்ளனர்.

—"இல்லானை
இல்லாளும் வேண்டாள் ஈன்றெடுத்த தாய் வேண்டாள்
செல்லாதவன் வாய்ச் சொல்."

என்பது போன்ற அறவுரைகள் கொஞ்சமா? அவைகளை நீயும் ஓதி உள்ளனையன்றோ? அங்ஙன மிருக்கப் பொருளற்ற என்னை ஒருவர் மதிப்பதும், அபிமானிப்பதும் எங்ஙனம் கூடும்?

குண:—நீர் கூறுவது முற்றிலும் உண்மையே. அது பொதுவகையில் பொருத்தமே. சிறப்புவகையில் பொருந்துவது கடினம். "அறிவுடையொருவனை அரசனும் விரும்பும்."

"கடை நிலத்துப் பிறந்தோராயினும் கற்றோரைத்
தலைநிலத்து வைக்கப் படும்."]—

"எக்குடிப் பிறப்பினும் யாவரே யாயினும்
அக்குடியிற் கற்றோரை வருக வென்பர்."

"கல்லாதான் றோள் சேர்தலினும் கற்றவனோ
டல்லற் படுதலழ கன்றோ."]—

என்றுதிய மெய்யுரைகளும் உண்டன்றோ! நான் அந்த வழியைச் சொந்தமாகப் பின் பற்றுகின்றவள்.

விஜயன் வேறு கூறுவதற்கு வழிகாணது அவள் விவேகத்திற்கு வியந்தான். மெத்த மகிழ்ந்தான். பெருகித் ததும்பிய பேரன்பினாலும், அடங்கா ஆர்வத்தாலும் குணசுந்தா விஜயர்கள், ஈருடலும் ஒருடலெனும்படி ஆலிங்கனஞ் செய்து கன்னஞ் சிவக்க முத்தமிட்டுக் கொண்டனர். அந்நிலையில்

விஜயம், குணசுந்தரம்! என்றைக்கும் நாமிருவரும் இவ்வன்போடு கூடியிருக்க இறைவன் நம்மீது இன்னருள் பாலிப்பானாக என்று வேண்டினன். குணசுந்தரம், "கருணையங் கடவுள் அங்ஙனமே விரைவில் கடாட்சிப்பார். நானும் என் தந்தையிடத்துச் சமயமறிந்து உம்மைப்பற்றி உயர்த்திக் கூறிச் சம்மதி பெறச் செய்விக்கிறேன். நீர் ஒன்றுக்கும் வருந்தாதீர்" என்று கூறி மீண்டும் பலதரம் அவனை நன்றாகத் தழுவிப் பல முத்தங்கள் வைத்தாள். சிறிதுநேரம் அவ்வாறேயிருந்து பின் ஒருவாறுதேறி ஆலிங்கனத்தினின்றும் பிரிந்து தனியே நின்றனர். அடுத்த பூங்காவினின்று முன்போலவே, யாரோ வரும் காலடி ஓசை செடிகளின் அசைவினால் தெரிந்தது. உடனே குணசுந்தரம் அன்பே! எனது தமையன் வருகிறாப் போலிருக்கிறது. நீர் போம். ஒன்றுக்கும் அஞ்சாதீர். கவனமிருக்கட்டும் என்று பிரியாவிடை கொடுத்தனுப்பினள் விஜயனும் அவ்வாறே சென்றான்.

## VII

## வேணுகோபல மணவாளர் ஏமாற்றம்

"கருதியவாறுமோ கருமம்"

மூன்றடித்துப் பதினைந்து நிமிஷமானதும் குனசுந்தரத்தைக் காண்பதற்குப் பூந்தோட்டஞ் செல்ல மணவாளன் என்றுமில்லாதபடி இன்று தன்னை நன்றாய் அலங்கரித்துக் கொண்டான். பெருவிலை மதிப்பில் நன்றாய்த் தயாரிக்கப் பெற்ற சொர்ணத்தில் கல்லிழைத்த மாங்கா மாலையையும், காசிப்பீதாம்பரத்தையும், உயர்ந்த பட்டு ரவிக்கையையும் அழகான தந்தப்பெட்டியில் அடக்கஞ் செய்து கொண்டு இன்று எவ்வகையிலும் நாம் செய்துள்ள நல்ல ஏற்பாட்டினால் குணசுந்தரம் நமது கருத்திற் கிணங்கிவிடக்கூடும்? நாம் நினைத்தபடி அடுத்தமாதம் 17-தேதி முகூர்த்தத்தையும் நிறைவேற்றிவிடலாம். என்று மனோராஜ்யஞ்செய்து கொண்டு வேணுகோபாலன் வரவையும், காலத்தை அறிவிக்கும் கடிகாரத்தையும் கவனித்துக்கொண்டிருந்தான். மூன்றடித்து 45-நிமிஷத்திற்கெல்லாம் வேணுகோபாலனும் வந்து சேர்ந்தான். மணவாளன், அவன்வரவுக்குச் சந்தோஷங்கொண்டு என்னுங்கோ! மணியாயிற்றே, புறப்படலாமே என்றான். வேணுகோபாலன் நல்லது புறப்படுங்கள் என்று கூற, இருவரும் வெகு குதூகலமான சம்பாஷணையுடன் குணசுந்தரம் வீற்றிருக்கும் சிங்காரத்தோட்டத்தை நாடி வழிகொண்டனர்.

அந்தோ ! இதென்ன அநியாயம் ! வேணுகோபாலனின் அநியாயமே ! குலம், குணம், குடி, செயல், பொருள், மதிப்பு, சிறப்பு முதலியவைகளில் மணவாளனை விடப்பதின் மடங்கு சிறந்த முத்து வேலப்பருக்குச் செல்வப் புதல்வனாகத் தோன்றிக் கேவலம் தனது துர்நடத்தைக்குப் பொருள் பெறும் நிமித்தம் இவ்வாறு தன் பெருங்குடும்பத்தின் கௌரவத்தையும், மதிப்பையும், மானாபி மானத்தையும் விட்டுத் தன்னுடன் பிறந்த ஒப்பற்ற கற்புடைத்தேவி குணசுந்தரத்தை அறிவற்ற மலைவராயப் பிரபுவுக்கு அவள் சம்மதம் பெறாது வலுவில் மணஞ்செய்து தருவதாக அவள் தனித்திருக்கிற சிங்காரத் தோட்டத்திற்கு அவளையும் அழைத்து வர முற்பட்ட இவனது மதியீனத்திற்கு மெத்தவருந்துகிறோம்.

குடிப்பதும், கூத்திவைப்பதும் சுகமும், கௌரவமுமெனக்கருதும் மதிகேடர்களுக்கெல்லாம் வேணுகோபாலன் செய்கைவந்து சம்பவித்துத்தான் தீரும். அம்மட்டோ ? தம் பெண்டுபிள்ளைகளையும், பெற்றுவளர்த்த தாய் தந்தையரையும் உண்ணச்சோறும் உடுக்கத்துணியுமின்றி மானமழிந்து மதிகெட்டுத் திரியும்படி விடச்செய்யும். இப்பாவிகள் காலைமுதல் மாலைவரை ஓய்வின்றி உடலை வருத்திப் படாதபாடுபட்டுப் பணம் தேடி அதைத் தானும் உண்ணாமல், தன்னையடுத்த பெண்டு பிள்ளைகளுக்குங் கொடாமல் குடிக்கும், கூத்திக்கும் செலவிட்டு வீணாகத் தேகத்தைக் கெடுத்துக்கொண்டு, வியாதிக்காராய்ப் படுக்கைக்குள்ளாய் மருந்தும் கையுமாயிருந்து முடிவில் இறந்து பெருநரகிற்கும் ஆளாய் விடுகின்றனர். அந்தோ ! குடியாலும் கூத்தியாலும் வந்த கெடுதிகளைக் கண்டார்களா ? கண்டும், கண்ணிருந்தும் குருடர்களாய் அப்படுகுழியில் வீழ்ந்தழிகின்றார்கள் அந்தோ ! தெய்வமே ! உன்னருமைப் பிள்ளைகள் இத்தீநெறிகளின்றும் விலகி நன்மார்க்

கத்தில் செல்ல என்று திருவுளம் வைத்தருளுவையோ! அன்றுதான் நாமும் நம்நாடும் நலம்பெற்று வாழக்கூடும் ஓம் சாந்தி!

வேணுகோபாலனும், மணவாளப்பிரபுவும் சம்பாஷணையுடன் சிறுநடை கொண்டவர்கள் சிங்காரத்தோட்டத்தையடுத்ததும் வேணுகோபாலன் மணவாளப்பிரபுவை நோக்கி நான் முன்னே செல்லுகிறேன். தாங்கள் என்னைத்தொடர்ந்து சற்று பின்னே வாருங்கள். என்று கூறித் தான் முன்னேவந்தான். அப்பொழுதுதான் செடிகளினசைவினால் யாரோ வருவதாக வுணர்ந்த குணசுந்தரம் தன் உண்மைக்காதலனைஅனுப்பிவிட்டு ஒருஆசனத்தில் வீற்றாள். வேணுகோபாலன் வந்ததையறிந்தும் அறியாதபாவனையில் எதோ சிந்திப்பவள்போலிருந்தாள். இதற்குள் மணவாளப்பிரபுவும் சமீபத்து விட்டனன். இவன்வரவுகண்டு குணசுந்தரம் அஞ்சி நாணத்தால் ஒருபுறம் ஒதுங்கும்போது வேணுகோபாலன் குணசுந்தரத்தைக்கிட்டித் தங்காய்! இதோபார்த்தனையா! புத்தம் புதிய மாதிரியில் வைரக்கற்களாலிழைத்த மாங்காய்க் கோர்வையை. இதுமங்களூரில் கைதேர்ந்த பொற்கொல்லரால் தயாரிக்கப்பெற்றதாம். நமது மணவாளப்பிரபு வரவழைத்திருகிறார். உனது பேரழகிற்கும், உயர்வுக்கும் இவ்வாபரணம் மிகப் பொருத்தமானதெனக்கூறுகிறார். மணவாளரே! அருகில் வாரும். இதன் விலையென்ன கூறும்? என்று அவன் குணசுந்தரத்தை நெருங்கி வந்து பார்க்கட்டும் என்ற நோக்கம் வைத்து அழைத்தனன்.

குண:—தமையனது நோக்கமறிந்து அவன் துற்செயலுக்கு மெத்த வருந்தி இன்னும் என்னதான் செய்வனோ பார்ப்போம் என்று மெதுவாக அவரையேன் அருகிலழைக்க வேண்டும். தாங்களே சொன்னால் போதும் என்றாள். இதற்குள் மணவாளனும் “அவள் சந்து விட்டாள் நான் வந்துவிட்

டேன்" என்றாற்போல, குணசுந்தரத்தைச் சமீபித்துக் கோர்வையின் விலையா கேட்டீர்கள்? அதிகமில்லை. 16,500 ரூபாய்தான். இதோ, இந்த அழகிய பீதாம்பரத்தைப்பார்த் தீர்களா! இது, வட இந்தியாவில் தென்னாட்டு வியாபாரி களில், சிறந்த பெயர் பெற்ற மெஸர்ஸ் S. முத்தையா கம் பெனியார், பட்டு நெசவிலும், சரிகைக் கைத்தொழிலிலும் கைதேர்ந்த நுண்ணறிவுடைய நெசவுத் தொழிலாளரைக் கொண்டு தயாரிக்கப்பெற்றது. புதியமாதிரி. தங்கள் போன்ற பிரபு குலச் சீமாட்டிகட்கே தக்கது. இதன் மெல்லிய நல்ல பட்டும், உயர்ந்த தங்கச்சரிகையிழையும் வெகு மேலானது. கெட்டிச் சாயம். முகதலைவாகிய சேலைமுந்தி விசித்திர வேலைப்பாடும் கண்கவர் வனப்புமுடையது. இவர்கள் தம் வேலைத்திறத்திற்கும் நல்லுடைக்கும் இடந்தோறும் நடை பெறும் பொருட்காட்சிச் சபைகளில் தங்கமெடலும் வெள் ளிப்பதக்கமும் மென்மேலும் சன்மானம் பெறுகின்றனர். இனியும் இப்பீதாம்பரத்தைப் பற்றிப்பேசுவது மிகையாம் என்று கூறிக் குணசுந்தரம் பேரழகென்னும் தேனை மணவாளன் கண்ணென்னும் வாயால்பருகிக் கொண்டிருந் தான். வேண்டாப் புருடன் கைபட்டாலும், கால்பட்டாலும் குற்றமாயிருப்பது போல், மணவாளன் பொருள்களின் விசேஷத்தைப் புகழ்ந்துரைத்ததை யெல்லாம் குணசுந்தரம் பொருட்படுத்தினாளில்லை. அவன் சொற்களை முற்றிலும் கேட்க அவளுக்கு மெத்தக்கஷ்டமாகவேயிருந்தது.

வேணுகோபாலன்:—என்ன குணசுந்தரம்! நானும் மணவாளப்பிரபுவும், ஆடையின் உயர்வைப்பற்றியும், ஆப ரணத்தின் மேன்மையைப்பற்றியும் பலவாறெடுத்துச்சிரமப் பட்டு மொழிந்தும் காதிலேற்காமலும், கவனிக்காமலும் ஒரு விதமாய் இருந்து கொண்டிருக்கிறாய். இவ்வாடையும், இவ்வாபரணமும் உனக்குத் தேவையானவை?

**குண :**—தந்தையின் அநுமதியின்றி இவைகள் தேவையென்று நான் எப்படிச் சொல்லமுடியும்? என்றாள்.

**வேணு :**—இதற்கெல்லாம் தந்தையின் அநுமதிவேண்டுமோ! நாம் விரும்புகிற பொருள்களை வாங்கினால் தந்தை வேண்டாமென்று சொல்லிவிடுவர்?

**குண :**—நான் இன்னும் தந்தையுரையை மீறி நடக்கும் சுபாவத்தின் எல்லைக்கு வரவில்லை என்றாள்.

**மணவாளன் :**—இதுவரை குணசுந்தரத்தை! நீங்கள், தாங்கள் என்று பேசிக்கொண்டிருந்தவன் திடீரென குணசுந்தரத்தை நோக்கி இவ்வுயர்ந்த உடைமைகளுக்கு விலை வேண்டுமென்றால் நானே உன்தந்தையின் அநுமதிவேண்டும்? உன்னை அபிமானித்துக் கொடுத்தால் பெற்றுக் கொள்ளலாமன்றோ?

**குண:**—மணவாளன் தன்னைப் பருவமடைந்த மங்கையென்றும், பிறர்க்கு மனைவியாதற்குரியாளென்றும் உணர்ந்தும் சிறிதும் நாகரிகமற்றவனாய் நிர்முடனைப்போல் குணசுந்தரம் என்று தன்பெயர் சொல்லித்தன்னை அலட்சியமாய் அழைத்ததற்குச் சினந்து மணவாளனை ஏறிட்டுப் பார்த்து விட்டு ஏதும் மறுமொழி கூறாது மௌனமாய் இருந்துவிட்டாள். குணசுந்தரம் நோக்கிய குறிப்பின் தன்மை இன்னதென்றறிந்து கொள்ளும் சக்தி மணவாளனுக்குரியதல்லவே. கல்வியாலும் அதனால் பெற்ற ஞானத்தாலுமன்றோ அது வந்தெய்த வேண்டும்.

**வேணு :**—என்ன குணசுந்தரம்! பெரும்பிரபுவும், நமது பந்துவுமான மணவாளப்பிரபு கூறிய வார்த்தை உன் செவியிற் பட்டதா? என்பதிலொன்றும் பகர்ந்தாயில்லை.

**குண :**—முகஞ் சுளித்துக் கண் சிவக்க வேணுகோபாலனை சினக்குறிப்புத் தோன்ற ஏறிட்டுப்பார்த்து அன்புள்ள சகோதரிக்கு உடன்பிறந்த சகோதரன் செய்யும் உபகாரம் இதுதா

ரோ? என்னைக் கேவலம் விலைமாதாகவன்றோ நினைத்துவிட்டாப்போலிருக்கிறது. நான் தனித்திருக்கும் இவ்விடத்திற்கு வயது வந்த அன்னியரை அழைத்து வந்த காரியமென்ன? கல்லிழைத்த கோர்வையும், காசிப் பீதாம்பரத்தையும் கேட்டவரார்? இது உயர்குலத்துத் தோன்றியவர் செய்யத்தக்க காரியமல்லவே. 'தென்றல் முற்றிப் பெருங்காற்றாவதற்குள் இவ்விஷயத்தைத் தந்தைக்குரைத்து ஒருபரிகாரம் தேடவேண்டும். இன்றேல் எனக்குப் பேரபத்தாய் முடியும்.' என்று படபடவென்று கூறிமுடித்தாள். வேணுகோபாலனும், மணவாளப்பிரபுவும் ஏதுங்கூறவகையற்றவர்களாய், எண்ணி வந்த காரியத்தியத்தில் ஏமாந்தவர்களாய் மனம் வருந்தி முகங்கருகித் தலைசாய்ந்து நின்றனர். மாலைச்சூரியனும் இவர்கள் பேதைமைக்கு வெட்கினைப் போல் முகஞ்சிவந்து மேற்றிசைக்கடலில் வீழ்ந்தனன். குணசுந்தரமும் பொழுது பட்டதையுணர்ந்து தோழி கமலாவுடன் மயிலெனச்சாய்ந்து, கொடியென அசைந்து அன்னமென நடந்து தன்மாளிகை நோக்கிச் சென்றாள்.

# VIII

## துஷ்ட சூழ்ச்சி

" பொய்படு மொன்றோ புனை பூணுங் கையறியாப்
பேதை வினைமேற் கொளின்."

(திருக்குறள்)

வரதராஜனை விட்டுப் பிரிந்த மாதவனும், கோவிந்தனும், வெகுவிரைவாக மைனர் ஜமீன் மாளிகைக்கு வந்தனர். அப்பொழுது சுமார் மாலை நான்கடித்துப் பதினேழு நிமிஷமாயிருந்தது. ஜமீன் பகற்போசன முடித்துச் சிரமபரிகாரத்தின் பொருட்டுச் சற்று படுத்து நித்திரைசெய்து எழுந்து இடைவேளைப் புசிப்பிற்காகச் சிற்றுண்டியும், காப்பியும் கொண்டுவரும்படி பரிசாரகனை அழைத்துக்கொண்டிருந்தனன். அச்சமயம் இவர்கள் வரவு கண்டதும் மெத்த மகிழ்ந்து முகமன் கூறி உபசரித்து இருக்கைதந்து, எங்கே இவ் ஐந்து தினங்களாக உங்கள் வரவு இந்தப்பக்கமே காணுதிருக்கிறது என்று கேட்டனன்.

**மாதவன்** :—காணுமலென்ன? அந்தக் காரியார்த்தமாகப் பலவிடங்களிலும் அலைந்து கொண்டிருந்ததினுல் வரக்கூடவில்லை. வெகுமுயன்று சிரமப்பட்டதின்மேல் இன்று ஒருவாறு இனங்கண்டு பிடிக்கப்பட்டது. தாங்கள் விரும்பியதற்குமேல் பன்மடங்கு மேலானது. மோகன சிங்காரக் காமாதித்தங்கம் தங்களுக்கே சொந்தமென்முன்.

**மைனர்** :—இச்சொற் கேட்டதும் மைனருக்குண்டான ஆனந் தத்திற்கோர் அளவில்லை. அப்பொழுதே அவ்விராணி போகத் தையடைந்து விட்டதாக நினைந்து கொண்டான். மாதவனும் கோவிந்தனும் தனக்காக மெத்தப் பிரயாசைப் பட்டிருப்ப தாகக்கருதினன். அவர்களுக்குச் செய்யவேண்டிய உபகார மும், பரிசும் இன்னதுதானென நிர்ணயிக்க மட்டும், அப் பொழுது அவனறிவுக்குப் புலப்படாமலொழிந்தது. உடனே, பரிசாரகனை விளித்து உயர்ந்த பக்ஷண வகைகளையும்; பானவகைகளையும், ஏராளமாகக் கொணரும்படி உத்தரவிட் டான். அவ்வாறே எல்லாம் வந்தன. மூவரும் அளவளாவிச் சம்பாஷித்துச் சிற்றுண்டியருந்திச் சந்தோஷமுங் கொண்டா டினர்.

**மாத** :—தங்கள் அன்பான உபசாரத்திற்காக அளவிலா வந்தனம். தாங்கள் இப்பொழுதே வெகு விரைவாகச் செய்து முடிக்கவேண்டிய சில அவசர காரியங்களிருக்கின்றன.

**மைன** :—சொன்னால் எதுவானாலும் இப்பொழுதே செய்து முடிக்கிறேன். தாங்கள் செய்யும் வரையற்ற உப காரத்திற்கு நான் தாமதிக்கவும் கூடுமோ! விரைந்து சொல் லுங்கள்.

**மாத** :—நாளை மாலை 4-மணி வேளைக்குச் சரியாய் வெகு துரிதமாகச் செல்லக்கூடிய ஒரு மோட்டார் வண்டியும், எதையும் துணிந்து செய்யக்கூடிய சில ஆட்களும், இரண்டு ரிவால்வரும், எங்களிடம் ஒப்படைக்கவேண்டும்.

**மைன** :—மோட்டாரும், ஆட்களும், ரிவால்வரும், என் னத்திற்கு? நீங்கள் சொல்வது எனக்கொன்றும் புரியவில்லை? விளங்க வுரைக்க வேண்டும்.

**மாத** :—ஐயா! இவ்வூருக்கு நேர்மேற்கில் ஐந்து மைல் தூரத்திலுள்ள மாவுத்தம் பதியில் பெருந்தனிகராயுள்ள முத்துவேலப்பர் குமாரத்தி "குணசுந்தரம்" என்னும்

பேரழகியைப்பற்றித் தாங்கள் கேள்விப்பட்டிருக்கலாம். அவள் எழிலுருவும், அருங்குணமும், சொல்லுந்தரமல்ல. அம்மட்டோ! கனத்திலும், தனத்திலும், கல்வி யறிவிலும் மிக்குயர்ந்தவள். அவள் அழகைச் சுருங்கச் சொல்லின், பிரம்மன் தன் படைப்பின் திறத்தைக்காட்ட உலகிலுள்ள ஓவியங்களின் அழகை யெல்லாம் ஒருசேரத்திரட்டிக் குமரவேள், மதனவேள் முதலிய தேவர்கள் தியங்கும் வண்ணம் பத்தரைமாத்துப் பசும் பொன்னில் திருவொன்று புதுக்கினன் என்று புகல்வது பொய்யுரையன்று. உண்மையில் மெய்யுரையே. அவளுக்கு இன்னமும் கலியாணமில்லை. இத்தகைய உயர்குலச் செல்வியை நாளை மாலை நாலரை மணிக்கு அவளுக்குச் சொந்தமாயுள்ள நந்தனவனத்தில உலாவி முடிந்து தோழியுடன் வீட்டுக்குத் திரும்பும் அஸ்தமித்த இருட்டு நேரத்தில், அவள்மீது புலியெனப் பாய்ந்து சத்தமிடாதவாறு வாயிற் பந்து வைத்தடைத்து லாகவமாகத் தூக்கிவந்து மோட்டாரில் வைத்து வேகமாய்க் கொண்டு வந்து விடுவதெனத் தீர்மானித்திருக்கிறோம். இத்துணிகரச் செயலுக்குப் பெருந்தடை நேருமாயின், அவர்களைச்சுட்டுக் கொல்லு வதற்கும், தப்பிமீள்வதற்குமாக மோட்டாரும், பலாட்டிகரும், ரிவால்வரும் தேவையென்றது. இப்பொழுது எல்லாம் விவரமாயிற்றா? என்றான்.

**மைன**:—பேஷ் நல்லயுக்தி. இதுபோன்ற சமர்த்தும், துணிகரமும் வேறொருவருக்கும் வராது ஆ! அழகிலும் செல்வத்திலும் அத்துணை சிறந்தவளா? அப்படியானால், அக்காரியத்திற்கு உங்களோடு கூட நானும் வருகிறேன். வேண்டிய ஆட்களும் மோட்டாரும், ரிவால்வரும் வேண்டியது தருகிறேன். ஒன்றுக்கும் அஞ்சவேண்டியதில்லை. துணிந்து செய்யலாம் என்றான்.

**மாத**:—தாங்களும் எங்களோடுகூட வரும்போது எங்க

னுக்கேன் அஞ்சிக்கை. பின்னும் தைரியமும், துணிந்து செய்வதற்கு உற்சாகமும் ஏற்பட்டது.

**கோ** :—இதுவெல்லாம் சரியே! தூராக்கிருதமாய்த்தூக்கி வரும் துங்கரிகும் தங்கமணியைத் தங்கவைப்பதற்கு நல்ல சௌகர்யமுள்ள தனிவிடுதி வேண்டுமே! அதைத்தயாரிக்க மறந்தீர்களே என்றான்.

**மைன** :—அதற்கென்ன! நொடிக்குள் ஆயிரம் வீடு தயாரித்து விடுகிறேன்.

**கோ** :—ஆயின், மெத்த சந்தோஷம். காரியம்முடிந்து விட்டதென்றே நினைத்துக் கொள்ளுங்கள்.

**மைன** :—எல்லாவிஷயங்களையும், நாளை பகல் இரண்டு மணிக்குள் முடித்துவிட்டு, உங்கள் வருகையை யெதிர்பார்த்தபடியிருக்கிறேன். நீங்கள் என்விஷயமாக மெத்தசிரமப் பட்டிருக்கிறீர்கள். படுகிறீர்கள். அதற்குத்தக்கபடி உங்களுக்கு நல்ல சன்மானம் செய்வேன். இப்பொழுது இந்த ஐம்பது ரூபாயை எடுத்துக்கொண்டுபோய் உங்களிஷ்டப்படி செலவு செய்து விட்டுக் குறித்தகாலந் தவறாது நாளை வாருங்களென்று சொல்லி அவர்களை அனுப்பிவிட்டு மறுநாள் ஆக வேண்டியகாரியங்களை யெல்லாம் ஒழுங்காய் முடித்துவைக்கும்படி, தன் வேலைக்காரரில் தக்கவர்களிடத்து உத்திர விட்டுத் தானும் உண்டி முடித்துத் தனது மாளிகையின் மேன்மாடியிலுள்ள தனியறையொன்றில் ஏகாந்தமாயிருந்து கீழ்வருமாறு எண்ண மிட்டுக்கொண்டிருந்தான். "மாதவன், குணசுந்தரம் ஒப்பற்ற பேரழகியென்று சொன்னதிலிருந்து என்மனமானது அவள் தரிசனங்காணப் படுந்துரிதம் சொல்லுந்தரமல்ல. அதிலும், கல்வியிலும் கனத்திலும், தனத்திலும் என்னிலும் பன்மடங்கதிகமுடையாளெனச் சொன்ன போது பின்னும் பேராவல் உண்டாயிற்று. அத்தகைய கன்னியழகக் காமாதித்தங்கையை நான், காதலியாகப் பெறும்

பாக்கியம் உண்மையில் வாய்க்குமா! அப்படி வாய்க்குமானால், இங்குள்ள தெய்வங்களுக் கெல்லாம் சோடுகடா வெட்டி இரட்டைப் பொங்கலிட்டுத் திருவிழாச் செய்வேன். சத்தியுள்ள தெய்வங்களா! கை கூட்டுங்கள். என்று இன்னும் பல விதமாகச் செட்டி வீணாலோசனை செய்ததுபோற் செய்து கொண்டிருந்தான். இவ்வளவுக்குள் இரவு மணி இரண்டடித்தது. இவன் கண்களுக்கு மட்டும் நித்திரை வர வில்லை. கள்வர், காமுகர், நூலாசிரியர், பேராசைக்காரத் தனிகர் முதலினோருக்கு இரவில் நித்திரை வருவது கடினம். படுக்கையில் உடம்பு பொருந்தாமல் இருபுறமும் பிறண்டு கொண்டேயிருந்து நெடு நேரத்திற்குப் பின், அயர்ச்சி மிகுதியால் தூக்கம் வர நித்திரைபோயினான். சொப்பனத்திலுங் கூட குணசுந்தரத்தைப் பற்றி கனவு கண்டுகொண்டிருந்தான்.

# IX

## பெண் களவு

> "கொலையஞ்சார் பொய்ந்நாணார் மானமும் மோம்பார்
> களவொன்றோ ஏனையவுஞ் செய்வர்
> பழிபொடு பாவமிஃ தென்னார்
> பிரிதுமற் றென்செய்யார் காமங் கதுவப்பட்டார்."

ஜமீன் மைனர் மறுநாள் மாலை நாலுமணிக்கெல்லாம் தவறாது வரவேண்டுமென்றிட்ட கட்டளைக்குத் தவக்கமின்றிக் குறித்த காலத்திற்குச் சற்று முந்தியே வந்து சேர்ந்தனர். தாங்கள் செய்யப்போகும் துர்க்கிருத்தியம், பேராபத்தும் பெரும்பாவமும் பல ஜன்மங்களிலும் விடாது பற்றித்தொடர்ந்து துன்புறுத்தவல்லதென்பதையும் சிறிதும் யோசித்துணராது கேவலம், குடிக்கும், கூத்திக்கும்பொருள்வேண்டுமென்ற அவா ஒன்றையே பிரதானமாகக் கருதித் தான் சாகமருந்துண்ணும் கயவர்களைப்போல் மாதவனும், கோவிந்தனும், வரதராஜனும் மைனர் மாளிகைக்கு முந்தினர். இவர்கள் தான் மூடரும் மடையருமென்றால், அறிவும் அந்தஸ்தும் ஆங்கிலநாகரிகமும் வாய்ந்து, கௌரமும் இக்கால நாகரீகச் சின்னமுமெனக்கருதும் B. A. பட்டமும் பெற்று, பெருமதிப்புடைய மைனரின் செயல் இவர்களிலும் கோடிகெட்டதாகவன்றோ காண்கிறது. அந்தோ! காலத்தின் கோலமென்னே ! நல்லகுணமும் கற்புடைமையும் திருவுந்

சிறந்த மனைவியும், போகந்தருவதில் சிறந்தசமர்த்துவாய்ந்து பேரழகும் நிறைந்த தாசி லலிதா ஆசைநாயகியாயிருக்கவும், மைனர் அம்மட்டும் நிம்மதியாய்ச் சுகத்தோடிருப்பதை விட்டு, பெருமதிப்பும் பிரபுத்வமும் நிறைந்த பெருங்குடும்பத்துள்ள கற்புடைச் சீமாட்டியை வஞ்சித்துத் துராக்ருதமாய்த் தூக்கி வந்து, அநியாயமாய் அவள் அருங் கற்பைக் கெடுக்கத் துணிந்து, அதற்கு வேண்டிய துஷ்ட சாதனங்களுடன், தயாராய்த் துரிதமாய் நிற்கும் மைனர் துர்க்குணச் செயல் எத்தகைய வெட்கக்கேடானது. அன்பர்களே! ஒவ்வொரு ஆன்மாவும், அவை அவைகளுக்கேற்ற கர்ம வகைகளில் பிரவர்த்தித்து நன்மையோ, தீமையோ சுகமோ, துக்கமோ, உபகாரமோ, அபகாரமோ, பாபமோ, புண்ணியமோ, வினைக்கேற்றபடி செய்து முடிக்கவேண்டிய நியதி கருவிலே அமைந்திருக்கும்போது அதனைத்தடுக்கவும், விலக்கவும், யாரால் முடியும்! இது கருதியே. "புத்திக்கர்மாநுசாரணி" என்ற அறிவுரையும் எழுந்தது போலும் என்று நினைக்கவேண்டியிருக்கிறது. நிற்க.

முந்தித் தீர்மானித்து முடித்தபடி குறித்த காலந் தவறாமல் எல்லாச் சௌகரியங்களோடு துஷ்ட கோஷ்டியுடன் மைனர் சங்கேத ஸ்தலஞ்சேர்ந்து சந்திலும், மரப்பொந்திலும், செடிப் புதரிலுமாக மறைந்து சமயத்தை எதிர்நோக்கிச் சர்வ ஜாக்ரதையுடன் பதிவிருந்தனர். சிங்காரத்தோட்டத்தில் குணசுந்தர விஜயர்களுக்கு நிகழ்ந்த செய்கையையும், குணசுந்தர வேணுகோபால மணவாளர்கள் சம்பாஷணைகளையும் கூர்ந்து கவனித்தனர்? அவர்கள் சற்றுதொலைவிலிருந்ததால் அவர்களுள் நிகழ்ந்த சம்பாஷணைகளொன்றும் இவர்கள் செவிகளுக்கெட்டவில்லை. குணசுந்தரம் பூங்காவிலிருந்தபோதும், அதினின்றும் நீங்கித்தன் தோழியுடன் அடிவருந்த நடந்து தன் மாளிகை சென்ற

போதும் மைனர், அவளை மேகத்தினின்றும் வீழ்ந்த மின்னற் கொடியோ! அரம்பையின்றோ! இலங்குசெந்தாமரைத்திருவோ, தெய்வருஞ்சரியோ வென்று திகைத்து மதி மயங்கித்தவித்தனன். இத்தகைய மாதரசியை, மங்கையர் சிரோமணியை எவ்வகையிலும் எடுத்தேகுவதே தொடுத்த கருமமென்று துணிந்தனன். செய்யத்துணிந்த காரியம், நன்று! தீது! எனச் சிந்திக்கமறந்தனன். காமக்கண்ணற்றதன்றோ! எங்ஙனம் சிந்திக்கவிடும்? இருவர் ஆடவரும் ஒரு தோழிப்பெண்ணும் குணசுந்தரத்துடனிருந்ததால், எண்ணி வந்தகாரியம் செய்யமுடியாதொழிந்ததற்கு வருந்தினன். எனினும், இக்காரியத்தைச் செய்யாதொழியேன் எனக் கூறித் தன்னுடன்வந்த பிரசித்திபெற்ற துஷ்டர் மூவருடன் நெடு நேரம் ஆலோசித்து, முடிவில் அடியில் வருமாறு செய்வதெனத் தீர்மானித்தனன். அதாவது.—"விஜயம் மார்பின் மீது மோட்டார் வண்டியேறித் தெருவில்அபாயஸ்திதியில் மரண வேதனைப்பட்டுக்கொண்டிருப்பதாகவும், இவ்விஷயத்தைத் தங்களுக்கு அறிவிக்கச் சொன்னதாகவும், அதன்படி தான் வந்ததாகவும் சொன்னால், குணசுந்தரம் விஜயத்தின் மீதுள்ள பேரன்பினால் ஒருதடையும் கூறாது ஓடிவருவாள். அவள் வண்டி யருகிற் சமீபத்ததும் வாயில் பந்துவைத்தடைத்துத் தூக்கிச்சென்று விடுவதென்னுமாம்." இங்ஙனம் தீர்மானித்தபடியே குணசுந்தரத்தைக் கவர விருப்புள்ள மாதவனைத் தூதுபோக்கினர்; அப்பொழுது பூங்காவினின்று மாளிகை சேர்ந்த குணசுந்தரம் தனது அழகிய அறையொன்றின் வெளிப் பலகணிகளைச் செவ்வையாய்த் திறந்து நல்ல காற்றோட்டம் வருமாறு செய்து அதனருகிலுள்ள சோபாவொன்றன்மீது வீற்றுத் தனக்கு அடுத்த பரீக்ஷையில் வினாவப்போகும் பாடத்தை அறியமாட்டாதவளாய்த் தன் சோதரன் செய்கைக்கு மெத்தவுருகி இதயசங்கதியை காண

தந்தையிடத்து மறவாதறிவித்து அதற்குரியபரிகாரந்தேடா தவரையில் நமக்கு அபாயம் விளையக்கூடுமென ஆலோசித் துக் கொண்டிருந்தாள். அச்சமயத்தில், மாதவன் மெது வாக ஜன்னருகில் வந்து வெகுபணிவும் பரிவும் விநயமுந் தோன்ற அம்மா! தெருவில் வேகமாய் வந்து கொண் டிருந்த ஒரு மோட்டார் வண்டி, எதிரில் மெதுவாகப் போய்க்கொண்டிருந்த தங்கள் '**விஜயம்**' என்பவர் மீது விசையுடன் மோதி அவரைக்கிழே வீழ்த்திப் பெருங் காயப் படுத்தி விட்டது. வெகு வேதனையுடன் அபா யஸ்தலத்தில் வருந்திக் கொண்டிருக்கிறார். இத்துன்ப விஷயத்தைத் தங்களுக்குத் துலங்கும்படி விரைவிற் சென் றறிவிக்குமாறு என்னைத் தங்கள் பாலனுப்ப, நான் வெகு வேகமாய் இங்குவந்தேன். அந்தோ! நல்லகுண வந்தர். ஆணழகர், இவருக்கு இவ்வாபத்து நிகழச்செய்வித்த கடவுள் மிகப்பொல்லாதவர். என்று துக்கமும், துயரமும் உண்மையில் கொண்டவனைப்போல் பொய்யை வெகு பொ ருத்தமாய்ப் புகன்று நின்றான். மாசற்ற நெஞ்சரும், சத்திய சந்தரும் எவர் எது கூறினும், உண்மையென நம்பும் சுபா வத்த ரானதால் குணசுந்தரம் மாதவன் வாயினின்றுந் தோன் றிய சுடுசொல் காதில் வீழ்ந்ததும் பொருளாய், முன்னம், கோவலன் கொல்லப்பட்டான் என்ற சொற்கேட்டதும் கற்புடைக் கண்ணகி திடுக்கிட்டு நெஞ்சமயர்ந்து ஆவி சோர்ந்து, தனது நிலமை, அந்தஸ்து, அழகு, அந்தப்புரம், மானம் முதலியவனைத்தையும் விட்டொழித்துக் கணவனைக் காணவேண்டுமென்ற நோக்க மொன்றையே பிரதானமாகக் கொண்டு தனது இருப்பிடம் விட்டு வெளிக்கிளம்பியது போல், குணசுந்தரமும் கண்ணகியொப்ப, அம்மெய்ப்பாடு களனைத்துங்கொண்டு துக்கத்தால் கவரப்பட்டுச் சேதிசொ ல்லவந்த மாதவன் என்னும் பாதகனைப் பின்தொடர்ந்து

அபாயவிடத்திற்கு வெகுவிரைவாக வந்து கொண்டிருந்தாள். இவள் சீக்கிர வருகையிலேயே திருஷ்டி கொண்டிருந்த துஷ்ட கூட்டத்தாரில் கோவிந்தன், குணசுந்தரம் விரைந்து வருவதைத் தூரத்தே யிருந்து கண்டதும், சட்டெனத் தங்கள் மோட்டார் வண்டியின் அருகில்விழுந்து அபாயம் அடைந்தவனைப்போல் கிடந்தான். மைனர் குழந்தை வேலப்பரேறு, மெல்லிய இளந்தளிர்க்கொடி சிறுகாற்றால் அலைப்புண்டு இருபக்கத்து சாய்ந்து அசைவது போலசைந்து ஒயிலான நடையுடன் செம்பஞ்சுசூடிச் சிவந்த அவள் அரும்பாதங்கள் அடிவருந்த நடந்துவரும் அழகையும், இந்திராணியும் நாணும் எழிலுருவையும், கலைமகள் காதலுறுவனப்பையும் கண்டு ஆசையெனும் ஆவேசம், அவளைக்காணும் காட்சியென்னும் மந்திரத்தாலேவப்பட்டு வெகு உக்ரத்தோடு நிலைதாக்கி நின்றது. அவள் சம்பித்ததும், இராகுவால் பிடிக்கப்பட்ட கலாமதி துக்கத்தால் துலக்கமின்றித் தோற்றத்தால் வேறுபட்டுக் காணுவதுபோல், அன்றலலர்ந்த செந்தாமரைபோன்ற அவள் திருமுகம், துக்கத்தால் சோர்ந்து, மந்தகாசமென்பது சென்றவிட மறியாதொழியினும், பொலிவுகுன்றாது மாசுபடிந்த மாணிக்கமெனத் தோன்றிற்று. இவ்வின்பத் தோற்றத்தைக் கண்டதும் மேலும் ஆசையதிகரித்துத் தான் இனிச் செய்யப்போகும் செய்கைக்கு ஒரு விதத் தைரியமுங் கொடுத்தது. இவ்வனம் மைனர் மனத்தை அலைத்து இவ்விதத் துர்க்கிருத்தியஞ் செய்யத் துணிவு கொடுத்தது அவன் குற்றமல்ல. இணையிடற்று விளங்கும் குணசுந்தரத்தின் பேரழகின் பெருக்கேயாகும். வேகமாய் வந்த குணசுந்தரம், துக்கத்தால் தூண்டப்பட்டு விஜயத்தை விரைவிற் காணும் ஆத்திரம் அதிகப்பட, இருட்டு வேளையானதால், விழுந்துகிடக்கும் கோவிந்தனை விஜயனெனக் கொண்டு, என் ஆருயிரனைய விஜயா! உனக்குமா! இக்கதி சம்பவித்தது;

திருவருளுக்குச் சம்மதந்தானோ! நல்லோர்க்குத் துன்பம் நேருங் காலத்து அருகிருந்து காப்பதாகக் கூறிய கடவுள் வாய்மையும் தவறியதோ! என் அன்பின் விஜயமே! நீர், நான் விவாகத்திற்குச் சம்மதிக்காதவரையில் இறந்துபடுவேன், என்றபோது, நான், அதற்கு நீர், அஞ்சாதிர். என்னுயிரும் உடலும், உமக்குச் சொந்தமென்று உறுதி கூறியிருந்தும் நீர் இவ்வாறு இறக்கத்துணிந்ததேன்? விதிவழி யென் பிராயின் நானும் அக்கொடிய விதிக்குட்பட் டுயிர்துறக்கிறேன். என்று கூறி வாய்விட்டுத் துக்கித்து விஜயத்தைக் குனிந்துக் கையால் வாரத் துணியும் போது, குற்றமற்ற ஆட்டின்மீது கொடும் புலி பாய்வதுபோல் மைனர் குணசுந்தரத்தின் மீது பாய்ந்து, அவள் சத்த மிடாதவகை வாயில பந்து வைத்தடைத்தான். வண்டியும் வேகமாய்ச்சென்றது. பத்து நிமிஷங்களுக்கெல்லாம் அனைவரும் பெரும்பதி சேர்ந்தனர். முன்னமே தயாரிக்கப்பட்டிருந்த மாடிவீட்டின் மேலுள்ள தனியறை யொன்றில் விரிக்கப்பட்டிருந்த துய்ய பஞ்சணை யொன்றில் கொண்டு கிடத்தி வாயில் வைத்த பந்தையும் எடுத்தனர். திடும்பிரவேசமாய்த் தனக்குச் சம்பவித்த ஆபத்தால் திடுக்குற்று மிக்கக் கலங்கி அறிவுதடுமாறி குணசுந்தரம் மூர்ச்சை யடைந்தாள்.

# X

## செவிடன் காதில் ஊதிய சங்கத்தொனி

" தனஞ்சிறிய ராயினும் தார்வேந்தர் கெட்டாலும்
மனஞ்சிறிய ராவரோ மற்று."

(மூதுரை)

பஞ்சணையில் கிடந்த குணசுந்தரம் மூர்ச்சை தெளியும் பொருட்டு அறையிலுள்ள நான்கு புறத்துப் பலகணிகளை நன்றாய்த் திறந்து வைத்துக் களைநீங்கும்பொருட்டு முகத்திற் சிறிது பனிநீர் தெளித்து மயில் விசிறியினால் சிறிது காற்றெழச்செய்து உபசரிக்கத் தொடங்கினர். நல்லகாற்றும் குளிர்ந்தநீரும், தன்மீது பட்டமாத்திரத்தில், எழில் என்னும் சாதனத்தைக் கருவியாகக் கொண்டு கைதேர்ந்த சிற்பியொருவன் செய்த உருவத்திற்கு இறைவன் அருளால் உயிர் சிறிது சிறிதாக வருவதுபோல் குணசுந்தரம் களைப்பினின்றும் நீங்கி மெல்லக் கண்திறந்து பார்த்தாள். தனது சிங்காரத்தோட்டத்தின் பிரதேசத்தையும், அங்குநின்றிருந்த மோட்டார் வண்டியையும் காணாது, தான் முன்பின் கண்டறியாத ஒருவீட்டையும், அதில் தன்னுயிரைக் கவரவந்த நமன் தூதுவரைப்போன்ற மாதவன், கோவிந்தன், மைனா ஆகிய மூவரையும் கண்டாள். திடுக்குற்றாள். இதுகனவோ! நினைவோ! என்று கண்களைத் துடைத்துக் கவனித்தாள். உண்மைத் தோற்றமாகவே காணப்பட்டது. என்னே இவர்கள் இங்

வாறு துராக்கிருதமாய்த் தூக்கிவந்ததற்குக் காரணம் யாதா யிருக்கலாம்? மணவாளப்பிரபுவின் மாயச்செயலா! வேணு கோபாலன் விஷமக்கருத்தா! ஒன்றுந்தெரியவில்லையே. இம் மாயச்சூழ்ச்சியை முன்னரே அறிந்திருந்தால் அப்பாதகன் பின்னேடு வந்திருக்க மாட்டேன். உண்மையில் தனக்கு ஆபத்து நேர்ந்திருப்பினும், என்னைத்தனியே வருமாறு விஜயம் தூது போக்கி யிருக்கமாட்டான். அவன் பெருங்கு ணத்தை நான் நன்கறிவேன். ஒருமோட்டார்வண்டி தன்மேல் விசையுடன் மோதவருமளவும் அஜாக்ரதையா யிருப்பதற்கு விஜயன் ஒரு மூடனல்ல. எந்தப் பாதகனே என்னை வஞ்சிக்க நினைந்து செய்த சதிமோசம். இனி எத்தகைய தீங்கு நேரு மோ! யாதுவிளையுமோ! ஜகதீஸா! நீதான் துணை. என்று பெரும் பயத்தால் பீடிக்கப் பட்டவளாகி மெய் சோர்ந்து கோடை காலத்து மயிலெனத் தளர்ந்து வாடினள்.

அந்நிலைமையில் மைனர் அவளருகி லடுத்துக் குணசுந்தரத் தைப் பலவித உபசார மொழிகளால் புகழ்ந்து கண்மணி! கவலைப்படாதே. ஏன் வீணே வருந்தவேண்டும். என்றான்.

குணசுந்தரம், அஞ்சியெழுந்து சினக்குறிப்புடன்: முன்பின் உம்மோடு பேசியறியாத என்னைக் கண்மணி என்று, என் நிலைமை, தன்மை முதலிய வொன்றையும் கவனியாமல், துணிந் துரைக்க வந்த உமது மடமைக்கு வருந்துகிறேன். என்னைக் கேவலம் விலைமாதென்று நினைத்து விட்டீர்போலிருக்கிறது.

**மைனர்** :—சிறிது அச்சமடைந்து என்னைத் தூஷிப்பதில் பயனில்லை. என் சொந்தபுத்தியால் நான் உன்னைக் கண்மணி யென்றழைக்கத் துணியவில்லை. ஜகன்மோகனகார தேஜோ வதியாய் விளங்குகின்ற உன் பேரழகின் பெருக்கில் மயங் கிய வழி தவறியதால் நேர்ந்த பிழை. குற்றம் என்னுடைய தாகுமோ!

**குண** :—உமது வஞ்சமொழி வெகு நஞ்சா யிருக்கின்றது.

உலகிலுள்ள என்போன்ற அழகிகளெல்லாம் நும்பொருட்டுத் தோன்றாதிருக்கவேண்டும் போலும். தோன்றினால், நும்போன்ற காமுகரால் வஞ்சிக்கப் பட்டு நாங்கள் கற்பிழந்து கலங்குறவேண்டுமோ!

மைன:—அழகென்பது பூர்வபுண்ணியப் பயனால் கருணாநிதியாகிய கடவுளருளால் அளிக்கப்பட்டதோர் வரப்பிரசாதம். இதை, என்போன்ற ஈனர்களுக்கு, அருளும் அன்பும் நிறைந்த குணநிதிகளும், செல்வச் சீமாட்டிகளுமாகிய நீங்கள் சிறிது கடைக்கணிப்பதனால் வரும் ஏதமொன்றுமில்லை. உங்கள் மனந்தான் இறங்கவேண்டும் என்றான்.

குண:—இது காமுகரின் ஒருவகைத் தந்திரம். பெண்களின் பேரழகை வியந்து புகழ்ந்தால், அவர்கள் மதிமயங்கித் தமது கருத்துக்கு இணங்கி விடுவாரென்று கூறும் பசப்பு மொழி. இது அறிவிலாப் பேதைப் பெண்களுக்குப் பொருந்தும். கற்புடைமங்கையர் தமது பிராணனிழக்குந் தனையும் தாங்கொண்ட கற்பு நெறி தவறார்.

மைன:—பெருங்குலத்துதித்த பெருமாட்டீ! நீ இவ்வாறு என்பால் சிறிதும் இரக்கமின்றி வன்மனங்கொண்டு விடாப்பிடியாய நிற்பது உனது அழகுக்கும், பெருந்தன்மைக்கும் பொருந்தியதல்ல. நீ பிடிவாதம் செய்யுந்தனையும் என் மனோதயத்தை அதிகப்பட்டு துக்கத்தால் வருந்தக் கூடியவனாவேன்.

குண:—நீர் வருந்துவதனால் எனக்குவரும் நஷ்டமென்ன? பிறர் வாழ்க்கைக்குரிய ஒருகுலமகளை அவள் சம்மதமின்றி வஞ்சித்துத் துராக்கிருதமாய்த் தூக்கிக்கொணர்ந்ததுமன்றிப் பலாத்காரமாய் காவல்வயப்படுத்திக் கற்பழிக்கக் கண்மணியென்றும், சாற்பெருமாட்டியென்றும், உயர்குலச் செல்வியென்றும், வீணே வருணித்து மொழிவது உமது குலத்திற்கும் தன்மைக்கும் அழகாயிருக்கிறதா!

மைன :—உமது நன்மை நாடி என்னாலியன்ற உபகாரத்தைச்செய்ய நினைத்தே இக்காரியத்தை நிகழ்த்த துணிந்தது. வைரத்தை சொர்ணத்தில் வைத்தழுத்தினாலன்றோ! சுடர்விட்டொளிதரும். இரும்பில் வைக்கத்துணிவது அறியாமையன்றோ! அதுபோல், நீர் அன்பின்காதலனாகக் கொண்ட விஜயத்தின் ஏழ்மையை நன்கறிவேன். உலகமுமறிந்ததே. அத்தகைய ஏழையை பொருளற்ற பேதையை நீர் கணவனாக் கருதி நிற்பது உமது கனத்திற்கு இழிவேயாம். அறியாதார்க்குத்தெளியச்செய்வது உபகாரிகள் கடமை. அதுபற்றி இந்நன்மை. செய்யத்துணிந்தது. உண்மை உணர்ந்த பின் இனித் தயவுசெய்யத் தடையிராதென்று நம்புகின்றேன். என்றான்.

குண :—தன் உயிரிலும் உயர்வாகக் கருதி, அன்பின் களஞ்சியமாகக் கொண்ட அறிவுடைய விஜயனை மைனர், தனது செல்வச் செருக்கால். இழிவு தோன்றத் தாழ்த்திக் கூறி வசை மொழிந்ததற்குப் பொறாது மெத்த வருந்தி மிக முனிந்து மைனரை நோக்கிக் குனிந்தபார்வையில், நான் நிலையற்ற செல்வத்தைப் பெரிதாக ஒரு பொழுதும் விரும்புகின்றவளல்ல. இது அறிவற்ற மூடர்செயல். இன்றைக்கிருந்து நாளைக்கொழியும் சகடக்கால் போன்ற பொருள் உமக்குப் பெரிதாக விருக்கலாம். ஏழையாயிருப்பவனுக்கே, கல்வியறிவும், உயர்ந்த குணமும், சன்மார்க்கச்செயலும், பரிசுத்தத் தன்மையும், ஒழுக்கமேம்பாடும், சிறந்த பேரெண்ணமும் சொந்தமாகும். இக்குணங்களில் விஜயம் சிறிதும் குறைந்தவனல்ல. ஆனதால், அவனே என்இன்னுயிர் நாயகன். என்று மொழிந்தாள்.

மைன :—ஒழுக்கமும், கல்வியறிவுமுடைய கணவனைக் கொள்வதால் நீ யடைவது வறுமையுந் துன்பமுமன்றிச் சுகமென்பது முயற்கொம்பாம். என்போன்ற பெருந்தனிகனைக்

நாமவித்தால் தனமும், கௌரவமும், கண்ணியமும் உண்டாகும். அம்மட்டோ! வைரமிழைத்த பொன்னாபரணங்களும் பொன்பட்டாடைகளும் பூணலாம். ஏவியபணிகளுக்கு ஏவலாளிகள் ஏனென்று கேட்கக் காத்திருப்பர். மோட்டார்ச் சவாரியும், கடற்கரை வாசமும், நாகரிக வைபவமும் நாம் சொன்னபடி கேட்டு நடக்கும். இன்பம் நமக்கே சொந்தம். அறுசுவையுண்டியை நினைத்தநேரம் உண்ணவும், ஆனந்தமாய கேளிவிலாசத்தை நினைத்தபடி நடத்தவும், சொந்தமுண்டு. சுருங்கச்சொன்னால் பணமிருப்பவனுக்கு எதுவும் கஷ்டமல்ல. "கைத்துடையான் காற்கீழொதுங்குமுலகு." என்று பட்டாங்கிலுள்ளதும் நீ அறிவாயன்றோ! என்றான்.

மைனர் தனது சமர்த்தெல்லாங் காட்டி அருமையாக மொழிந்த இனியவார்த்தைகளையெல்லாம் குணசுந்தரம் செவிடன் காதிலூதிய சங்கோசையைப்போல் வியர்த்தமாகச் செய்தாள். அவன் அருட்பார்வையையும் இரக்க மொழியையும் பொருட்படுத்தவில்லை. கற்புடைய மாதரைக் காமுகர் அமுத மொழிகள் என்ன செய்யும்? இரும்பைக் கரையானரிக்க முடியுமா! தனக்குற்ற நிலைமையையும், மைனர் மொழிந்த தகாமொழிகளையும், தன்னைச்சூழ்ந்துள்ள ஆபத்தையும் குறித்து நினைக்கும்போது அவள் நீலநெடு விழிகளினின்றும், நித்தில மொப்பக் கண்பனித்தாரைகள் வழிந்து கன்னத்தைக் கழுவி மார்பை நனைத்தோடியது. இவள் தீன நிலைமையையும், துக்கஸ்வரூபத்தையும் கண்ட மைனரும் சற்றிரங்கி ஒதுங்கினன். இச்சந்தர்ப்பத்தில் மாதவன் மைனரைக்குறுகி அவன் செவியில் ஏதோ மெதுவாகக் கூற அவன், அங்ஙனமாயின் நாளை யிரவு 9 மணிக்கு என் கருத்துக்கிணங்கச்செய்யத் தவறக்கூடாது என்று மொழிந்து தன் மாளிகை சென்றான்.

## XI

## தனிமையும், புலம்பலும்

" எண்ணாத எண்ணமெல்லாம் எண்ணியெண்ணி ஏழைநெஞ்சம்
புண்ணாகச் செய்ததினிப் போதும் பராபரமே"

**(தாயுமானவர்)**

ஜமைனர் தன்னைவிட்டு விலகியதும் தன்னைக் கவர்ந்திருந்த அச்சம் நீங்கியதுபோல் தோன்றிற்று. அப்பொழுது இரவு மணி 11 அடித்து பத்து நிமிஷமாயிருந்தது. குணசுந்தரம் துக்கத்தின் காரணமாக வந்த களைப்பின் மிகுதியால் சோர்ந்துபட்டாள். இச்சமயத்தில் கோவிந்தன் குணசுந்தரத்தைக் குறுகி அம்மா! ஜமைனர் குழந்தைவேலப்பர், தங்களை எத்தனை விதமாகக் பஞ்சிக்கெஞ்சிப் பலவாறு புலம்பிக் கேட்டும் தாங்கள் இணங்காது ஒரேபிடிவாதமாக யிருந்து விட்டீர்கள். இதுசரியல்ல. அவர் அழகென்ன? ஆண்மையென்ன? செல்வச் சீமான்களில் கண்ணியப்பிரபு. உயர்ந்த குலத்தார். அதிலும் செல்வமிக்க ஜமீன். கல்வியும் அதனை யொட்டிய ஆங்கில நாகரீகத்திலும் சிறப்புற்றவர். பணத்தைப் பிடி பிடியாய் அள்ளிக்கொடுப்பதில் வள்ளலைப்போன்றவர். இத்தகைய கண்ணியவானைக் காதலனாகப் பெறும் கன்னிகையன்றோ அதிர்ஷடத்தில் உயர்ந்தவள். இவ்வதிர்ஷ்டம் தங்களைத் தானாகத் தேடிவந்தும் தாங்கள் வெறுப்பது, வலுவில் வந்த சீதேவியைக் காலாலுதைப்பதுபோலிருக்கிறது. உண்மை கூறி

னேன். என்று பன்னிப்பன்னிக்கூறினன். அவன் அத்தனை சிரமப்பட்டுச் சொல்லியஒரு வார்த்தையைக்கூட குணசுந்தரம் செவியில் போட்டுக்கொண்டாளில்லை. "தனஞ் சிறியராயினும் பார்வேந்தர் கெட்டாலும் மனஞ் சிறியராவரோ" என்ற மூதுரையின் கருத்திற்கிலக்கியமாய் விளங்கினள். தன் தாய் தந்தையரைப் பிரிந்ததினாலும், தனக்கு நேர்ந்த அவமானத்தினாலும், மிகுந்த மனோவேதனைக்குள்ளாகித் துக்கித்தாள். தொண்டை யடைத்துப் பேசக்கூடச் சக்தியற்று, மேலும் தளர்ச்சியுற்று அயர்ச்சிமிகுதியால் அங்ஙனமே அப்பள்ளியில் சாய்ந்துவிட்டாள். கோவிந்தன், குணசுந்தரம் பதிலுரையாது மௌனங் கொண்டதைக் கண்ணுற்று, நாம் மைனரைப் பற்றிக்கூறிய புகழ்ச்சி மொழிகளால் மைனர்மீது மயல் கொண்டுவிட்டாள் போலிருக்கிறது. நாணத்தால் பதிலுரைக்கத் துணிந்திலள்போலும்; மௌனம் அரைச்சம்மதமென்பார்கள். என்று கருதிக்கொண்டு நாளைக்கு மைனரிடத்தில் முதல்தரப் பரிசு பெற்றுவிடலாமென்று மனோராஜ்யம் செய்துகொண்டான்.

அருகிலிருந்த மாதவன் கோவிந்தா! வெகுநாழிகையாய் விட்டது. இவ்வம்மணிக்கு உணவுகொண்டு வரும்படி வேலைக்காரிக்கு எச்சரித்தனையா என்றான்.

**கோ**:—மாதவா! இதோ! ஒருநொடியில் கொணரும்படி செய்கிறேனென்று கீழேசென்றான்.

மாத:—குணசுந்தரத்தை நோக்கி அம்மணி! கோவிந்தன் கூறிய அனைத்தும் உண்மையே. மைனர் பொருளை மாரி போல் வழங்கும் பாரிபோன்றவர், தங்கள் கீறியவரம்பு கடக்கமாட்டார். நல்ல குணவந்தர். எல்லாவற்றையும் அனுபவத்தாலறிவீர்கள். நீர் நாளையேனும் அவர் சொல்லுக்கு இரண்டுசொல்ல மாட்டீர்களென்று நம்புகிறேன். சுகமாயிருக்கட்டும் என்றான்.

குண:—இவ்வயர்ச்சி மிகுதியிலும், மாதவன்சொல்காதில் வீழ்ந்ததும் சீறிச்சினந்தெழுந்து குடிகெடுக்கும் பதரே! வாயை மூடு. என்னெதிரில் நில்லாதே. உமது செயலையும், மைனர் பெருமையையும் பற்றிப்புகழ்வதைக் கேட்பவாரார்? கேவலம் ஒருபெண்ணை அவள்சம்மதமின்றிப் பொய்புகன்று வஞ்சித்துக் கொணர்வது ஒரு ஆண்மையாகுமா! பேடிகள் கேவலச் செய்கையன்றோ இது. உங்கள்வஞ்சிப்பும், செல்வச் செருக்கும் என்னைஎன்னசெய்யும்? புலிபசித்தாலும்புல்லைத் தின்னுமா! என்று மிகக்கடிந்து சற்றுரத்த குரலில் அதட்டிக்கூறினள்.

இது கேட்டதும் மாதவன் அஞ்சிப் பதில் ஏதுங்கூறத் தோன்றாது மௌனமேற் கொண்டான். இதற்குள் வேலைக்காரியும் உணவுப் பாத்திரத்துடன் மேலே வந்தாள். மாதவன் அவளைநோக்கி மெதுவாகப் பார்வதீ! இவ்வுணவை வட்டித்துவிட்டு வீட்டுக்குச் செல்லாது இன்றைக்கு இங்கேயே சயனித்துக்கொள். மெத்த ஜாக்ரதையாயிரு. கூறியது நினைவிலிருக்கட்டும் நானும். மாதவனும் நாளைக்காலையில் வருகிறோம். உஷார்! என்று கூறிக் கீழேசென்றனர். குணசுந்திரத்திற்குக் கொஞ்சநஞ்சமிருந்தபயமும் ஒழிந்தது. ஒழியினும், மனச்சாந்திமட்டும் உண்டாகவில்லை. மேலும் ஆலோசனையிலாழ்ந்தாள்.

பார்வதி:—மிக்கப் பணிவுடன் மெத்த விநயமாக அம்மா! வெகுநாழிகை யாய்விட்டது. சற்றுணவு கொள்ளுங்கள். தங்களுக்கு யாதோர் துன்பமும் நேராது. கடவுள் காப்பாற்றுவார். அகதிக்குத் தெய்வந்துணை நிற்குமென்பது பொய்யாவாசகம். எழுந்திருங்கள்என்றாள். குணசுந்தரம்படுத்தபடியே கைச்சாடையினால் உணவு வேண்டாமென்றாள். பார்வதி பதிலுரைப் பதில் பயனில்லை யென்றறிந்து கொண்டு, ஏதுங்கூறாமல், தெருக்கதவு, மாடிக்கதவு மூத

லானவைகளை நன்றாகக் கவனித்துத் தாளிட்டுவிட்டுக் குண சுந்தரம் சயனித்திருக்கும் அறையின் ஓரிடத்தில் வந்து சயனித்துக்கொண்டாள்.

மணி ஒன்றடித்து 30 நிமிஷமாயும் குணசுந்தரம் தூங்கினா ளில்லை. மனம் சாந்தியடைந்து மனக்கிலேசமும், வீண் லோசனையும் ஒழிந்தாலன்றோ! கண்ணுக்கு நித்திரை வரும். குணசுந்தரம் பெருந்துக்கத்திற்கும், சிந்தனைக்கும் ஆளா ஞள். தன் விதியைப்பற்றியும், நேர்ந்த விளைவைப்பற்றியும், தோழி கமலாவைப்பற்றியும் பலவாறு நினைந்து நொந்தழு தாள். தன் மெய்யன்புக்கு அணிகலனாக விளங்கிய விஜ யத்தை நினைத்தபொழுது துக்கத்தால் அவள் இருதயம் வெடித்து விடும்போலிருந்தது. என் நிலைமையை அவன் உணர்ந்தால் என்ன நினைப்பான்? கற்பிழந்தவள் எனக்கரு துவனோ! என் மனோ நிலைமையையும், உறுதியுடைமையையும் உள்ளபடி உணர்ந்தவனானதால், அங்ஙனம் நினைக்க மாட் டான். எனக்கு நேர்ந்த கதிக்கு மிக வருந்துவான். அந்தோ! பாவிகள் என் பிராணபதி, மனம் பதைபதைத்துத் துக்கங் கொண்டு துடித்தழச் செய்துவிட்டார்களே. பிறந்தது முதல் என்னை விட்டு நீங்காத என் பிரியமுள்ள அன்னை, இன்று என் பிரிவினால் உயிர் துறந்தனளோ! அந்தோ! இனி நான் என்செய்வேன். என்பால் வைத்த உள்ளன்பு என்றும் மாறாத என் அருமைத் தந்தை எப்பாடு படுகின்றனரோ! என் உயிர்த்தோழி கமலம் எவ்வாறு வருந்துகின்றனளோ! ஆ! ஈசா! இது உன் திருவுளச் சம்மதமா? அபலையாகிய எனக்கா இக்கதி நேரவேண்டும்? தீனசரண்யனும் ஆபத் பந்துவுமாக விளங்குவது என்போன்ற தீனர்களைக் காத்தற் பொருட்டன்றோ? நாற்காற்பிராணியாகிய கஜேந்திரனென் னும் யானை முதலை வாய்ப்பட்டபோது ஆதிமூலமே! உன்ன பயம் என்றழைத்த மாத்திரத்தில், அஞ்சேல் என்று வந்து

காத்தருளியதேவர், அடியவள் பொருட்டு அங்ஙனம் வந்து காத்தலடாதோ ! என்று கூறி நொந்து துக்கித்து நித்திரை யின்றி இரவெல்லாம் கண்ணீர் வடித்துப் பஞ்சணை முழுதும் நனைத்து விட்டாள். இறுதியாக இரவு 3 மணிக்குப் பின் கண்சோர மெய்மறக்க அங்ஙனமே நித்திரைபோய் விட்டாள்.

# XII

## துக்கமும், சிறையும்

"ஊழிற் பெருவலி யாவுள மற்றொன்று
சூழினுந் தான்முந் துறும்."

(திருக்குறள்)

மணியெட்டடித்து 20 நிமிஷமாயிற்று. உணவு உட்கொள்வதற்காகக் குணசுந்தரம் இன்னும், சமையலறைக்கு வந்தானில்லை. சரியாக எட்டுமணிக்கெல்லாம் தவறாது வந்து வழக்கமாய்ச் சாப்பிடக் கூடியவன், இன்று அரைமணிநேரம் அதிகப்பட்டும் வாராதிருப்பதற்கு யாதுகாரணம்? உடம்புக் கேதேனும் குணமில்லாமலிருக்குமோ! எதற்கும் நாமே நேரில் சென்று பார்த்து வருவோமென்று குணசுந்தரம் இருக்கும் அறைக்கு அவன் தாயார் "**விசாலாட்சியம்மாள்**" வந்தாள். அறையில் குணு காணப்படவில்லை. வெளியில் எங்கேனும் சென்றிருப்பனோ! மாலை 6 மணிக்குமேல் அவன் வெளியில் செல்லும் வழக்கமில்லை. ஒருகால் உள்ளறையில் சோபாவிற் சாய்ந்து, தூங்கிக் கொண்டிருப்பனோ என்னமோ தேடிப்பார்போம் என்று. அறையெல்லாம் தேடினள். குணசுந்தரம் இருந்தாலல்லவோ அகப்படுவான். வீட்டிலுள்ளவரையும் விசாரித்தாள் அவர்கள். நாங்கள் ஒருவரும் பார்க்கவில்லையென்றார்கள். தாளாதவளாய்த் திடுக்கிட்டாள். இது என்னமாயமென்று வியந்தாள். விம்மினள், நெட்டுயிர்ப்

படைந்தாள். இதற்குள் தோழி கமலம் வரவே, அவ்வம்மாள் என்னடி கமலம்! குணசுந்தரம் எங்குச்சென்றாள்? அவளறையிற்கூடக்காணோமே! நீ பார்க்கவில்லையா! என்று மிகபரபரப்புடன் கேட்டாள். தோழி கமலம், அம்மா! நாங்களிருவரும் நமது தோட்டத்தில் உலாவிட்டு $6\frac{1}{2}$ மணிக்கெல்லாம் வீட்டுக்குவந்து விட்டோம். குணசுந்தரம், தன்னறையின் ஜன்னலண்டை குந்திக்கொண்டு ஏதோ! ஆலோசித்துக் கொண்டிருந்தாள். நான், என்சொந்தபந்து அடுத்த தெருவில் வந்திருப்பதாகக் கேட்டுப் பார்த்து வரச்செல்கிறேன். நான் போகும்போது, மணி ஏழு, என்றாள். இது கேட்டதும், நெஞ்சமிகவருந்தி இனித்தாமதிப்பது சரியல்லவென்றுஅருகிலுள்ளவேலைக்காரனைஅழைத்து நீ வெகுவேகமாகச் சென்று வீட்டெஜமானராகிய முதலியாரவர்களை விரைவிலழைத்துவா! ஆ! என் கண்ணே! குணசுந்தரம்! எங்கு சென்றாயடி! எங்களை விட்டுத்தனித்து ஒருபோதும் செல்லாதவளாயிற்றே. இன்று மட்டும் யெங்குசென்றாய்! நீயாக எங்கும் செல்லமாட்டாயே! யாரோ! எந்தப்பாவிகளோ! உன் அழகுக்கும், அமைப்புக்கும், அளவற்ற ஆபரணத்திற்கும் ஆசைப்பட்டு வஞ்சப்படுத்திக் கவர்ந்து சென்றிருக்கவேண்டும். கவர்ந்து சென்றவர் இதற்குள் உன்னை எவ்வாறு இம்சித்தார்களோ! அது பொறாத நீ நாணத்தால் உயிர் விட்டனையோ! அல்லது, அவர்களே கொன்றுவிட்டனரோ! ஆ! கடவுளே! நாங்கள் இனி என்செய்வோம்? யாரைக் குணசுந்தரம் யென்றழைப்போம். இக்கொள்ளை கொடுப்பதற்கா நாங்கள் உன்னைப் பெண்ணாகப்பெற்று, இதுவரையும் நாளொருமேனியும்,பொழுதொருவண்ணமுமாகவளர்த்தது? அந்தோ! தெய்வமே! இது உனக்கு சம்மதமோ? இனி ஒரு பொழுதும் இவ்வுயிரை வைத்துக் கொண்டு நானிருக்கமாட்டேன். இதோ! இறக்கின்றேன், என்று பதறிக் கதறிக் கண்

ணீர் ஆறாய்ப்பெருகத் துக்கித்துப் புலம்பினள், இதற்குள் குணசுந்தரத்தின் தந்தை முத்துவேலப்பரும் அங்குவந்து சேர்ந்து விசலாட்சியின் துக்க கோலத்தைக்கண்டு விஷயமுணர்ந்து மெத்தநொந்து அந்தோ! என் ஆருயிர்ச்செல்வமே! என்னருங் கண்மணி! என்கலிதீர்க்கவந்த கற்பகமே! நீ எங்குசென்றாயடியம்மா! நான்கொண்டவாழ்வு இவ்வளவுதானா! என் எண்ணமெல்லாம் மண்ணாபொழிந்ததோ! என்று வாய்விட்டுக் கூறிப்பெருங்குரல் பாய்ச்சி ஒருசிறு பெண்ணைப்போல் விம்மி விம்மி அழுதனர். தம்பதிகளிருவர்களின் இப்பேரழுகையைக் கேட்ட வேலைக்காரரும், பந்து ஜனங்களும், அக்கம்பத்தாரும் கும்பல் கூடி அவரழுகைக்குத் தாளாது தாங்களும் சேர்ந்தழுது துக்கித்தனர். விஷயம் ஒருவர் இருவர்க்குத் தெரிய நொடிக்குள் காட்டுத்தீப்போல் ஊர்முழுதும் பரவியது. கேட்டாரனைவரும் குணசுந்தரம் காணாதொழிந்ததற்கு விசனித்தார்கள். பலரும் பற்பல விதமாக வியாக்கினம் செய்தனர். எவரும் உண்மைகண்டுரைத்தார்களில்லை. எங்கும் இதேபேச்சாயிருந்தது. வீடுமுழுதும் ஒரே அழுகையாய்த்துக்கம் துலங்கிக்கொண்டிருந்தது. இரவு முழுதும் யாரும் தூங்காமல் புலம்பலும் பிதற்றலுமாய் இருந்து கொண்டிருந்தனர். மூர்ச்சையடைந்த விசாலாட்சியம்மாளுக்கு தகுந்த உபசாரஞ்செய்து மூர்ச்சைதெளிவித்தனர். முத்து வேலப்பருக்குப் பலவித சமாதானஞ் சொல்லி ஒருவாறு சாந்தப்படுத்தினர். இதற்குள் கோழியுங்கூவிற்று. சிறிது நாழிகைக்கெல்லாம் நன்றாயும் விடிந்தது. சூரியனும் உதயமானான். சாந்தப்பட்டு ஒருவாறு தெளிந்த முத்துவேலப்பர், தம்பந்துவொருவரை நோக்கிப் பார்த்தீர்களா! நடந்த அதிசயத்தை. நல்லகட்டுக் காவலோடுங்கூடிய நம்ம வீட்டிலேயே இவ்வளவு துணிகரமாகப் பெண்சோரஞ்செய்த கள்வர்களின் சாமர்த்தியம் வெகுநன்று. இனி யெதுவும்

செய்ய அஞ்சார் ? நாம் இனிமேல் வெகுஜாக்ரதையாய்த் தானிருக்க வேண்டும் என்று கூறினர். ஆம் மெத்த ஜாக்ரதையாய்த்தானிருக்கவேண்டுமென்று கேட்டவர் பதிற் கூறிக் குணசுந்தரத்தைத் தேடும்படி பலவிடங்களுக்கும் ஆளனுப்ப ஏற்பாடு செய்தனர். தன் வீட்டில் நடந்தஇக்கல வரத்தை இதுவரையும் வேணுகோபாலன் அறிந்தானில்லை. வெறிக்கக் குடித்துவிட்டுக் கூத்தியாருடன் நாடகம்பார்த்து விட்டு மெய்மறந்து பகல் 9 மணிவரையிலும் தூங்கிவிட்டு எழுந்து வீட்டுக்குவருகிறவனுக்கு எங்ஙனம் தெரியும் ? வீட்டுக்கு வந்தபின்தான், விஷயமுணர்ந்தான். திடுக்கிட்டான். வருந்தினன் ; இவன் திடுக்கிட்டதும், வருந்தியதும் குணசுந்தரத்தின் மீதுள்ள சகோதரவாஞ்சைப்பற்றியல்ல. இனி மணவாளனுக்கு என்ன பதில் சொல்வது ? வீண்செலவுகளுக்கு வேண்டியபணத்திற்கென்செய்வது ? என்பதுபற்றி யென்க. இதற்கொருதந்திரஞ்செய்தாகவேண்டும்? இல்லாதவரையில், மணவாளப்பிரபு, நம்மை மோசக்காரன் என்று கருதி நம்மீது அருசையும், அவநம்பிக்கையும் கொள்வர். அதுநேராமுன் நிரபராதியும் நற்குண வந்தனுமான விஜயன்மீது இப்பழியை யேற்றிவிட்டால் அவ்வகள் நம்மை பாதிக்கமாட்டா கோபமும், துக்கமும் குடிகொண்டுள்ள இந்நிலையில் தந்தையும் நம்புவர். மணவாளனும் உண்மையெனக்கொண்டுத் தமக்குப் பகைவன் ஒழிந்தானெனத் தெரிந்து சந்தோஷிப்பன். நமது வருவாய்க்கு அதிக பங்கமுநேராதென்று தீர்மானித்து நாம்கொண்ட இந்தயுக்தி வெகு குயுக்திதானென்று மெதுவாகத்தந்தயை நோக்கித் தாங்கள் கள்வர்மீது, பழி சுமத்துவது வீணனகாரியம். கவலைப்படுவதும் அப்படியே. மாலை6மணிவேளையில்கடியகாவலும், பந்தோபஸ்தும்வாய்ந்த நமதுமாளிகையில், கள்வர்வந்து பெண்ணைத் தூக்கிப்போவது ஒருபொழுதும்நடவாதகாரியம். திருடவந்தவர் பொன்

பொருள் முதலிய பெரும்பொருள்களைக் கொள்ளை கொண்டு செல்வர். அதுவும் இரவு ஒரு மணிக்குமேல். அதுவே பன்றிப் பெண்ணைத்திருடக் காரணமில்லை. இதுவெளித் திருட்டல்ல. உள்திருட்டு. இதுசெய்தவரை நானறிவேன். தாங்கள்மட்டும் நம்பவேண்டும். இச்செயல் அவன் செய்யத் துணியானே என்று நினைக்ககூடாது! காமவெறிகொண்டவர், எது வேண்டினும் செய்யச் சிறிதும் பின்வாங்கார். அதிகம் பேசுவானேன்? குணசுந்தரத்தை இங்ஙனம் மாயமாய்க் கவர்ந்து யாதும் அறியாதவன் போலிருப்பவன், விஜயனென்று சொல்லுவேன். சும்மா சொல்ல வரவில்லை. தக்ககாரணமுங்காட்டுவேன். அக்காரணமாவது:—“குணசுந்தரத்தை நமது மணவாளப்பிரபு விவாகம் செய்துகொள்ளும் காரணமாக நடக்கும் பிரஸ்தாபத்தில் உறுதியேற்பட்டுவிட்டால், உரிமைக்குரிய தனக்கு அப்பாத்தியம் ஒழிந்துவிடும், அதன்பின் நமது அபிமானமும் இழக்கநேரும் பின் நாம் செய்வதென்ன? இக்குறைகள் நேராதற்கு முன்னமே, நாம் குணசுந்தரத்தைத் தந்திரமாகக் கவர்ந்து அவளைப் பற்றிக் கெஞ்சிக் கேட்டுச்சம்மதி பெற்றுக்கொண்டுவிட்டால் அதன்பின் எல்லாம் சரிப்பட்டுவிடும் என்பதே.” நான் சொல்வது பொருத்தமா! பழியா! என்பதைத் தாங்களும் பிறரும் சிந்தித்துப்பாருங்கள். என்று பொய் பேசினாலும் பொருந்தப் பேசவேண்டுமென்பதுபோல், தனது சொல்வன்மையினால் பொய்யை மெய்யாகப்பேசினான். அது சமயத்தில் ஆழ்ந்து சிந்திக்காமலும், சொல்வோனது தன்மையுணராதும் எதையும் நம்பும் சுபாவத்தினராகிய முத்துவேலப்பர் முதலியோர் வேணுகோபாலன் கூறியது முற்றிலும் பொருத்தமாகத்தானிருக்கிறது. விஜயம் செய்து தானிருப்பன் என்று தீர்மானத்திற்கு வந்தனர். ஏழையானவன் பிள்ளையார்கோயில் ஆண்டியானதாலும், ஏழைசொல் அம்ப

லம் ஏராது பற்றியும், ஊழ்வலி அங்ஙனம் நேர்ந்ததினுலும் வஞ்சக மென்பதைக் கனவிலும் நினைந்தறியாத விஜயன் வேணுகோபாலன் பொய்கூற்றுக்கு இலக்காய், கள்வரும் கொடிய கொலைகாரரும், தீயவஞ்சகரும் குடிகொண்டுறை யும் சிறைச்சாலைக்குத் தானும் செல்ல வேண்டியவனுனன். என்னே ! விதியின் விசித்திரம்.

## XIII

## பிள்ளையார் பிடிக்கக் குரங்கானது

"தேரான் பிறனைத் தெளிந்தான் வழிமுறை
தீரா விடும்பை தரும்."

(திருக்குறள்)

நவநாகரிகப் புதுமைக் குரிய அலங்கார வகைகளில் ஒரு சிறிதும் குறைவின்றிச் சிறந்து விளங்குகின்ற தமது மாளிகையின் மேற்குப் பக்கத்துக் கூடத்தில் புலித்தோலால் விரிக்கப்பட்டிருந்த சிறந்த ஒரு சோபாவின்மீது ஜமீன் மைனர் இரவெல்லாம் தூக்கமின்றிக் காமத்தின் ஏக்கத்தால் வாடிய முகத்துடனும், தலை மேல்வைத்த கையுடனும், சாய்ந்து கொண்டிருந்தான். அசதியில் சற்று கண்விழித்துப் பார்த்தபோது, தன்னெதிரில் டிக்டிக் என்று அடித்துக் கொண்டிருந்த அன்சோனியா "Ansoniya" ரவுண்ட் கடியாரம் எட்டடித்துப் பதினைந்து நிமிஷமாயிருந்தது. இதென்ன மணியெட்டுக்கு மேலாய்விட்டது, எனக்கூறிக் கொண்டு சாய்ந்த வண்ணமாகவே உட்கார்ந்து கொண்டிருந்தான். அப்பொழுது தனது பரிசாரகன் வந்து அம்மா அவர்கள், அந்தப்புரத்திற்குக் காப்பி சாப்பிட அழைக்கின்றனர். எல்லாம் தயாராய் விட்டது புறப்படுங்கள் என்று வெகு வினயமாகவேண்டினன். மைனர் வீண்கவலையில் மூழ்கியிருந்ததால் வேலைக்காரன் மீது சற்று சினந்து இன்னும் 10 நிமிஷம் பொறுத்துவா போ, என்று அதட்டி அனுப்பினன்.

அவன் அஞ்சி ஒதுங்கி அவ்வாறே வருகிறேன் என்று திரும்பிச் சென்றான்.

அவன் சென்ற மூன்று நிமிஷத்திற்கெல்லாம் மாதவனும், கோவிந்தனும் அங்குவந்தனர். மைனர் அவர்களைக்கண்டதும் சற்று நிமிர்ந்து உட்கார்ந்து என்ன மாதவா? குணசுந்தரம் வழிக்கு வந்தனளா? என்று கேட்டனன்.

**மாதவன்** :—வாராமலென்ன? புதியவிடம். மேலும் துக்கத்தினாலும், வெட்கத்தாலும் வேதனைப் பட்டுக்கொண்டிருக்கிறாள். தக்க சமாதானத்துடன் நல்ல ஆசைவார்த்தை சொல்லி நயமாகப்பேசித் தைரியமூட்டினால் சரிப்பட்டுவிடுவாள். மாதர்க்கிதந்தானே வேண்டும்.

**மைன** :—என்மீது அவள் அன்பும் ஆசையும் கொள்வாளென்று தோன்றவில்லை. ஏனெனில், அவள் பேசும் மிடுக்கும் துடுக்கும் அவ்வாறு காண்கிறது. அவள் கொண்டிருக்கும் எண்ணமும், நிலமையும் அவ்வாறு என்னைக் கொள்ளச் செய்கிறது.

**மாத** :—யாருக்கும் திடீரென்று ஒருவர் மீது அன்பு ஜனிப்பது சுலபமன்று? மேலும், அவள் பெரிய பிரபு குலச்சீமாட்டி. தனது கோபதாபம் முதலியவெல்லாந் தணிந்து மனது ஒருவாறு அமைதிப்பட்டு மெதுவாகக் கூசிக் கூசிப் பேசியபின்னன்றோ ராசிக்கு வரவேண்டும். ஆக்கப் பொறுத்தவர் ஆறப்பொறுக்கலாகாதா? என்றான்.

**மைன** :—ஆறவாவது? பொறுக்கவாவது? அதெல்லாம் என்னால் முடியாது. அவள் இளமையும், அழகையும், நேரில் பார்த்து அவள் நம் கைவசப்பட் டிருக்கும் போது பொறுப்பதெப்படி! நான் இரவு 9 மணிக்கு அங்குவரும் போது குணசுந்தரம் என்வார்த்தைக்கிணங்கி என் சொற்படி நடக்கச் செய்யவேண்டும். அவ்வாறு செய்விக்க உங்களால் கூடுமா? கூடாதா?

**மாத :**—கூடாமலென்ன! சற்று சிரமசாத்தியம். கலைப்பார் கலைத்தால் கல்லுங் கரையு மென்பார்கள். ரகுநந்தனன்பால் கைகேயி கொண்டிருந்த பேரன்பைக் கூனி தனது அரிய யுக்தியாகிய சாமார்த்தியத்தால் கலைத்து அவளைத் தன் சொற்படி கேட்டு நடக்கச் செய்தகதையை இராமாயணத்தில் கேட்டதில்லையா! அதன்படி மெத்த சாகஸம் செய்தாக வேண்டும்.

**மைன :**—என்னமோ செய்யுங்கள். எனக்கொன்றும் தெரியாது. இவ்விரவு யான் கொண்ட ஆவல் எவ்வகையிலும் நிறைவேரச் செய்யவேண்டும். அதுதான் நான் விரும்புவது தெரியுமா! என்றனன்.

**மாத :**—தெரியாமலென்ன! இவ்வளவுந் செய்தநாங்கள் அதனையுஞ்செய்யாது விடுவமோ? எங்கள் பொறுப்பன்றோ அது. மானைக்காட்டி மானைப்பிடிப்பதுபோல் பெண்ணைக் கொண்டு பெண்ணைச் சரிப்படுத்தவேண்டும். எங்கள் தெருவில் வடபுரம் சாரில் இவ்வகையில் கைதேர்ந்த "மைக் கண்ணாள் மாதவி" என்ற கிழவி ஒருவளிருக்கிறாள். அவள் விதவை. இரும்புபோல் இறுகிய மனமுடையவரையும், கல் போன்ற கடின சித்தமுடையவரையும் கணத்தில் தன் சொற்படி கேட்டு நடக்கச் செய்வதில் மெத்தப் பழக்கமுள்ளவள். கூனியும் இவளுக் கீடாக மாட்டாளென்றால் இவள் சாகஸம் சாமானியமானதோ? மெத்த சமர்த்துடையவள். இதுவரையும் இவளால் கெட்டொழிந்த குடும்பங்களனந்தம். இத்தகைய சமர்த் துடையாளைக்கொண்டு இன்றிரவுக் காரியத்தை இனிது நிறைவேற்றி விடுகின்றோம்.

**மைன :**—அப்படிச் செய்வது மெத்தநல்லது. அக்கிழவி வீட்டுக்கு இப்பொழுதே விரைந்து செல்லுங்கள். ஆற்காக வேண்டுவதென்ன?

**மாத :**—அவ்விதவைப் பழங் கிழவி மெத்தப் பேராசைக்

காரி. பெருந்தொகையை முந்திக் கையிலிட்டாலன்றி நமது வேண்டுதலுக்குச் செவிகொடாள். குறைந்தது ரூபா ஐந்நூறாவது வேண்டும் என்றான்.

**மைன:**—இவ்வற்பத் தொகை எனக்கொரு பொருட்டல்ல. விரைவில் காரியத்தைச் சொன்னபடி முடித்தால் போதும். என்று சொல்லி அப்பொழுதே கூடத்திலுள்ள இரும்புப் பெட்டியைத் திறந்து ரூபா ஐந்நூறெடுத்துக் கொடுத்தனன். நம்பனடியார்க்கு நல்காத் திரவியங்கள் வம்புக்கும், கள்ளுக்கும், பரத்தையர்க்கும், வீணுக்கும் விரயமாவது பதிவுதானே! மைனரும் அவ்வகை யியல்பினனே. மேலும்! காமத்தாலன்றோ கவரப்பட் டிருக்கின்றான். காமம் ஒன்று செய்யும்? அறிவையும் மனத்தையும் அறவே கெடுத்துப் பெருந்துன்பத்திற் காளாக்கும். காமத்தால் இறந்தவரும், கெட்டலைந்தவரும் கணக்கி லடங்குவரோ! மைனர் காலை யும் விடலையு மானதால் ஒன்றையும் சிந்திக்காது மனம் சென்றபடி நடக்கலானான்.

**மாத:**—மைனர் தந்த தொகையை வெகுமரியாதையுடன் பெற்றுக்கொண்டு மாலை ஆறு மணிக்கெல்லாம் சரியாய்த் தவறாது வந்து தங்களை அழைத்துப்போகிறோம். தங்கள் மனமகிழும் வகையில் காரியத்தை நிறைவேற்றிவைக்கிறோம். தாங்கள் மட்டும் நாங்கள் வருமளவும் வெளியில் செல்லாது மாளிகையிலேயே யிருக்கவேண்டும். என்று கேட்டு விடை பெற்று வெளியில் வந்தனர்.

**கோவி:**—மாதவா! என்ன சிறிதும் ஆலோசனை யில்லாத காரியத்தில் இறங்கிவிட்டனை! பணம் பெறுவதொன்றைப் பெரிதாகக் கருதினையன்றி எடுத்த காரியத்தைச் சாதிக்கும் சூழ்ச்சியைக் கவனித்தாயில்லை. இரவு 6 மணிக்குள் குண சுந்தரத்தை மைனர் சொற்படி எங்ஙனம் இணங்கச் செய்விப்பது? அவளோ உன்னையும், என்னையும், மைனர் ஜமீனையும்,

சரஸாளிடம் கொஞ்சம் தொகையைக் காட்டினல் வெகு சுளுவில் இது போன்ற காரியத்தை முடித்துத் விடுவாள். வானத்தை வில்லாகவும், மணலைக் கயிருகவும் திரிப்பதில் அவள் நிகரற்ற திறமை வாய்ந்தவள் ? உமக்குந்தெரிந்து தானே.

**கோவி** :—ஆமாம் மாதவா ! நீ இது விஷயத்தில் மெத்தக் கெட்டிக்காரனே. அவள் உண்மையில் அத்தகைய சாமர்த்தியம் வாய்ந்தவளே ! காரியம் தடையின்றிக் கைகூடும். சரி புறப்படு. கடைத்தெருவிற்குச் செல்வோம் என இருவரும் அங்ஙனமே புறப்பட்டுக் கடைத்தெருவிற்குச் சென்று நல்ல மாமிசத் துண்டங்களையும், உயர்ந்த இங்கிலீஷ் சாராயவகைகளையும், மாதுரியமுள்ள நல்ல பழ வர்க்கங்களையும், தனி நெய்யினற் செய்த உயர்ந்த மிட்டாய் வகைகளையும், ஏராளமாய் வாங்கிப் பெரு மூட்டையாகக் கட்டி வைத்துக்கொண்டு தாய்க்கிழவி சரஸா வீடு தேடிச் சென்று கொண்டிருந்தனர். அப்பொழுது அவள்,இன்று நமக்கு இடதுகண் துடிக்கிறது. ஏதோ ! இன்று நமக்கு யோக காலம் வரும்போலிருக்கிறது. பார்ப்போம் என்று யோசனை செய்துகொண்டு கூடத்தில் உலாத்திக்கொண்டிருந்தாள். அச்சமயத்தில் இவ்விருவரும் அவள் எதிரே தோன்றினர். திடும் பிரவேசமாய் இவர்கள் வரவு கண்டதும், சரஸா மெத்த மகிழ்ந்து அவர்களுக்கு நல்வரவு கூறி, என்ன மாதவா ! கோவிந்தா ! ஊரில்தானிருக்கிறீர்களா ? இந்த வழியே வர மறந்து விட்டீர்கள். உங்கள் வரவு இன்றைக்குக் கார்த்திகைப் பிறைபோல் அதிசயமாருக்கிறது. என்ருள்.

**மாத** :—இல்லை, இல்லை. அப்படி யொன்று மில்லை. வேலைத் தொந்திரவே இவ்வழி வராததற்குக் காரணம். ஒரு காரியார்த்தமாக இவ் ஒருமாதமாக அலைந்து கொண்டிருக்கிரும்.

**தாய்க்கிழவி**:—ஏது உங்கள் கையில் ஏதோ ஷ்ட சாமான்கள் வைத்துக்கொண் டிருக்கிறீர்கள். என்ன விசேஷம்? என்றாள்.

**மாத**:—விசேஷம் ஒன்று மில்லை. உன்னைப் பார்த்து விட்டுப் போகலாமென்று நினைத்துக் கடை வீதி வழியாக வந்துகொண்டிருந்தோம். அங்கு ஒரு கடையில் நல்ல மாமிசம் விற்றுக்கொண் டிருந்தனர். மாமிசம் என்றால் உனக்கு மெத்த விருப்பமாயிற்றே யென்று சிறிது வாங்கி வந்தோம். இதோ! அவைகள். எடுத்துவை. என்று கூறி அவ்வளவையும் அவள் முன் வைத்தனர். இபற்கையிலேயே, பிறர் சொத்துக்குப் பேயாய்த் திரிகின்ற அவள், தனக்கென்று சொல்லும் போது ஒரு துளியேனும் விடுவளோ! அத்தனையும் வாரி யெடுத்து வீட்டுள் கொண்டு சேர்த்து சரி போய் வருகின்றீர்களா? என்றாள்.

**மாத**:—போகத் தடையில்லை. உன்னிடத்து முக்கியமான ஒரு சங்கதியைக் குறித்துப் பேசவந்தோம். பேசிமுடிந்ததும் போய் விடுகிறோம் இதோ! இந்த பத்து ரூபாயை எடுத்துக் கொண்டு நல்ல சமையல் தயார் செய். சாப்பிட்டு விட்டுப் பேசுவோம். என்று ரூபாயை எண்ணினர். அவள் அந்த ரூபாயை எடுத்துவைத்துக்கொண்டு வீட்டில் தயாராயிருந்த சாதத்துடன் மாமிசத்தையும் நல்லபடி தயார்செய்து மாதவன், கோவிந்தன். சரசா முதலானவர்கள் வெறிக்கக் குடித்துக் கொழுக்கத்தின்று மதிமயக்கங்கொண்டனர். அப்பொழுது அவர்களுள் நடந்த குசாலும், கொண்டாடிப்பும், விகாரச் சம்பாஷணையும் விளக்குந்தரமல்ல. எல்லாரும் உண்டு முடித்துத் தூங்கி எழுந்தனர். குடி மயக்க மெல்லாம் ஒருவாறு தெளிந்தது. மாதவன் சரஸாவை நோக்கி முந்தியே உன்னிடத்தில் ஒரு காரியமாக வந்தேனென்று சொல்லவில்லையா! அக்காரியம் அத்தகையவிசேஷ

மானதல்ல. வெகு எளிதான விஷயம். இந்தா! அதை நிறை வேற்றுவதற்கு உனக்கு இனும் ரூபா நூறு.எடுத்துக்கொள். என்று நோட்டை அவள் கையிலிட்டான். சரஸா வெகு வாய்ச் சந்தோஷித்து இடது கண்துடித்ததற்குப் பலன் கை மேல் வந்து விட்டதற்குப் பூரித்து எந்த விஷயமானாலும் சொல். இமைப் பொழுதில் முடித்துத் தருகிறேன் என்றாள்.

**மாதவன் :**—நம்மூர் மேலத்தெரு வன்னிய பூபதி சத்திரத்திற்கு அடுத்த மாடி வீட்டின் மேலறையில் புதிதாக ஒரு பெண்வந்திருக்கிறாள். அவள் ஒரு பரமதரித்திரன் மீது அத்தியந்த அன்பும் அதிககாதலுங் கொண்டு தனது நல்ல திர்ஷ்டத்தையும் சுகபோகத்தையும் இழந்து வருவதைக் கண்டு பொறாத நாங்கள், ஒரு பெரிய சீமானுக்கு ஏற்பாடு செய்கிறோம், சுகமாக வாழலாம், என்று வேண்டியபுத்தி மதி சொன்னாலும் கேட்கமாட்டேனென்று பிடிவாதம் செய்கிறாள் அவள் கொண்ட பிடிவாதத்தை மாற்றி நாங்கள் ஏற்பாடு செய்கிற நல்ல அழகனும் தனிகனுமான பிரபுவுக்கு இணங்கும்படி செய்விக்கவேண்டும்: இது உனக்கு ஒரு பெரியகாரியமல்ல. கவனித்து முடிக்கவும் மேலும் சன்மானம் செய்து வைக்கிறேன். என்ன சொல்லுகிறாய்?

**சரஸா :**—செய்யத்தடையில்லை, அது எனக்குச்சிரமுமல்ல. அந்தப் பெண்யார்? எந்தவூர்! என்ன ஜாதி! பெயரென்ன? வயதென்ன? யாருக்குச்சரிப்படுத்த வேண்டும்? அப்பிரபு ஊர் பெயர் முதலியன விபரம் தெரிவித்தால் முடித்துத்தருகிறேன். சீக்கிரம் சொல்லவும்.

**மாத :**—உண்மையை மறைத்துப் பெயர் மாற்றிக் கூறிக் காரியத்தைச்சாதித்துக்கொள்வதைக் குடிவெறியால் மறந்து மதிமயக்கத்தால் குணசுந்தரத்தின் ஊர், பெயர் முதலியவற்றையும் மைனர் குழந்தை வேலப்பனுக்குச் சரிப்படுத்த வேண்டு மென்பதையும் விபரமாகத் தெரிவித்து விட்டான்.

**சரஸா :**—மைனர் என்ற பெயரைக் கேட்டதும் திடுக்கிட்டாள். இந்தப் படுபாவிகள் பணம்பறிக்கும் நிமித்தம், சூதுவாதுமறியாத மைனருக்கு ஏதேதோ போதித்துப் புத்தியை மயக்கிவிட்டனர். அக்காரணத்தினுல் தான் இவ்வொருவாரமாக மைனர் நமது வீட்டிற்கு வராதிருக்கின்றனர், ஆளனுப்பினுல் உடம்புகுணமில்லை யென்றும், வெளியூருக்குச் சென்றிருந்தேனென்றும், வேலையதிக மென்றும் பொய் சொல்லிப் பதிலனுப்பி வருகிருர். இன்று உண்மை யறிந்தேன். திருடியும் தலையாரி வீட்டில் ஒளிந்தமாதிரி நம்ம வீட்டிலேயே உண்மை வெளியாயிற்று. இனிப் பார்த்துக் கொள்ளுகிறேன். என்று தனக்குள்ளேயே ஆலோசித்துக் கொண்டு எதோ யோசிப்பவளைப்போல் பின்னும், அந்தோ! பாவம். குணசுந்தரம் பெரிய சீமான் வீட்டுப் பெண்ணையிற்றே! அதிலும் நல்ல குணவதி, வித்யாவதி, மேலும் அழகில் ஒப்புயர்வற்றவள். லாவண்ய நிதியென்று கூசாது சொல்லாம். அத்தகைய கற்பின் மிகும் பொற்பினுளைக் கற்பழிக்கத் தொடங்கி விட்டனர். இப்பாவிகளுக்கு, கெட்டகாலம் நெருங்கிவிட்டது. சீக்கிரம் அவ்வுத்தமி சாபத்தால் பட்டொழியப் போகின்றனர். அன்றியும், ஒரு சமயம் நிகரற்ற அவளது பேரழகில் மைனர் ஈடுபட்டு விட்டால் நமது பிழைப்புக்கே மோசம் வந்துவிடும். நாம் இது விஷயத்தில் அசார்சமாயிருந்தால் நினைத்தபடி பொருளளிக்கும் கற்பகத் தருவை வீணே வெட்டத் துணிந்தவராவோம். ஒருவருஷத்திற்குள் முப்பதினுயிரம் ரூபாயை எண்ணிப்பாராதளித்த பிரபுவை எவ்வகையிலும் இழக்கத் துணிவனே! தான் சாக மருந் துண்ணும் பித்தன் இவ்வுலகில் இருப்பனே? இருக்கட்டும் பார்ப்போம். இன்னும் காரியம் மிஞ்சி விடவில்லை. அவளை எவ்வகையிலும் இன்றிரவே இவ்வூரைவிட்டு அப்புறப் படுத்த வழிதேடுகிறேன். என்று தீர்மானித்துக் கொண்டு.

வெளிப்படையாக, இந்த அற்ப காரியத்திற்குத்தானு இவ்வளவு பிரமாதம், இன்றிரவு 8 மணிக்கெல்லாம் நீர் விரும்புகிற பேர்வழிக்கே இணங்கச் செய்து விடுகிறேன். கவலைப்படவேண்டுவதில்லை. வாக்களித்தபடி இனும் விஷயத்தை மட்டும் மறந்து விடக்கூடாது என்று கூறினுள்.

**மாத** :—ஒருகாலும் மறவேன். நீ சொல்வது நன்ருயிருக்கிறது. நன்றி கொல்வது நாங்களல்ல. கவனமிருக்கட்டும்.

**சரஸா** :—சரி நீங்கள் அதோ ! அந்த அறையில் இன்னும் சற்று படுத்திருங்கள். அதற்குள் அதற்காகவேண்டிய காரியத்தில் கவனஞ் செலுத்துகிறேன். என்று கூறி அவர்களை நித்திரை செய்யவிட்டுச் சரேலென்று மாடிமீது சென்ருள்.

அப்பொழுது லலிதா தனது அழகிய பள்ளியறையில் உயர்ந்த அம்ஸ தூளிகா மஞ்சத்தில் ஒய்யாரமாய்ப் படுத்தவண்ணமிருந்து, இவ்வைந்தாறு நாட்களாக மைனர் வராத காரணம் யாதா யிருக்கலாம், அவர் என் வீட்டுக்கு வந்து இவ்வொருவருஷகாலதிற்குள் ஒரு நாளேனும் வாராதிருந்ததில்லையே, அப்பேர்ப் பட்டவர் இவ்வைந்தாறு நாளாக வாராதிருப்பது எனக்கு மெத்த ஆச்சரியமாய்க் காண்கிறது. இதில் ஏதோ சூதிருக்க வேண்டும். இல்லாதவரையில் இங்ஙனம் நிகழாது. இன்று தோழி கமலத்தை யனுப்பி மைனரை எப்படியாவது மாலை அவசியமழைத்து வரச்செய்யவேண்டுமென்று ஆலோசித்துக்கொண்டிருந்தாள். அப்பொழுது, தன் தாயார் அடி லலிதா ! என்று கூப்பிட்ட சத்தம் கேட்டு, ஏனம்மா என்று பதிலுரைத்து எழுந்துட்கார்ந்தாள். கேட்டாயோ சங்கதி, நம்பிழைப்புக்கே மோசம் வந்தது என்ருள்.

**லலிதா** :—என்னம்மா ! சங்கதி. விபரம் விளங்கவில்லை. விரைவில் சொல்லம்மா என்ருள்.

**சரஸா** :—மாவுத்தம்பதி மிராசுதாரரும் பெரும் பிரபுவுமாகிய முத்துவேலப்பரின் செல்வக் குமாரத்தி குணசுந்தரத்

கூத இவ்வூரில் திரிகின்ற டாபர்களாகிய கோவிந்தன், மாதவன், வரதராஜன் ஆகியமூவரும் எவ்விதமாகவோ வஞ்சித்து நேற்று மாலை துராகிருதமாய்த் தூக்கி வந்து வன்னியபூபதி சத்திரத்துக்கு அடுத்த வீட்டு மாடியின் தனியறையில் ஒளித்துவைத்திருப்பதாகவும், அவள் இவர்கள் கெட்ட எண்ணங்களுக்கு இசையேனென்று ஒரே பிடிவாதம் செய்கிறளென்றும், அவள் அவ்விதம் செய்யாமல், மைனர் கருத்துக்கிணங்கச் செய்விக்க வேண்டுமென்றும், அதற்குப்பரிசாக இதோ! இந்த நூறு ரூபா நோட்டை வைத்துக் கொள்ளென்று கொடுத்துக் கீழே மாதவனும் கோவிந்தனும் காத்துக்கொண்டிருக்கிறார்களென்றும் கூறி, அந்தோ! நமது குடியைக் கெடுக்க இப்படிபாவிகள் செய்த மோசத்தைப்பார்த்தாயா. உள்ளத்தில் கள்ளமென்பதைக் கொண்டறியாத மைனரை இத்தகைய துர்க்காரியங்களில் தலையிடச்செய்து அவர் பணத்தை மிக எளிதாக அபகரிக்கப் பார்க்கின்றார்களே! இவர்கள் சூழ்ச்சியில் அவர் அகப்பட்டுவிடில் நம் குடியுயர்வதெங்ஙனம்? மேலும் குணசுந்தரத்தின் பேரழகில் ஈடுபட்டா லொருவன் பிறமாதரைக் கண்ணெடுத்தும் பார்ப்பனோ? அவள் அத்தகைய அழகின் திருவுடைச் செல்வியன்றோ. ஆயினும், அவ்வளவில் காரியம் மிஞ்சவிடாமல் அதற்கொரு பரிகாரந் தேடி விட்டு வருகிறேன். போய் வரட்டுமா? உன் அபிப்பிராயத்தைச் சொல்லென்றாள்.

**லலிதா** :—அம்மா! தாங்கள் வருவதற்குச் சற்று முந்தினாலும், அதைப்பற்றித்தான் சிந்தித்துக்கொண்டிருந்தேன். என் கருத்தை யொட்டியே தாங்களும் வந்து சம்பாஷித்தீர்கள். எதற்கும் சற்று பொறுங்கள். நான் நன்றாக ஆலோசித்துக் கூறுகின்றேன் என்றாள்.

**சரஸா** :—லலிதா! அப்படியே செய்.

**லலிதா** :—15 நிமிஷங்கள் சென்றதும் அம்மா! இக்காரி

யத்தை நானே சென்று முடித்து வருகிறேன். தங்களுக்கு அந்தச்சிரமம்வேண்டாம். தாங்கள் வீட்டை ஜாக்ரதையாகப் பார்த்துக் கொள்ளுங்கள். என்று சொல்லி ஆண் உடையொன்றும், வழிச் செலவுக்குச் சிறிது பொருளும் எடுத்துக் கொண்டு சத்திரத்துக்குச் செல்லவேண்டிய காலத்தை எதிர் பார்த்தவண்ணமா யிருந்தாள்.

# XIV

## அதிசய விடுதலை

—" ஒன்றை
நினையாமுன் வந்து நிற்பினும் நிற்கும்
எனையாளும் ஈசன் செயல்."

(மூதுரை)

இரவு வெகுநேரம்வரை கண்விழித்துத் துக்கித்ததினாலுண்டான சோகத்தினால் அயர்ச்சி மிகுந்து காலை 8 மணிவரையிலும் குணசுந்தரம் தூங்கிக்கொண்டிருந்தாள். அருகிருந்த பணிப்பெண் பார்வதி, விடிந்து வெகு நாழிகையாயும் குணசுந்தரம் அயர்ந்து நித்திரை செய்வதையும், மேகம் போற் கருத்தடர்ந்து நீண்ட அவள் அழகிய கூந்தல் முடி குலைந்து பளிங்கு நிறமுள்ள பஞ்சணையிற் புரண்டுகிடக்கும் வனப்பையும், எழிலமைந்து நல்லழகு குடிகொண்ட சுந்தரவடிவையும் கண்டு மிகவியந்து இவள் நம்மைப் போன்ற சாமானியப் பெண்ணல்ல. தெய்வமாதராள் போலும்; இப்பெண்ணரசியையா! கோவிந்தன் முதலிய துஷ்டப்பதர்கள் சோரஞ் செய்யத்துணியவேண்டும். விதியின் விசித்திரம் வெகு நன்றாயிருக்கிறது? துஷ்டர்கள் கெடுநினைவுக்குக் கூடவா கடவுள் சகாயஞ்செய்கின்றனர்? என்னமோ! அவர் கருத்தை யார் அறியவல்லார்? இதிருக்கட்டும், இவ்வம்மணி இரவெல்லாம் உணவுகூடக் கொள்ளாமல் அழுதுகொண்டே

யிருந்து பசிமயக்கத்தால் சோர்ந்து அழக்கூடச் சக்தியின்றிக்
கிடக்கின்றனர்போலும். நாமாவது அருகிற்சென்றுமெதுவா
கத்தட்டி எழச்செய்துசிறிதுசிற்றுண்டி அருந்தச்செய்வோம்
எனக்கருதி அருகிற் சென்று மெதுவாக அம்மணீ ! எழுந்தி
ருங்கள். சூரியன் உதயமாய் வெகு நாழிகையாய்விட்டது
என்றாள். கூப்பிட்ட அச்சத்தம் அவள் காதில் விழவில்லை.
பின்னும் சற்றருகிற் சென்று தன்கையை மெதுவாக அவள்
மீது வைத்துத் தடவினாள். குணசுந்தரம் திடுக்கிட்டு இது
யாருடைய ஸ்பரிசமோ என்று கண்விழித்துப் பார்த்தாள்.
பணிப்பெண் பார்வதியா யிருக்கக்கண்டு ஏனென்றாள்? ஒன்
றுமில்லை, நாழிகை அதிகமாய்விட்டது. பல்துலக்குங்கள்.
சிற்றுண்டி கொண்டுவருகிறேன். எழுந்திருங்கள் என்றாள்.
குணசுந்தரம் எழுந்திருக்கவில்லை. திரும்பவும் பணிப்பெண்,
அம்மணீ! கவலைப்படாதீர்கள். கடவுள் உங்களுக்கு அப்
படி ஒருதீங்கும் கொண்டுவந்து விடமாட்டார். ஆபத்
தொன்றும் நேராது. தைரியங்கொள்ளுங்கள். எழுங்கள்
என்று மிகவிநயமும் வற்புறுத்தலுமாக வேண்ட, அவள்
வேண்டுதலுக்கு ஒருவாறிணங்கிக் குணசுந்தரம் படுக்கை
விட்டெழுந்து காலைக்கடனை முடித்துப் பல் துலக்கி மீண்
டும் தன் படுக்கை சேர்ந்தாள். பார்வதி நல்லசிற்றுண்டியும்,
காப்பியும் கொண்டுவந்து வைத்துப் புசிக்கும்படி வெகுவாக
வேண்டியதன்மேல் சிறிது உட்கொண்டாள். அவள்
வயறு நிரம்பிற்றோ ! இல்லையோ ! நாமறியோம். திரும்பவும்
பன்னிரண்டு மணிக்கெல்லாம் பகற்போசனம் கொண்டு
வந்து உண்ணும்படி உபசரித்தாள். குணசுந்தரம் வலை
யிற் பட்ட மான்போல் வேதனைப் படும்போது உணவு
உட்கொள்ள மனந்துணிவளோ ! விடாப்பிடியாய்ப் பார்வதி
வேண்டியதின்மேல்சற்றுஉணவுகொண்டாள். உண்டுமுடிந்த
மேல் பார்வதியும் குணசுந்தரமும் பற்பலவாறு சம்பாஷித்

துக் கொண்டிருக்கையில் மாலைமணி ஆறடித்தது. சூரியன் அஸ்தகிரியில் வீழ்ந்தனன். பார்வதி சட்டென்றெழுந்து வீடு கூடமெல்லாம் பெருக்கிவிட்டு விளக்கேற்றினாள். குணசுந்தரமும் எழுந்துசென்று மாலைக்கடன் முடித்து பள்ளிருக்கை சேர்ந்தனன். பார்வதி தானாக வெளிப்படையில், நேற்றிரவு “காலைவருகிறோம், பத்திரமாய்ப் பார்த்துக் கொள்” என்று சொல்லிப்போன மாதவன் கோவிந்தன் என்ன வானார்களென்று தெரியவில்லை. பெரும்பழிகாரரும், கொலைகாரருமா யிருக்கிறார்கள். வஞ்சித்துத் துராகிருதமாய் ஒருபெண்ணைத் தூக்கிவந்தோமே அவள்உண்டாளா! உயிர்துறந்தாளா! என்னவானாள்! என்பதைக்கூடக் கவனியாமல் இருக்கின்றார்கள்! இவ்வக்கிரமச் செயல்களுக்கு இவர்கள் தலையிலேன் இடிவிழவில்லை. அந்தோ! தெய்வமே உனக்குமா கண் அவிந்து போயிற்று? அப்பதர்களுக்குத்தான் இத்துஷ்டச் செயல் தொழிலென்றால் நல்ல குடும்பத்திலுதித்து நல்ல அந்தஸ்தும்செல்வாக்கும் பெற்று ஸ்ரீமானாக விளங்கும் மைனருக்குக்கூடப் புத்தியில்லையே! இத்துஷ்டர்கள் கூட்டுறவு பெருங்கேட்டிற்குக் காரணமென்பதைக் கவனிக்கவில்லைப்போலும். கெடுமதி கண்ணுக்குத் தோன்றாதென்பார்கள். அதுமெய்யாகக் காண்கிறது. துஷ்டரோடு சேர்ந்த நல்லவர்களும் கெடுவார்களென்பதற்கு:—

நெருப்பழற் சேர்ந்தக்கா னெய்போய் வதூஉ
மெரிப்பசுட் டெவ்வநோ யாக்கும்—பரப்பக்
கொடுவினைய ராகுவர் கோடாருங்கோடிக்
கடுவினைய ராகியார்ச் சார்ந்து!

(நாலடியார்)

எனவரும் அறவுரையே உதாரணமாம். என்று கூறிக்கொண்டிருக்கையில், பாரோ மாடிப்படியேறி வருவதுபோல் காலடி

சத்தங்கேட்டது. பார்வதி தன்பேச்சை நிறுத்தினள். குணசுந்தரம் திடுக்கிட்டு இன்றிரவு அப்பழிகாரரால் தனக்கென்ன தீங்குநேரிடுகிறதோ வென்றஞ்சினுள். துணுக்கெனத் தனது இடது கண்ணும், இடதுதோளும்துடித்ததைக்கண்டு ஏதோ! நன்மை நேரப்போவதாக்கருதிச் சிறிது தைரியங் கொண்டாள். எல்லாம் வல்ல கருணாநிதியின் செயலை யாரே அறியவல்லார்? என்று எண்ணமிட்டுக் கொண்டிருக்கும் போது தன்னெதிரே மந்தகாசவதனம் துலங்கக் குளிர்ந்த பார்வையுடன் அழகிய யௌவன மங்கை யொருவள் தன் தோழியுடன் ஒயிலாக நடந்து வருவதைக் கண்டாள். இங்ஙனம் வந்தவளைப் பார்வதி இன்னுளெனத் தெரிந்துகொண்டு "அம்மா! வாருங்கள். வாருங்கள். இதேது உங்கள் வருகை இங்கு? மெத்த ஆச்சரியமாயிருக்கிறது" என்ருள். வந்தவள் தாசி லலிதா என்பதை வாசகர்கள் அறியாமற் போகார்கள்.

லலிதா :—ஆச்சரியமென்ன பார்வதி! வன்னியபூபதி சத்திரத்தின் அந்தபுரத்திலுள்ள ஒருவரைப் பார்க்க வந்திருந்தேன். இவ்வளவு தூரம் வந்தபின், என்னுடன் ஒரு பள்ளிக்கூடத்தில் வாசித்தவளும் என் பிராணசிநேகிதியுமாகிய மீனும்பாள் இம்மாடியிலிருப்பதால் அவளையுங்கண்டு க்ஷேமம் விசாரித்துச் செல்வோ மெனவந்தேன்.

பார்வதி :—அம்மா! அப்படியாயின் மெத்த சந்தோஷம். தாங்கள் பார்க்கவந்த மீனும்பாள் இப்பொழுது ஊரிலில்லை. இராமேஸ்வரம் யாத்திரை சென்று இரண்டு வாரமாகிறது. விரைவில் வந்து விடுவார்கள்.

லலிதா :—அவள் யாத்திரை சென்றது எனக்குத்தெரியாது. தெரிந்திருந்தால் வந்திருக்கமாட்டேன். என்றுகூறி அவளைச் சமீபித்து மெதுவாக உன்னேடு பேசிக்கொண்டிருந்து நான்வந்ததும் மறைந்துவிட்டார்களே அவர்கள் யார்? என்றுகேட்டாள்.

**பார்வதி** :—எனக்குக்கூட அவர்களை இன்னாரெனத் தெரியாது. இவ்வூர் மன்னர் இரு துஷ்டர்களைக்கொண்டு கவர்ந்து வரச்செய்து இவ்வறையில் ஒளித்துவைத்திருக்கிறார். இது நான் கண்டறிவேன். என்னைக் காவலிருக்கும்படி சொல்லிப் போனார். போன அம்மன்னரும் குடிகேடரிருவரும் இதுவரையிலும் வரவில்லை. அவர்களுக்காகத்தான் நான் காத்துக் கொண்டிருக்கிறேன் என்றாள்.

**லலிதா** :—ஆ! அப்படியா? ஆயின், அவர்களை நான் பார்க்கக்கூடாதா? நீ எனக்கு அவர்களை அறிமுகஞ்செய்து வைக்கவேண்டும். என்று புன்னகை புரிந்து கேட்டாள். பார்வதி எடுப்பார் கைப்பிள்ளை தானே. எதுவேண்டினாலும் செய்ய வேண்டுவது அவள் கொண்ட தொழிலின் கடமை. ஆனதால், அப்படியே ஆகட்டுமென்று குணசுந்தரம் தனித்திருக்கும் அறைக்கு அழைத்துக்கொண்டுபோய் அம்மணி! இவர்கள் இவ்வூரில் மிகப்பிரசித்திபெற்ற தாசி லலிதா என்பவர். பெரும் தனவந்தி. சங்கீதம் பாடுவதில் விசேஷத்திறமை வாய்ந்தவர். தங்களைப்பார்க்க வந்திருக்கிறார், என்றாள்.

**குண** :—தன்னுள், துக்கமென்னும் சுழல்காற்றால் மோதப் பட்டுக் கணந்தோறும் என்னவருமோ! யாதுவிளையுமோ! என்றவாதனையின் வேதனைக்குட்பட்டு மெலிந்து தவித்துக் கொண்டிருக்கும் நிலையிலுள்ள எனக்குச் சங்கீத வித்துவாம்சியோடு சந்தோஷமாய்ப் பேசிச் சல்லாபிக்க முடிந்ததோ! நாம் எதும்பதிலுரையாது மௌனமாயிருப்பதே இப்போதுள்ள நிலைமைக்கு மெத்த நல்லதென்று கருதித் தலைகுனிந்த வண்ணமாய் வீற்றிருந்தாள்.

**லலிதா** :—அந்நிலைமையிலிருக்கும் குணசுந்தரத்தின் விதிக் குறைவுக்கு மிகவும் இரங்கி வருந்தினாள். எனினும், அவள் தன்னினும் எத்தனையோ மடங்கு உயர்ந்து, நிறைந்த லாவண்ய

ரிதியாய் விளங்குவதற்குப் பொறுமைப்பட்டு முகஞ்சுருக்கினள். இது பெண்களுக்கேற்பட்ட இயற்கை சுபாவம். லலிதா இவ்வாறு வேர்த்து முகஞ்சுருக்கியது தனக்கு மிஞ்சின ரூபவதிகள் எவருமே இரார்கள் என்ற கருவமே இக்குணம் பங்கப்படவைத்த தெனலாம். தனக்கு மிஞ்சினர் எவருமிராரென்று வீண்கருவங் கொள்ளும் பேதையர்களெல்லாம் இதனை மனத்திற்கொண்டு திருந்துவார்களாக. லலிதா பத்துநிமிஷத்திற்குள் தன் முகத்தைத் திருத்திக்கொண்டு அம்மா! என்னோடு சம்பாஷிப்பதில் தங்களுக்கு விருப்பமில்லைப்போலும். என்று விநயமாய்க் கேட்டனள்.

குண :—விருப்பமில்லாமலில்லை. மனோ வாதனையால் வேதனைப் படுகின்ற எனதுள்ளம் ஒருநிலைமையினின்றிச் சஞ்சலப்பட்டுக் கொண்டிருப்பதே காரணம் என்றாள்.

லலிதா :—மனோவேதனை நேர்ந்த காலத்தில் மனக்கிளர்ச்சி பொழிந்து எதிலும் விருப்பம் தோன்றாதொழிவது சகஜந்தான். இனித்தாங்கள் அத்தகைய மனோவேதனையையும் அதனாலுண்டாகும் துன்பத்தையும் அனுபவிக்கவேண்டுவதில்லை. அதினின்றும் நீக்குவிக்கும் பொருட்டே கருணையங்கடவுள் என்னைத் தங்கள்பால் தூதாக அனுப்பியிருக்கின்றனர். என்றாள்.

குண :—எதிர்பாராத லலிதாவின் இச்சொற்களைக் கேட்டதும் வியந்தாள். திகைத்தாள். உண்மையாயிருக்குமோ! அல்லது மேலும் வஞ்சிக்கும் சூழ்ச்சியோ! மனைப்பரிட்சிக்குஞ்செயலோ! என்று பலவாறு கருதினாள்.

லலிதா :—குணசுந்தரத்தின் முகக்குறிப்பை யுணர்ந்து, தாங்கள் அத்தகைய சந்தேகங்கொள்ளவும் கொள்ள வேண்டுவதில்லை. கடவுள்மேல் ஆணையிட்டுக் கூறும் சத்தியவாக்கு. பெண்களைப் பெண்கள் வஞ்சிக்க வேண்டிய அவசியமில்லை. யாரது பார்வதி! கீழே சென்று தெருக்கதவைச

சாத்தி நன்றாகத் தாழ்ப்பாளிட்டு நீ அங்கேயே யிரு. நான் கூப்பிடும்போது மேலே வா! சொன்னது தெரிந்ததா! போ! ஜாக்கிரதையாயிரு என்று கூறி அவளைக் கீழே அனுப்பினான்.

குணசுந்தரத்திற்கு லலிதா கூறிய சொற்களின் தன்மை யில் உண்மையும் நம்பிக்கையும் ஒருவாறு உண்டாயிற்று. சற்றுமகிழ்ந்தான். அதனால் அவனுடைய செவ்விய அதரங் கள் இரண்டும் மெதுவாக அசைந்து திறக்க, வெள்ளிய முல்லை அரும்புபோன்ற பல்வரிசைகளினின்றுந்தோன்றிய இளநகை வெறிக்கும் அவனது புன்முறுவலை உலகை வெறுத்த தவ சிரேஷ்டர்கள் காண்பாராயின் அன்றே காமநோய் மேற் கொண்டு காட்டைத் துறக்கத்துணிவர்?

லலிதா செய்த உத்திரவின்படி பார்வதி கீழே சென்று கதவைத் தாளிட்டு ஜாக்கிரதையாயிருந்தாள். லலிதா குணசுந்தரத்தினிடம் மிகநெருங்கி மெதுவாக அய்யனே! உங்கள் பெருங்குடும்பத்தையும், பெருங்குணத்தையும், கற் பின் திறத்தையும், அழகின் நலத்தையும் கண்டு, தங்களைச் சூழ்ந்திருக்கும் இப்பேராபத்தினின்றும் விடுவிக்க வேண்டு மென்ற நன்னெண்ணங்கருதியே நானிங்கு வந்தேன். "தாங் கள் இங்ஙனம் அபகரிக்கப்பட்டு சிறையிலிருப்பது நீ எப்படி உணர்வாயென்று என்னை ஒன்றும் இப்பொழுது கேட்கா தீர்கள். அதற்குப் பதில் கூறவும் சாவகாச மில்லை. இப்பொழுது மணி எட்டுத்தானாயிற்று. இன்னும் ஒருமணி நேரத்திற்குள் அப்படுபாவிகள் இருவரும், மோகவெறிமேற் கொண்ட அம்மமனரும், இங்கு வருவார்கள். அவர்கள் வரு வதற்குள் தங்களை இவ்வறையினின்றும் வெளியேற்றிவிடுகி றேன். அதற்குவேண்டிய ஏற்பாட்டுடனும் வந்திருக்கிறேன். தாங்கள் கட்டியுள்ள சேலையை அவிழ்த்து என்னிடம் கொடுத்துவிட்டு இதோ! இந்த ஆடையைத் தாங்கள் உடுத்

திக்கொள்ளுங்கள். வழிச்செலவுக்கு இந்த நூறு ரூபாய் நோட்டைப் பெற்றுக்கொள்ளுங்கள். தங்களோடு வருகிற என்தோழியுடன் செல்வீராயின், தங்களுக்கென ஒருவண்டி காத்திருக்கும். அவ்வண்டியிலேறிக்கொண்டு என்தோழியினிடமிருக்கும் ஆணுடையையும் பெற்றுக்கொண்டு, அவளை அனுப்பிவிடுங்கள். தாங்களேறியிருக்கும் வண்டி தங்கள் ஊருக்கு ஒருமைல் தூரத்திற்கு இப்பாலே சென்று நின்றுவிடும். தாங்கள் இறங்கித் தங்களிஷ்டம்போல் எங்குவேண்டுமானாலும் செல்லலாம். இந்தப்படி நீங்கள் செய்தாலன்றித் தங்களைப் பிடித்திருக்கும் இவ்வாபத்து நீங்காது. என்ன சொல்லுகிறீர்கள் ? எல்லாம் விரைவில் முடிந்தாகவேண்டும் என்றாள்.

குண :—லலிதா சொல்லுவதுபோற் செய்வது நன்மையாகத்தான் தோன்றுகிறது. எனது இடதுதோளும் இடது கண்ணும் துடித்தது இந்த நன்மையைக் கருதிப்போலும். கடவுளைத் துணைகாரணமாகக் கொண்டு இவள் வார்த்தையில் நம்பிக்கைவைத்துச் செய்வோம். ஈஸ்வரன் விட்டபடி விட்டும் என்று உறுதிமேற்கொண்டு தன் ஆடையைக் களைந்து லலிதாவிடம் கொடுத்து விட்டு அவள் தந்த ஆடையைப்பெற்று உடுத்திக்கொண்டு, ரூபா நூறையும் வழிச் செலவுக்குப் பெற்றுக்கொண்டு லலிதாவை நோக்கி என்னை சூழ்ந்திருந்த பேராபத்தை யுணர்ந்து வலுவில் நீக்கக் கருணைகொண்ட பெருங் குணத்திற்கு நான் யாது கைம்மாறளிக்கப்போகிறேன். என்போன்று ஆபத்திலகப்பட்டு தீன நிலமையிலுள்ளார்க்கு இதுபோலவே வலுவில் உபகாரஞ்செய்து அவர்கள் மனமுவந்து கூறும் வாழ்த்துதலைப் பெற்று நன்மை யடையவேண்டுமென்பதே எனது பிரார்த்தனை. நான் போய்வருகிறேன். இது எப்பொழுதும் உன் நினைவிலிருக்கட்டும். என்றுசொல்லி லலிதாவிடம் விடை

பெற்றுக்கொண்டு அங்கு நின்ற தோழியுடன் அவள் வழி காட்டப் பின்பற்றி மாடிகடந்து புறக்கடை வழியாகத் தெருவுக்குவந்து லலிதா சொன்னபடியே நின்றிருந்த வண்டியிலேறித் தோழி தந்த ஆணுடையைப் பெற்றுக்கொண்டு அவளை அனுப்பிவிட்டனள். வண்டியும் வேகமாய்ச்சென்று குறித்த இடத்தில் கொண்டு விட்டுந் வந்தவழியே திரும்பியது.

# XV

## குணசுந்தரம் லலிதாவான விநோதம்

> "உறற்பால நீக்க லுறுவார்க்கு மாகா
> பெறற்பா லனையவு மன்னவா"

(நாலடியார்)

பிறநலம் செயலாகக் காட்டிச் சுயநலம் பொருளாகக் கொண்ட தாசி லலிதா, தன்தோழி மூலம் குணசுந்தரத்தைக் கொல்லைவழியாக அனுப்பிவிட்டு அவளைப்போல் சேலையுடுத்துக் கோலம்புனைந்து துக்கபாவனையும் வருவித்துக் கொண்டு, குணசுந்தரம் வீற்றிருந்த விடத்திலிருந்து பார்வதீ! என்றழைத்தாள். ஏனம்மா அழைத்தீர்கள் இதோ வந்தேன். என்று பணிப்பெண்ணாகிய பார்வதி விரைவாகப் படியேறி மாடிமீது வந்தாள். லலிதாவைக் காணவில்லை. குணசுந்தரம் மட்டும் வீற்றிருப்பதைக்கண்டு அம்மா! தங்களுடன் பேசிக்கொண்டிருந்த லலிதா எங்குசென்றனர். என்று வினவினள்? லலிதா நகைத்துத் தன் கையை அசைத்து அருகிலழைத்து மெதுவாக நான், குணசுந்தரத்தைப் பின்வழியாக அனுப்பிவிட்டு அவள் உடையை நான் பெற்றுக் கொண்டு அவளைப்போல் வேஷம் பூண்டுகொண்டேன். இவ்வேஷம் உண்மையில் அவளைப்போலவே பொருந்தியிருக்கிறதா! என்று கேட்டனள். பார்வதி அம்மா! நான் பிரமித்து

விட்டேன். உண்மையில் குணசுந்தரத்தைப் போலவே காண்கின்றீர்கள். சிறிதும் பேதமில்லை என்றாள். ஆயின் சரி. அதிகமாகப் பேசிக்கொண்டிருக்க இனிச் சாவகாச மில்லை. அப்பாவிகள் வரும் வேளையாயிற்று. நீ கீழே சென்று தெருக்கதவைத் திறந்துவிட்டு மாதவனும், கோவிந்தனும் வந்தால், "லலிதாவந்து வேண்டியபடி போதித்து இஷ்டப்படி நடக்குமாறு செய்துவிட்டுப் போய் விட்டாள். மைனரை அழைத்து வந்து அவரிஷ்டப்படி நடந்து கொள்ளச்சொல் என்று சொல்லிவிடு" அவ்வளவுதான் நீ செய்ய வேண்டியகாரியம். நான் சொன்னது விளங்கிற்று ? என்றாள். பார்வதி நன்றாய் விளங்கிற்று என்று கூற, ஆனால் நீ கீழே செல் என்று அவளை அனுப்பிவிட்டுத்தான், மைனர் வரவுக்காக எதிர்பார்த்துக் கொண்டிருந்தாள்.

மாதவனும், கோவிந்தனும் மாலை ஆறுமணிக்குக் குணசுந்தரத்தை மைனருக்கு இணங்கும்படி செய்விப்பதாகச் சொல்லி வந்தபடி லலிதாவை குணசுந்தரத்தின் பாலனுப்பிவிட்டு, வரதராஜனை வீட்டிற் சென்றழைத்துக் கொண்டு மைனர் மாளிகை நோக்கிச் சென்றனர். இவர்கள் வரவையும், மணி எட்டடிப்பதையும் மைனர் எதிர்பார்த்திருந்த படியால், குறித்த காலத்தில் அவர்கள் வரவுகண்டதும், மைனர் மெத்த மகிழ்ந்து தயார்தானே. புறப்படலா மன்றோ ? என்றான். ஆம் என, நால்வரும் வன்னிய பூபதி சத்திரம் வந்து சேர்ந்தனர். மாதவன் முன்னதாகப் பார்வதியிடம் வந்து மெதுவாக, லலிதா என்ன சொன்னாள் என்று கேட்டான். உங்களிஷ்டப்படியே நடக்கும்படி செய்து விட்டதாகவும்; தானங்கிருந்தால் மைனருக்கு அச்சமும் லச்சையும் ஏற்படுமென்றும், தெரிவித்து விட்டு வீட்டுக்குச் சென்றுவிட்டாள் நீர் மைனருடன் மேலே சென்றால் குணசுந்தரம் உட்படக் காத்துக் கொண்டிருக்கிறாள் செல்லுங்கள். இனிநான் போய்

வருகிறேன். எனக்கு இனும் தாரும் என, மாதவன் ரூபாய் ஐந்து கொடுத்தான். பெற்றுக் கொண்டு போய்விட்டாள்.

**மாதவன் :**—லலிதாவின் சாமர்த்தியத்திற்கு மெத்தச் சந்தோஷித்து விரைவாக மைனரிடத்திற்கோடி வாருங்கள், வாருங்கள். மேலே செல்வோம். உங்கள் வரவுக்காகக் குணசுந்தரம் காத்துக் கொண்டிருக்கிறாள் என்றதும், மைனர் உடல் பூரித்துப் பேரானந்தத்தி லாழ்ந்திச் சட்டென்று மாடிப்படிகடந்து அவள் வீற்றிருக்கும் அறையைச் சேர்ந்தனன்.

**லலிதா :**—மைனர் வரவுகண்டு சட்டென்றெழுந்து நாணத்தால் தலை குனிந்தவண்ணமாய் மைனரை ஏமாற்றிவிடப் போகிறோம் என்ற உற்சாகத்தால் முகத்தில் சந்தோஷம் குடிகொள்ள மயிலெனச் சாய்ந்து ஒருபுறம் ஒதுங்கி நின்றாள்.

**மைனர் :**—குணசுந்தரம் நேற்றிருந்த நிலமையையும், இன்றைக்கிருக்கும் சந்தோஷக்குறியையும் கண்டு மாதவ கோவிந்தர்கள் நம்பொருட்டு வெகுவாய்ச் சிரமப்பட்டு இவ்வளவு தூரம் இணங்கும்படி செய்துவைத்திருக்கும் சாமர்த்தியத்திற்கு வியப்பும், மகிழ்ச்சியுங் கொண்டு, குணவை யடுத்து வெகு விநயமாக இன்றைக்கேனும் தயவு செய்ய வேண்டு மென்று வேண்டினன்.

**லலிதா :**—ஒன்றும் பதிலுரையாது தனது சம்மதத்தைக் குறிப்பால் அறிவிக்க நினைந்து மைதீட்டிய தன்நீலவிழியின் கடைக் கண்பார்வையில் மைனரைப்பார்த்து புன்னகை பூத்தனள்.

**மைனர் :**—அப்புன் முறுவல் தன் அறியாமையைப் பரிசிப்பதென்றுணராமல் அன்பின்கனிவென்று கருதி, மேலும் மகிழ்ந்து உற்சாகமேற்கொண்டு பின்னும் சற்றருகிற் சென்றான். அவள் நாணப்படுவதுபோல் மேலும் ஒதுங்கினள்.

அவள் ஒதுங்குந்தோறும் மைனர் நெருங்கிச்சேர்ந்து குண சுந்தரம்! என்ன! இன்னுமா நாணப்படுகிறாய். என்று மெது வாக அவள் தோள் மீது தன்கையை வைத்தனன். அவள் பேசாதிருந்ததுகண்டு வசப்பட்டுவிட்டாள் என்று சரஸமுஞ் செய்யத்தொடங்கி, அவளைத் தன்னிருகையாலுந் தழுவி ஆலிங்கனஞ் செய்து என்ன கண்மணி! என்னை வெகுவாகக் கஷ்டப்படுத்தி விட்டனை. சென்ற இரண்டு நாளாக நான் பட்டகஷ்டமெத்தனவுண்டு. உன் அதிசய அழகையும், புன் னகைதவழ்ந்த மதிமுகத்தையும், செப்பேனத்துலங்கும் இரு தனத்தையும் நினைத்து நினைந்து மனம் நைந்து நொந்தது. என் அன்பின் களஞ்சியமாகத்துலங்கும் தாசி லலிதாவையும் அறவே மறந்தேன். மாதரார் போற்றும் காமவதியாகிய உன் எழில் உருவத்தைக் கண்டபின் மற்றொருவளைக் கனவிலும் கருத நினைவனோ! என்காதற்கிளியே! என்னைக் கட்டியணைந் துகாமசுகந்தருவாய். காமன் கடுங்கரம் என்னை வாதித்தலைக் கின்றது. காலந்தாழ்ப்பாயேல் என்பிராணன் அகன்றொழி யும், என்று பற்பலவாறு பஞ்சிக் கெஞ்சி விரகமேலீட் டாற் மேல்விழுந்து மார்புறத்தழுவினான். அப்பொழுது லலிதா தன்னை, மறைத்துக்கொண்டிருந்த முக்காடு சரிந்து தன்னை இன்னளெனத் தெரிவித்து விட்டது. அந்நிலைமையில் திடீரெனத் தன்னெதிரில் தாசி லலிதாவின் திருமுகத்தைக் கண்டதும் மைனர், திடுக்கிட்டு நெஞ்சமயர்ந்தனன். திக்பி ரமை கொண்டவன் போல் ஒன்றுந்தோன்றாது சற்று நேரம் சித்திரம்போல் அசைவற்றிருந்தான். தான்கண்டதுகனவோ, நினைவோ என்று ஐயுறலானான். உண்மையென்றுணர்ந்த போது விவரிக்க முடியாத அத்தனை மனோவேதனையையும், வெட்கத்தையும் அடைந்தான். இனிச்செய்வதென்னெனத் தோன்றாது மயங்கி நின்றபோது, லலிதா, பிரபு அவர்களே! தாங்கள் வாய்கொண்டமட்டும் வர்ணித்துக் காதல் பாராட்

டிய குணசுந்தரம் எங்குச் சென்றாள் ? உரலை நினைத்துக் கொண்டு அவலை இடிப்பதுபோல் அவளை நினைத்துக் கொண்டு என்மேனியை உபத்திரப் படுத்துகின்றீர்கள் ? இச்செயல், தங்களைப்போன்ற பிரபுகுலச்செல்வர்கள் செய்யக் கூடியதல்லவே. கேவலம் குடிகெடுக்கும் மதிகேடர் செயலன்றோவிது. தங்கள் பிராணண் உள்ளளவும், என்னைத்தவிர அன்னியமாநரைக் கண்ணெடுத்துப் பார்ப்பதில்லையென்று கடவுள் மீது ஆணையிட்டுச் செய்து கொடுத்த உறுதிவாக் கென்னவாயிற்று ? காமுகருக்கு ஆணை சத்திய மில்லையா ? சத்தியம் என்பது கேவலம் நான்கெழுத்துத் தானே என்று எண்ணினீர்களோ! சொன்ன சொல்தவறாதசத்தியசீலரென்ற நம்பிக்கைவைத்தல்லவா, என்னை நாடித் தேடிவந்த கோடீஸ்வரப்பிரபுக்களை யெல்லாம் கண்ணெடுத்தும் பாராது ஒதுக்கி விட்டேன். "வாயச நல்லூர்" வைத்திய நாத சிவன், 40 ஆயிரம் ரூபாமதிப்பில் ஒருபங்களாத் தருகிறேனென்றார். "மயிலைப்பதி" மாணிக்கவேலு நாயகர் 50 ஆயிரம் ரூபாயில் நஞ்சைநிலம் வாங்கித்தருகிறே னென்றார். "இடையாலம்" உடையார் தென்னந்தோப்பு கொடுக்கிறேனென்றார். "வலிவலம்" கலியாணத்தேவர் வைரமிழைத்த மாங்காமாலையும் ரவைத்தோடும் பெருந்தொகையில் வாங்கிப் போடுகிறே னென்றார். இவைகளையெல்லாம் நான் வேண்டா மென்றொதுக்கியது தங்கள் பொருட்டல்லவா ? இதுவிஷயமாய் எனக்கும் என்தாயாருக்கும் நடந்த சண்டை கொஞ்சமா ? இன்னும்ஓய்ந்தபாடில்லை. தாசியாய்ப்பிறந்தவள் ஒருவரையே பார்த்துக் கொண்டிருந்தால் பிழைப்பு நடக்குமா ? என்னை ஏசியதும் பேசியதும் சொல்லிமுடிவதோ ! புலிக்குப் பெண்டாட்டியாயிருந்து விட்டுப் பூனைக்குவாழ்க்கைப் படுவதா ! என்று நினைந்து நடந்து வந்ததற்கா, என்னெதிரில் என்னையே இழித்துரைத்துக் குணசுந்தரத்தைப் புகழ்ந்தீர்கள், இது

எங்காலவித்தியாசம். என்று பற்பலவாறுகூறி வஞ்சகத்தைத் நெஞ்சுட்கொண்டு தரையில் வீழ்ந்து அழுது புலம்பினாள். இந்நிகழ்ச்சியெல்லாம் மைனருக்குச் சொப்பனத்தோற்றம் போலிருந்தது. நினைக்குந்தோறும் பேராச்சரிய வசத்தனாய்ப் புத்திக் கொன்றுந் தோன்றாது பிரமை கொண்டவன் போல் ஒன்றுங் கூறாது வாளாவிருந்தனன்.

சிறிது நேரஞ் சென்றபின், மனக்குள்ளாகத் தன்னெதிரில் தரையில் வீழ்ந்து ஏதேதோ கூறி அழுது புலம்பியது தாசி லலிதா தானா? அப்படியானால், இவ்வறையிலிருந்த குணசுந்தரம் என்னவானாள்? எங்குச்சென்றாள்? லலிதா இங்கு வந்த தெவ்விதம்? இந்தரகசியம் அவள் எவ்வாறறிந்தாள்? மைக்கண்ணிமாதவியைக் கொண்டு குணாவை இணைக்குவிப்பதாக மாதவனும் கோவிந்தனும் பணம்பெற்றுச் சென்றார்களே! அவர்கள் அவ்வாறு கூறியது என்னைவஞ்சித்து இங்ஙனம் வருத்துவதற்குச் செய்த சூழ்ச்சியா? அங்ஙனமாயின், இது எத்தகைய வஞ்சகச் செயல்? துஷ்டர் கூட்டுறவு மானக் கேட்டிற்கும் பணவிரயத்திற்கும் வீண் துக்கத்திற்கும் ஆளாக்கச் செய்யுமென்று என் தந்தையின் உயிர்த்தோழர் கணக்கு மணியகாரர்கள் கூறினார்களே! அப்பெரியார் வாக்குப் பொய்யாகவில்லையே. நம்முடைய மதியீனம் வெகு நன்றாயிருக்கிறது. லலிதாவுக்கு நானினி என்னபதிற் சொல்வேன்? என்ன நான் சொன்னாலும் இனி நம்புவளோ? என்று ஏககாலத்தில் வியப்பு, திகைப்பு, ஏக்கம், வாதை, அவமானம், துக்கம், பேதைமை, சந்தேகம் இவை முதலிய யாவும் ஒன்றுகூடித் தன்னைவாதிக்க மிகவருந்தினன். முடிவாக நானினி இத்தகைய துர்க்கிருத்தியங்களுக்கு இறங்குவதில்லை யென்று கூறி லலிதாவிடம் மன்னிப்புக் கேட்டுக் கொள்வதைவிட வேறு வகையொன்று மில்லையென்று ஒருவாறுமனத்தைத் தைரியப்படுத்திக் கொண்டு தரையில் வீழ்ந்து

புலம்புகின்ற லலிதாவைக் குனிந்து தன்னிருகையாலும் வாரியெடுத்து அவளைநோக்கி! என் அறியாமையினாலும், துஷ்டர்கள் துர்ப்போதனைகளாலும் தவறிவிட்டேன். என் சொந்தபுத்தியால் தெரிந்து செய்தகாரியமல்ல. இனிமறந்தும் இத்தகைய காரியத்தில் இறங்கமாட்டேன். எனக்குத் தெளிவு பிறந்தது. நீ எவ்விதமாகிலும் நான் செய்த இக் குற்றத்தை மன்னித்துத் தானகவேண்டும். என்று மிகமன்றாடித் தஞ்சமெனவீழ்ந்திறைஞ்சினன். பார்த்தாள் லலிதா விவேகியானதால், மைனர் அந்தமட்டும் இறங்கிவந்ததற்கு மெத்தமகிழ்ந்து, மேலும் பொருளை லேசாகக் கறந்துவிட நினைத்து, மைனர்வேண்டுதலுக்கிரங்கும் பாவனையில், உமது குற்றத்தை இது முதல் தடவையானதால் மன்னித்தேன். இனியொருமுறைகாண்பேனாயின், உமக்கும் நமக்கும் அத்துடன்முடிந்தது. ஞாபமிருக்குமா! என்று கேட்டனள். ஆ! ஆ!! நன்றாக ஞாபமிருக்கும். இனிமறந்துஞ்செய்யேன் என்றான். லலிதா கோபந் தவிர்ந்தாள் போல் காட்டிச் சந்தோஷமேற்கொண்டு மைனருடன் அதுவரையிலும் அந்த ரங்கஸ்தானத்தில் நடந்து கொண்டதைவிட மேலும் பதின் மடங்கு நடந்துகாட்டி அவனைக்காமக்கடலுள் ஆழ்த்தினள். மைனர் லலிதாவின் எல்லையற்ற பேரன்புக்கும், தன்மீது கொண்டுள்ள உண்மைக்காதலுக்கும் வெகுவாய்ச்சந்தோஷித்துத் தன் அரிய மனைவியையும், பெரியபொருள்களையும் இழக்க நேரிடினும் லலிதாவைமட்டும் இழக்கத்துணியேன் என்று மற்று மொருமுறை சத்தியஞ்செய்தான். இருவரும் அவ்விடத்தைவிட்டுப்பிரிந்து தத்தம் மாளிகை சேர்ந்தனர்.

# XVI

## ஆண் வேடம்

“ பண்டுமுளைப்ப தரிசியே யானாலும்
விண்டுமி போனல் விளையாதாம்—கொண்ட
பேராற்ற லுடையார்க்கு மாகுநாளன்றி
எற்ற கருமஞ் செயல்.”

ராசி லலிதாவால், தனியே அதிலும், நள்ளிரவில் அனுப்பப்பட்ட குணசுந்தரம், என்னவானாள் என்பதைக் கவனிப்போம் :—தன்னை யேற்றிவந்த வண்டி, மாவுத்தம்பதிக்கு ஒருமைலுக்கிப்பாலே நின்று தன்னை இறக்கிவிட்டுச்சென்றதும், குணசுந்தரம் ஒன்றுந்தோன்றாதவளாய் நின்றனள். வஞ்சகர் நெஞ்சம்போல்பேரிருள் இருண்டு, திசைதெரியாது எங்குங்கவிந்து ஒரேயிருட்டாயிருந்தது. கோட்டான், ஆந்தை, காட்டுப்பூனை குள்ளநரி முதலிய ஜந்துக்கள் தங்களது கொடியகுரல்களால் சத்தமிட்டன. குணசுந்தரம் மெத்தப் பயங்கொண்டனள். தனது இளமை தொட்டு இத்தகைய தீயகுரல்களையும், பயங்கரச் சத்தத்தையும் கேட்டறியாதவளானதால், நெஞ்சந் திடுக்கிட்டுப் படபடவென்றடித்துக் கொண்டது. இரத்த ஓட்டம் மின்னல்போல் ஒருவித விருவிருப்புடன் தோன்றியங்கும் பரவி உடலை நடுக்குறச் செய்தது. நிற்கச் சக்தியற்றவளாய் அப்படியே தரையில் உட்கார்ந்துவிட்டாள். மிருதுவாயுள்ள மெல்லிய பட்டால்

தைக்கப்பெற்ற இலவம்பஞ்சுமெத்தையிலும்,சாய்வுநாற்காலியிலும் வீற்று, எலக்ட்ரிபங்கா அசைந்து சிறு காற்று வீச, காந்தவிளக்குகள் எப்பொழுதும் பகல்போலெரிப்ப, ஏவிய வேலைகளுக்குத் தாதியர் அருகிருந்து உபசர்க்கத் துன்பம், துக்கமென்பதை உணராதுவளர்ந்த குணசுந்தரம், அவைகள் ஒன்றுமின்றிக் கல்லுமுள்ளும் நிறைந்த காட்டில், பேரிருட்டில், பயங்கரக்கூச்சலில், தன்னந்தனிமையில், இங்ஙனம் அனாதையாயிருப்பதை நினைக்கும்போது, ஏககாலத்தில் துக்கமும் அச்சமும் தோன்றுதொழியுமோ ! அவள் நெஞ்சமயர்ந்தது. கண்ணீர் பெருக்கி ஆறாத்துன்பத்தில் ஆழ்ந்தாள். சற்று பொருத்ததும் தான் விவேகியானதால், துக்கத்திலும் அச்சத்திலும் ஒருவாறு தெளிந்து இவ்விளைவெல்லாம் விதியின்விசித்திரச்செயல். இதற்காகக்கவலைப்படுவதுபேதைமை, கடல்சூழ்ந்த இந்நிலவுலகில் ஒவ்வொருவனும், அவனவன் கர்மத்திற்கேற்ப விதிவசப்பட்டு சுகதுக்கங்களை அனுபவித்தாகவேண்டும். விதியை மதியால் வெல்லாமென்றும், விதியின் வழியே மதியுஞ்சென்று நன்மை தீமைகளை விளைவிக்கின்றனவென்றும் சிலர் வியாக்கியானஞ்செய்வர். விதியென்னும் கொடிய பாதகன் கைப்பட்டடையும் வேதனையும் படுங்கஷ்டமும் கொஞ்சமா ? ஆயிரம் நாவுடைய ஆதிசேஷனாலும் அறுதியிட்டுரைக்கமுடியாது. ஒருசாண் வயற்றுக்கு நாழியரிசிக்காக வேதனைப் படுவோனை ஒருநொடி பொழுதில் கோடீச்சுரனாகவும், கோடீச்சுரனை ஒருகண்ணிமைப் பொழுதில் கோமணாண்டியாகவும் செய்விப்பது விதியின் வல்லமையேயாம். இதுதான் விதிவசமென்பது. குலாலன் சக்கரமொப்பக் கணத்திற்குக்கணம் சுகதுக்கங்களை மனிதனுடைய அநித்திய வாழ்வில் மாற்றிகொண்டிருப்பதும் அவ்விதியின் செயலேயாம். இமையாநாட்டம் பெற்ற தேவர்களும், இதன் வலையிற் சிக்குண்டு துன்பம் அடைகின்றார்கள் என்றால்,

கேவலம் நார்களாகிய நாம் இதன்முன் எவ்வளவு? என்று தெளிந்து அவ்விருட்டையும் தனிமையையும் ஒரு பொருட் படுத்தாது தைரியமடைந்து இந்தமட்டில் தன் கற்புக்கு அழிவுவாராமல் காத்தகருணையங்கடவுளை மனதார வந்தித்து வாழ்த்தினள். முன்பின் முகம்பார்த்தறியாது தரிசனமாத்தி ரையில் தன்பால் அன்புகூர்ந்து பந்த நிவாரணஞ் செய்து வழியனுப்பிக் காத்த லலிதாவின், உயர் குணத்திற்கும் நன்றி செலுத்த மறந்தாளில்லை. நத்தையில் முத்தும், கள்ளியில் அகிலும், தோன்றுகின்றதன்றோ? நல்லார் பிறக்கும் குடி யாரே அறிவர்? தாசியாயிருந்தாலென்ன? மற்றெவரா யிருந்தால் தானென்ன? நல்லெண்ணமும் உபகாரச் சிந்தை யுமன்றோ பிரதானம். என்று அவளை வெகுவாகமதித்துப் புகழ்ந்து விட்டு இனி நாம் செய்யவேண்டியகாரியம் என்ன வென்பதைப்பற்றி ஆலோசிக்கத் தொடங்கினாள்.

நமது ஊராகிய மாவுத்தம்பதி இங்கிருந்து சுமார் ஒரு மைல் தூரந்தானிருக்கும். போவதற்கும் சுலபமே. தாய்தந் தையர் நமது அதிசயவரவுக்கு மெத்தமகிழ்ந்து துக்கம் அகல்வர். ஆனால், அப்படிச்செய்வது உசிதமல்ல. நாம்என்ன தான்செல்வந்தராய் உயர்ந்திருந்தாலும், ஊரார் நம்மை, 'வயது வந்த பெண் வெளியே நான்கு நாள் தனித்திருந்து விட்டு இப்பொழுது வந்திருக்கிறாள்' என்று சொல்லிப் பழி கூறுகிறார்கள். அவர்களைநாம்செய்வதென்ன? உண்மைபுலனா கது கொள்வது மெத்தக்கடினம். இவற்றிற்கு ஒருவாறு தப பினாலும் நமது சகோதரன் பெரும் பழிகாரன், நம்மை லேசில்விடான். பலகேள்வி போட்டு வாதிக்கத் தொடங்கு வான். அவனுக்குப் பயந்து தாறுகவேண்டும். மேலும் மண வாளனைமணந்தாகவேண்டுமென்று கண்டித்துக் கூறுவான். கட்டுப்படவேண்டியதாய்முடியும். அந்தோ! இதற்கென்செய்வேன். நமதுசொந்தவூருக்குச்செல்வதற்குமா! இத்தனை பாடு வேண்

டும் ? சரி. இவ்வளவையும் ஒருவாறு பொறுத்துக்கொள்வ தாகவைத்துக் கொள்வோம். என் அன்பிற்கு அணிகலனுக விளங்கும் ஆருயிர் விஜயத்தின் முன், நாணமின்றி நான் எவ்வாறு செல்வேன் ? அவன் முகத்தில் எங்ஙனம் விளிப்பேன்? எனது கற்பையும் மனத்தூய்மையையும் விஜயத்திற்கு மெய்ப்பிக்குந்தனையும் நானகவே ஊருக்குச் செல்வது தவறு.

அல்லாமல், நம்மை வஞ்சித்துத் துராக்கிருதமாய்க் கவர்ந்து வந்து இத்தகைய துன்பத்திற்கும், அவமானத்திற்கும் ஆளாக்கச் செய்த பரமதுஷ்டர்களாகிய மாதவன், கோவிந்தன், இவர்களுக்குத் தலைவனாகிய மைனர் குழந்தைவேலப்பன் ஆகிய இவர்களுக்குப் பரம பிதாவாகிய நீதியங்கடவுளால் ஏதேனும் தண்டனை ஏற்படும் வரையும், மறைந்திருப்பது தான் சிறந்தது. திரௌபதி, அருச்சுனன், நளன் முதலிய பேரரசர்கள் தங்கள் எண்ணம் நிறைவேறுந்தனையும் மாறுவேஷங்கொண்டு மறைந்திருந்தே காரிய சித்தியடைந்தனர். நானும் அவ்வாறேயிருப்பேன். என்று தன் ஆலோசனையால் ஒரு முடிவுக்குக் கொண்டுவந்தாள். இதற்குள் தேய்பிறை அஷ்டமிச்சந்திரன் ஆகாயத்தில் தோன்றித் தனது சிறு வொளியால் பிரகாசித்தனன். சந்திரோயதங் கண்ட குணசுந்தரம், தன் அகன்ற விழியால் தானிருக்கும் பிரதேசத்தை நாற்புறமும் சுற்றிப் பார்த்தாள். தன்னெதிரில் கூப்பிடு தூரத்தில் மண்டபம் ஒன்றிருப்பதைக்கண்டனள். அத்துக்கத்திலும் ஒருவாறு சந்தோஷப்பட்டு சட்டென்றெழுந்து மெதுவாக நடந்து அம்மண்டபஞ் சேர்ந்து ஓரிடத்திருந்து தானுடுத்திருந்ததாகி லலிதாவின் ஆடையைக்களைந்துவிட்டுத் தன் நன்மைகருதி அவளுதவிய ஆணுடையை வெகுபொருத்தமாக அணிந்து கொண்டாள். அங்ஙனமே சிறிதுநேரமிருக்கையில், சுக்கிரன்உதயமாய் அடிவானம் வெளுத்தது. நல்லோர்க்கு வந்த துன்பம் விரைவில்

அகல்வதுபோல் இருட்படலம் சட்டென்று நீங்கிற்று. குணா சுந்தரம் இனி இங்குத் தாமதிப்பது சரியல்லவென்றெழுந்து கிழக்குத்திசைநோக்கிவழிகொண்டாள். முன்பின் நெடுந்தூர வழி நடந்து பழக்கமில்லாதவளானதால், மிகுந்த சிரமத்துடன் மெதுவாகத் தளர்நடைகொண்டு சூரியன் உதயமாய் ஆறு நாழிகையளவில் "உயர் குன்றம்" என்னும் ஓர் சிற்றூர் வந்து சேர்ந்தனள். அங்குக் காலைக் கடன்முடித்துச் சிறிது சிற்றுண்டி யருந்தி, அங்குநின்று செல்லும் தபால்வண்டியிலேறி நாற்பது மைலிலுள்ள "கோழமம்" என்னும் பேரூர் சேர்ந்து ஊர்க்கோடியிலுள்ள "தங்கவேல் முதலியார் சத்திரத்தில்" வந்து தங்கினள். அப்பொழுது மாலை மணி ஐந்து. தன்னுடையும், தோற்றமும் ஆணுருவே யன்றி உண்மையில் பெண்பாலே. பெண்ஜன்மங்களுக்குப் பேடித்தனம் இயற்கை. அதிலும் புதுவிடம். மேலும் பலபேர்வந்து தங்கும் சத்திரம். பலமுறையாத்திரை செய்து அனுபவமும், தைரியமுமுள்ள ஆண்மக்களே சத்திரத்தில் தங்குவதற்கு ஆலோசிப்பரென்றால், வெளியூர்முகத்தில் விழித்தறியாத குணசுந்தரம் சத்திரத்தில் தங்குவதற்கு அஞ்சுவதும், ஆலோசிப்பதும் ஆச்சரியமல்ல. அல்லாமல், தான் பூண்டிருக்கும் வேடத்திற்குத் தனியிடமே அத்தியாவசியமானது. அதுபற்றி என் செய்வது? தனியிடத்திற்கு எங்கு சென்று விசாரிப்பது? என்று ஆலோசித்த வண்ணமிருந்தாள். அப்பொழுது அச்சத்திரத்தில் வேலைபார்த்துவரும் "மரகதம்" என்னும் அறுபது வயதுடைய கிழவி யொருவள், புதிதாகவந்து அங்குக்குந்தி ஏதோ! ஆலோசித்துக்கொண்டிருக்கும் வாலிபனைக் கண்டாள். அவன் இளமையையும், அழகையும், கம்பீரத் தோற்றத்தையும், சாந்தப் பார்வையையும், எவர்மனத்தையும் பிணிக்கும் வசீகரசக்தியையும் கண்டு வியந்தாள். வியந்த அவள், இவன் உயர்குலத்

துதித்த பிரபுவீட்டுப்பிள்ளை போலும் எனக்கருதி, நெருங்கி, வெகுவிநயமாகத், தம்பீ! தாங்கள் எந்தவூர்! இவ்வூருக்கு இன்றுதான் புதிதாக வந்திருக்கின்றீரோ? இதற்குமுன் வந்ததுண்டா? உமக்கறிமுகமானவர்கள் இங்கேவரேனுமுண்டா? என்னகாரியமாய் வந்தது? எதனையோபற்றிச் சிந்தித்துக் கொண்டிருக்கிறாப் போலிருக்கிறது. என்றாதிய கேள்விகளைக் கேட்டாள். குணசுந்தரம் பாட்டீ! நான் இவ்வூருக்குப் புத்தம் புதியவன். இதற்குமுன் இவ்வழி வந்தேனில்லை. நான் யோசித்துக் கொண்டிருந்த காரியம் வேறு என்றனள்.

**மரகதம்** :—அக்காரியம் என்ன! நானறியச் சொல்லக்கூடுமா? என்னாலாகவேண்டியகாரியம்ஏதேனுமிருந்தால் சொல்லுங்கள். செய்து முடிக்கவும் தயாராயிருக்கிறேன். இச்சத்திரத்திற்குத் தங்களைப்போல் எவ்வளவோ பெயர் அடிக்கடி வருகிறார்கள். அவர்களிடத்தெல்லாம் நான் இவ்விதம் நெருங்கிச் சென்று வலுவில் உபகாரம் செய்வதாசக் கூறியதில்லை. உம்மைக்கண்டதும் என்மனதில் ஓர்வித அன்பும், பரிவும் தோன்றியது. காரணந் தெரியவில்லை என்றாள்.

**குண** :—பாட்டீ! நீர்கூறியது முற்றிலும் உண்மையாய் இருக்கலாம். என்னிடத்து உமக்கு இங்ஙனந் தோன்றிய அன்பிற்கு நான் வெகுவாய்ச் சந்தோஷிக்கிறேன். நான் இந்து தேசத்தை முழுதுஞ் சுற்றிப்பார்க்க வேண்டுமென்ற நோக்கத்தோடு யாத்திரை வந்திருக்கிறேன். இங்குச் சிலநாள் தங்கிச்செல்ல உத்தேசம். ஆனால், எனக்கு நல்ல வசதியும் யாரும் நெருங்காத தனிவிடுதியும் வேண்டும். உம்மால் ஏற்பாடு செய்து தரமுடியுமானால் தங்குகிறேன். யோசித்துச் சொல்லவும் என்றாள்.

**மரகதம்** :—ஐயா! யோசிக்கவேண்டிய காரியம் ஒன்றுமேயில்லை. உமக்கு வேண்டியவாறே வேண்டிய சௌகரியம் செய்து தருகிறேன். நீர்மெத்த சந்தோஷமாய் உமக்கிஷ்ட

முன்னாள் வரையும் தாராளமாய்த் தங்கிப்போகலாம் என்றாள்.

**குண**:—பாட்டீ! என்போன்ற வாலிபர்கள் பலரும்வந்து தங்கியிருக்கும்சத்திரத்தில் நானும்தங்கியிருப்பது கூடாது. என் அந்தஸ்துக்கும் பொருந்தியதல்ல. தனிவிடுதியாய்த் தயார்செய்யும். அதற்கு பொருள் வேண்டினால், வேண்டிய படி தருகிறேன். சீக்கிரம் போய்த் தயார் செய்து வாரும் என்றாள்.

**மரகதம்**:—ஆ! அப்படியே ஏற்பாடு செய்து கொண்டு இதோ! விரைவில் திரும்பி வருகிறேன் என்று சொல்லிப் போனாள்.

**குண**:—கிழவி சென்றபின் தனக்குள்ளாக, மரகதம் வெகு நல்லவள்போல் காண்கின்றாள். நம்மீது ஒருவித அன்புள்ளவளாகவுமிருக்கிறாள். நமது காரியம் கைகூடுந்தனையும் இங்கு தங்கியிருப்பதே நன்மையாகத் தோன்றுகிறது. மேலும் இது நமது ஊருக்கும் சமீபத்திலிருப்பதால், மாவுத்தம்பதியிலுள்ள நமது பெற்றோர்களுடைய விஷயங்களையும், விஜயத்தின் நிலைமையையும் விசாரித்தறிந்து கொள்ளலாம். எதற்கும் இங்குத்தாமதிப்பது நலமே. இரண்டொருவாரம் சென்றமேல் இதனை விட்டுச் செல்வதைப்பற்றி ஆலோசிப்போம். என்று ஒரு தீர்மானஞ்செய்துகொண்டாள். இதற்குள் கிழவியும் திரும்பிவந்து தம்பி! உன் இஷ்டப்படியே தனிமையும் வசதியுமான நல்ல விடுதியொன்று தயாரித்துவிட்டேன். யாருமே அங்கு ஒரு அடி எடுத்தும் வையார். புறப்படும். வந்துபாரும். என்றாள்.

**குண**:—மரகதத்தின் அன்புக்கும், உண்மைக்கும், மெத்த மகிழ்ந்து எழுந்து அவளுடன் பின்சென்று அவள் காட்டிய விடுதியைப்பார்த்துத் தான் உத்தேசித்ததற்குமேல் வசதியாயிருப்பதற்குச் சந்தோஷித்து அவ்வாறு வசதியேற்படு

மாறு செய்வித்த கடவுளுக்கு வாழ்த்துக்கூறி கிழவிக்கும் நன்றிசெலுத்தி அவ்வறையில் சென்று தங்கினாள். குண சுந்தரத்தை இங்கு விட்டு இனி விஜயத்தைப்பற்றி விசாரிப்போம்.

# XVII

## நினையாத நீக்கம்

“ எல்லா மறிந்து படித்தே யிருந்தெமக்குள்ளபடி
வல்லா னறிந்துள னென்றுணராது மதிமயங்கிச்
சொல்லான் மலைந்துறுகும் விதியின்படி துக்கித்துப்பின்
எல்லாஞ் சிவன்செயலென்பார் காணகச்சியேகம்பனே.”

(பட்டினத்தடிகள்)

அயலாரிடத்துப் பொய்கூறி அற்ப ஊதியம்பெற்று அதனால், தான் இன்புறுவதே மேலெனக்கருதும் இழிவான சுபாவமும், நிரபராதிகளைக் கொடுவேதனைக் குள்ளாக்கித் தனது சாமர்த்தியத்திற்கு வியந்து கொள்ளும் மதியீனமும் நிறைந்த வேணுகோபாலனின் அநீதத்திற்கும், உண்மையுணராது தன்னைப்பெருங் குற்றத்திற்குள்ளாக்கிச் சிறைசெய்வித்த முத்துவேலப்பரின் மூதுக்குறைவுக்கும், தன் விதியின் செயலுக்கும், விஜயம் மெத்தநொந்து சித்தம் நைந்தனன். பிறர்க்குத்தீங்கு செய்வதை நினையாமையும், பிறர் துன்புறுவதைக்கண்டு சகிக்கமுடியாமையும் இயற்கையாகக் கொண்ட நமக்குமா ! இக்கதிநேரவேண்டுமென்று நினைந்துநினைந்தழுதனன். இறுதியாக, ‘வருவனவெல்லாம்வந்தெய்தும்’’ பொருந்துவனபோமினென்றாற்போகா ‘ஊரெல்லாங்கூடியொறுத்தாலும் போமோ விதி’ யென்றாகிய ஆன்றோர்உரைகள் அநுபவவாக்கானதால் அவை எக்காலும் பொய்க்காதன்றோ? வினை ஊட்டாது கழியாது. ஆனதால், அதுபற்றி வருந்துவானேன்? என்று ஒருவாறுதேறித் துக்கத்தினின்றுந்தெளிந்தனன்.

பின்னும், நமக்குத்தான் இவ்விதி யென்றால், குணசுந்தரம் நம்பொருட்டாகக் களவாடப்பட்டாளெனக் கேட்கும்போது எனது மனமடையும் வேதனைக்கு ஓரளவேயில்லை. இக்களவு யாரால் நேர்ந்திருக்கும்? களவுக்குக் காரணமென்ன? மணவாளப்பிரபுவின் தூண்டுதலா? வேணுகோபாலனின் வஞ்சகச் செயலா? எனக்கொன்றுமே விளங்கவில்லை. அந்தோ! என்கண்மணீ! குணசுந்தரம்! என்பொருட்டாய் உனக்கு இக்கேடு சூழ்ந்ததென்றால், நான் மெத்தக்கொடியனே. நீ எவ்வித்த்துன்பம் அடைகின்றனையோ! எப்பாடு படுகின்றனையோ! இளமைமுதல் துன்பமென்பதனை யுணர்ந்தறியாத செல்வச்சீமாட்டியாகிய உனக்கு என்பொருட்டு இத்துன்பமா உண்டாகவேண்டும்? உன்னை ஒருநாளுந் தனித்துவிடாத உன்தாய் தந்தையர் உன்பிரிவினால் எவ்வாறு துன்பமடைகின்றனரோ! நீ களவாடப் பட்டபோது எவ்வாறு கலங்கித்தவித்தனையோ! அச்சமயத்திலும் என்னை நினைக்க மறந்திருக்கமாட்டாய். இப்பொழுது என்நிலைமையை நீ உணருவாயாயின், மேலும் படுவேதனைக்கு உள்ளாவாய். விதியென்னமோ மிகப் பொல்லாததே. விதியென்னும் வினைக்கள்வன், நம்மீது வைத்திருக்கும் வர்மம்மிகக்கொடிது. நிரபராதிகளாகிய நம்மிருவர்மீதும் அவனுக்கேற்பட்ட வஞ்சினம் யாதோ! என்னால் உணரக்கூடவில்லை. நீதியங்கடவுள் மிகக் கருணையுள்ளவர். அன்பு நிறைந்தவர். பட்சபாதமற்றவர். அங்ஙனமிருக்க, வீணே அவர்மீது சினப்பதும், சீறுவதும் பெரும்பிழையாம்.

"அழுதாற் பயனென்ன நொந்தாற் பயனென்ன வாவதில்லை
தொழுதாற் பயனென்ன நின்னையொருவர் சுடவுரைத்த
பழுதாற் பயனென்ன நன்மையுந்தீமையும் பங்கயத்தோ
னெழுதாப் படிவருமோ சலியாதி ரென்னேழை நெஞ்சே"

(பட்டினத்தடிகள்)

என்று மொழிந்துவைத்த பெரியார்பெருங்குருடரல்ல. உண்மையை ஊடுருவியறிந்து உரைத்த அனுபவமொழி. நம்மையே நாம் நொந்து கொள்ளவேண்டும். விதியின் விளைவையும் விசித்திரச்செயலையும், அறிந்தவரார்? அதுவிண்ணவர்க்கும் அரிதென்றால் நமக்கு எளிதாமோ? ஆனதால், நான் சிறைப்பட்டதையும், நீ களவாடப்பட்டதையும் பற்றி வருந்தியாவதென்ன? ஆனால், கற்புடைமையும், கருணைச்செயலும், சாந்தகுணமும், ஒழுக்கநலமும், கடவுட்பக்தியும் உடைமையாகக்கொண்ட உனக்கு ஆபத்திலும் தீங்குநேராதென்பது எனது நம்பிக்கை. நல்லாரைத் தீங்கணுகாதவாறு துணைநின்றுகாப்பது கருணையுங்கடவுளது தொழிலாம். ஆனதால், உண்மையில் உனக்குத் தீங்கு நேராதென்று தன்னுள்மொழிந்துகொண்டு அகங்கருகிவாடும் ஆன்மாக்கட்கு, அருள்வடிவாய் விளங்கும் அம்பிகை பாகனை, மனமொழிமெய்களால் பிரார்த்தித்துத் தோத்திரித்து வணங்கி அங்ஙனமே சிறிதும் அசைவின்றி மெய்மறந்திருந்தனன். வேண்டுவார் வேண்டுவதீவது விமலனது தொழிலெனினும், காலம் வந்தாலல்லது அவனும் கருணைகொள்ளத் துணியான். இந்நேர் தெய்வரம்பு, விஜயன், நாடோறும்காலைமாலைநடு இரவுகளில் இங்ஙனம் கடவுளைக்கைதொழுது வருவன். மாதம் இரண்டொன்று கழிந்தன. ஒருநாள் துக்கத்தின்மிகுதியால் தூக்கம்பிடியாமல் குணசுந்தரம் களவாடப்பட்டிருக்கும் காரணத்தைக் கண்டுபிடிக்கவும், தான் குற்றவாளியல்லவென்பதை மெய்ப்பிக்கவும், குணசுந்தரத்தை எவ்வகையிலும் மீட்கவும் செல்லுவதற்கு நாம் இச்சிறைக்கூடத்தினின்றும் வெளிபெறுவதெங்ஙனம்? ஒரு நிவர்த்தியின்றிச் சதா துக்கத்தால் வாடி சிறைச்சாலையிலே அடைப்பட்டுக்கிடப்பதா! ஆ தெய்வமே! உலகிற்குறுதுணையே! எல்லாப்புண்ணியமும் பிறந்த இடமே! கரங்குவிவாருள்மகிழுங்கோனே! சிரங்கு

விவார் ஒங்குவிக்கும் சீரியா! ஈசா! எந்தாய்! செம்பொற் சோதியே! தின்னத் தின்னத் தெவிட்டாத இன்பமே! என்று நாக்குளர உரைதடுமார, மெய்சிலிர்த்துக் கண்ணீர்வாரத் தெய்வத்தைத்தொழுது நின்றனன். அடியார்க்கெளியனும் தீனபந்துவும், அனாதைரட்சகனுமாகிய ஆதியங்கடவுள் விஜயத்தினது வேண்டுகோளுக்கு அருள்சுரந்தவராய்ப் பெரு மழையொன்று பெய்யுமாறு செய்தனர். அம்மழையின் பிரவாகத்தால் விஜயன் அடைப்பட்டிருந்த சிறைச்சாலைச்சுவர் அதிகநனைவுண்டாய், ஓர் ஆள் தாராளமாய் வெளியிற் செல்லக்கூடிய அளவு பிளவுண்டாயிற்று. திடீரெனத் தன்னெதிரில் சிறைச்சாலையின் வலிய சுவர் பிளவுபட்டிருப்பதைக் கண்டவிஜயம் வியந்த சிந்தையனாய், கருணாநிதியாகிய கடவுள் நம் வேண்டுதலுக்கருள் சுரந்து வழிவிட்டிருக்கின்றனர் என்று மிகமகிழ்ந்து, உற்சாகமேற்கொண்டு, மெதுவாக அவ்வறையைக்கடந்து வெளியில் வந்து பார்த்தனன். அப்போது சிறைக்காவலரும், பிறரும் மெய்மறந்து காடநித்திரையிலிருந்தனர். விஜயம் யாதோராச்சமுமின்றி அப்பேரிருளை ஒருபொருட்படுத்தாது எங்குந் தங்காது, திரும்பிப்பாராது, கடினகதியாய் ஓரேநடையாய் நடந்து விடியுமுன் இருபது மைலுக்கப்பாலுள்ள "**சிறுமங்கலம்**" என்னும் சிற்றூர் சேர்ந்து ஒரு சத்திரத்தில் தங்கினன். இக்காலத்துச் சிறையாளர் தரித்திருக்கும் இரும்புக்காப்பு, அரைக்கை வரிச்சட்டை, லங்கோடுபோன்ற காற்சடடை முதலிய சின்னங்கள் அக்காலத்துச் சிறையாளர்க்கில்லை. வீட்டுடையே தரித்துக் கொண்டிருந்தனர். ஆனதால், தப்பித்துவந்த விஜயன் கைதியென்று பிறர் நினைக்கவும், சொல்லவும் இடமில்லாமலிருந்தன. விஜயம் தப்பிவந்த தன்னைச்சிறைக்காவலர் பின்னே தேடித்தொடர்ந்து வருகின்றார்களோ என்ற நினைவோடேயே விரைவாகவந்ததினால் மெத்தச்சோர்ந்து மயங்கி உட்

கார்ந்த இடத்திலேயே படுத்துவிட்டான். அச்சத்திரத்தில் யாரும், தன்னைக் கவனிப்பவரில்லாமையால் பகல் பன்னிரண்டு மணிவரையும் நினைவின்றித் தூங்கிக்கொண்டிருந்தனன். யாருமற்றவருக்குத் தெய்வந்துணை என்றாற்போல்விஜயனுக்கு உதவிபுரிய நாற்பது வயது கடந்து, காஷாயம்பூண்ட துறவியொருவர், அயர்ந்து தூங்குகின்ற விஜயனையடுத்து அவன் திருமுக விலாசத்தையும், அங்க அமைப்பையும், சிறந்தவடிவையும், சிங்காரத்தோற்றத்தையுங்கண்டு இச்சிறுவன், செல்வான் வீட்டு அருமைப் பிள்ளைபோலும். ஏதோ! ஒருகாரணத்தை முன்னிட்டுப் பெற்றோரைவிட்டுப் பிரிந்து தனியே வந்திருக்கின்றனன். சிரமப்பட்டறியாதவனாதலால் பசிவாதனை பொறாது களைத்துவிட்டனன். இவ்வழகிய பிள்ளையையாருமே இதுவரை கவனிக்கவில்லை. நாமேனும் இவனையெழச்செய்து இவன்களைப்புத்தீர முதலில் உணவருந்தச் செய்து, பின்னர் விபரம் விசாரிப்போம். என்றுகருதி அவன் அருகில்சென்று மெதுவாக அப்பனே! எழுந்திரு என்றுகையால் தடவினர். அவர்கையின்ஸ்பரிசம் தன்மீதுபட்டமாத்திரத்தில் விஜயன் திடுக்கிட்டுக் காவலாளிகள் தன்னைத்தேடிவந்துவிட்டனரோ வென்றஞ்சி மிரண்ட பார்வையில் கண்விழித்துப் பார்த்தனன். தான்நினைந்ததற்கு மாறாகத் தன்னெதிரில் அருட்கோலவடிவத்துடன் சாந்தரூபியாய் ஒரு அடியவர் நிற்பதைக் கண்டு அச்சமொழிந்து சட்டென்றெழுந்து அவரை வணங்கி நின்றனன். துறவியார் விஜயனது விநயத்திற்கும், ஒழுக்கத்திற்கும் மகிழ்ந்து அப்பனே! நாழிகை அதிகமாய்விட்டது. எழுந்து கைகால் சுத்தி செய்துகொண்டுவா! நாமிருவரும் உண்டு இளைப்பாருவோம் என்று கூறி அவனை அங்ஙனமே செய்வித்து உண்பித்தனர். விஜயன் களைதீர வயிறாறப் புசித்து மகிழ்ந்தனன்.

சற்று நேரம் பொறுத்தபின், துறவியார் அப்பனே!

உனது அமரிக்கையும், அழகையும் பார்க்கும்போது பெருங் குடும்பத்துதித்த செல்வப்பிள்ளைபோல் காணப்படுகிறது. அங்ஙனமிருக்க நீர் யாருமற்ற ஏழைபோல் அகதிகள் தங்கும் சத்திரத்தில், பசியின்களைப்பினால், வெற்றுத்தரையில் படுத்துறங்கக் காரணமென்ன? உண்மையை ஒளியாமல் உரையும் என்றனர்.

**விஜயன்** :—துறவியார் வினவிய விஷயங்களுக்கு விஜயன் தன்னுள், இதற்கென்ன பதில் உரைப்பது? உண்மை கூறுவதா! மறைத்துச் சொல்வதா! மறைத்துச் சொல்வோமேயானால்பொய்புகன்றகுற்றத்திற்கும்,நன்றி கொன்ற பாதகத்திற்கும் இலக்காவோம். அன்றியும், சிறையினின்று தப்பி, உதவி புரிவோரின்றி ஒரு வேளை உண்டிக்கும் வகையற்றுக் களைப்பின் மிகுதியால் சத்திரத்து வெளித்திண்ணையில் தனியே கிடந்து உறங்குவோனைத் தட்டியெழுப்பி, வலுவில் உபசரித்து, உண்டியுதவி, பசுப்பிணி போக்கிய பெரியாரிடத்திலா பொய் புகல்வது?

வாய்மை யெனப்படுவதி யாதெனின் யாதொன்றுந்
தீமை யிலாத சொலல்."

ஆனதால், நாம் பொய்யின்றி உண்மையை யொழியாது மொழிவோமென்று தீர்மானித்துக்கொண்டு, வெளிப்படையாக அவகுணமொழித்த தவப் பெருஞ்செல்வீர்! வாடும் பயிர்க்கு மேகம் தானாக வலுவில் மழை பெய்து உதவுவது போல், தளர்வுற்றிருக்கும் எனது மெலிவு கண்டு தாங்கள் அருள் கூர்ந்து உதவிய பேருபகாரத்திற்கு யான் யாது கைம்மாறளிக்கப் போகின்றேன். என்று உபசாரம் கூறித் தனது பெயரும், தனப்பிறப்புமுதல் அதுவரையும் நிகழ்ந்த விஷயங்களத்தனையும் விடாது சொல்லித் தனக்குற்ற இடுக்கண்ணையும் நிவர்த்தி செய்யும்படி வேண்டினன்.

துறவி :—அது கேட்ட பெரியார், விஜயத்தின் பெருங் குணத்திற்கு மகிழ்ந்தாரெனினும், அவனுக்கு நேர்ந் துள்ள துன்பத்திற்கும், ஆபத்திற்கும் மெத்த வருந்தினர். விதியின் விளைவு வெகுவிசித்திரம். விதி யாரையும் விட்டதா யில்லை. கோட்டிமுதல் தொண்டைமான்வரையும் விதியின் வயப்பட்டே வருந்துகின்றனர். இதற்கு நாம் செய்வ தென்ன? கப்பலேறியவன் கரை சேர்ந்தாக வேண்டுவது போல் விதிவயப்பட்டவன் அதனைக்கண்டிப்பாக அனுப வித்துத்தானாகவேண்டும். வேறு நிவர்த்தியில்லையென்பதை முன்னமே உணர்ந்தவரானதால் விஜயத்தை நோக்கி அன் பனே! உமக்கேற்பட்டுள்ள சங்கடம் விதியின் பாற்பட்டது. அதனை விலக்க யாராலும் முடியாது.

தன்னைத் தானறியாத்தன்மையும், இவ்வன் குணவிசேஷச் சிறப்பையும் உள்ளபடி அறிந்து கொள்ளும் வல்லமையு மின்றி தோற்றத்திற்குமட்டும் குழைத்த விபூதிப்பூச்சு உருத் திராக்கமாவடம், தலைமுண்டிதம் அல்லது சடைமுடி, செபமாலை, மௌனப்பார்வை, படாடோபம், வாக்சாலம் முதலிய செயல்களை மேற்கொண்டு வானத்தை வில்லாக வளைப்போம், மணலைக் கயிறாகத்திரிப்போம், ஜலமீது செல் வோம், கனல்மீதிருப்போம், இரும்பைப் பொன்னாக்குவோம், மன்னவரை ஏவல் கொள்வோம், போன உயிரை மீட்டுத் தருவோம், எமக்கரிது ஒன்றுமேயில்லையென்று நாக்கடிப்பாக வாய்ப்பறையறைந்து பேதையர்களை வஞ்சிக்கும்போலித் துறவிகளைப்போல் நாமொன்றும் கூறத்துணியோம். நமக்கு அவ்வல்லமையுமில்லை. வேத சுருதியிலே விதித்தபடி எல்லாம் நடந்து முடியுமென்பதில் ஐயமில்லை. ஆனதால், நீ கவலைப் படுவதேன்? நான் உறுதியாகக் கூறுவதொன்றுண்டு. நல்ல வர்க்குத் துன்பம் நேருங்காலத்துக் கருணையங்கடவுள், அவர் வருந்தாவகை அருகிருந்து காப்பதென்பதில் தடை

யேயில்லை. அல்லாமல் இப்பொழுது உனக்கேற்பட்டுள்ள ஆபத்தால் யாதோர் தீங்கும் விளையாது. காதல் மனைவியாக நீ கருதியுள்ள குணசுந்தரத்திற்கும் அப்படியேயாம். அவள் க்ஷேமத்தோடிருக்கிறாள். அவளே உனக்கு மனைவியாகவும் வாய்ப்பாள். இவைகளொன்றும் தவறாது உறுதியோடிருக் கலாம். இனி நான் சென்றுவருகிறேன் என்று கூறி திருநீற ளித்து ஆசிவழங்கி விடைபெற்றுத் தம்மிச்சைவழி சென் றனர்.

துறவியார் அவ்வளவு விரைவில் தன்னைவிட்டுப் பிரிந்த தற்கு விஜயம் மெத்த வருந்தினன். அவர் கூறிய வாக்கனை த்தும் கபடமற்றதாய், உண்மை நிறைந்ததாய் நிஜசந்நியாசி களுக்கிருக்கவேண்டிய தன்மையமைந்ததாய்க் காண்பதற்கு மெத்த வியந்தனன். ஆனால் இன்று இராபோஜனத்திற்கும் இனிமேல் ஆகவேண்டியசெலவுகளுக்கும் என்னசெய்வதென் பதைப் பற்றிய விசாரம் வருத்தத் தொடங்கினது பற்றித் தலை குனிந்து கையைக் கன்னத்தின்மீது வைத்துக்கொண்டு ஆழ்ந்தயோசனை செய்துக்கொண்டிருந்தனன். அப்போது அவ்வழியே சென்று கொண்டிருந்த பிரபு ஒருவர், தாகசாந்தி முடித்துச் சிரமபரிகாரம் செய்துபோக வேண்டுமென்று கருதி, அச்சத்திரத்திற்கு வந்தார். அப்பொழுது சுவற்றில் தீட்டிய ஓவியம்போல் சிறிதும் அசைவின்றி வாடிய முகத் துடன் ஆழ்ந்த சிந்தையில் ஒரு தனியிடத்தில் உட்கார்ந்து கொண்டிருந்த விஜயனைக்கண்டனர். அழகும், இளமையும் நிறைந்து,காண்போர் கண்விருந்தாயுள்ள இவ்வாலிபன், மன மகிழ்வோடு பேருல்லாசமாய் இருக்கவேண்டிய இக்காலத்து இவ்வாறு துன்பமடைந்திருக்க வேண்டிய காரண மென்ன ? அவனைக் கேட்டறிந்து அவன் துன்ப நிவர்த்திக்கேற்ற உப காரத்தைச் செய்து போவோமென்றுட்கொண்டு, சத்திரத்தி னுட்சென்று தாகசாந்தி செய்துக்கொண்டு, விஜயன்வீற்றி

ருக்கு மிடத்தையடுத்து வந்து தம்பீ! என்ன யோசனையி லிருந்து கொண்டிருக்கிறாய். உனக்கு நேர்ந்த அத்தகைய கவலையென்ன? இவ்வளவும் இளமையிலா! உனக்கா! இத் தகைய துன்பமுண்டாக வேண்டும். கவலை யொழிக. விவரம் கூறுக. வேண்டுமுதவி செய்கின்றோம் என்று கூறி னர். இங்ஙனம் கூறிய அக்குரல் மிக இனிமையுடையதாய், அன்பு நிறைந்ததாய், மனோவேதனைக்கோர் நன்மருந்தாய், ஆபத்துக்கோர் அருந்துணையாய்த் தோன்றித் தன் செவி வழியே நுழைந்து மனதிற்குப்பட்டது. சட்டென்று நிமிர்ந்து பார்த்தபோது தன்னெதிரில் உயர்ந்த ஆடைக ளணிந்து கருணை நிறைந்த பார்வையுடன் பிரபு ஒருவர் நிற்பதைக்கண்டனன், வீற்றிருந்த விஜயன் துணுக்கென வெழுந்து அஞ்சலியஸ்தனாய் அவரை வணங்கி அன்பார்ந்த ஐயா! தாங்கள் நினைக்கிறபடி எனக்கு ஒருவித யோசனையும் மனோவிசாரமுமில்லை. சும்மா அங்ஙனமே உட்கார்ந்திருந் தேன். என்றனன்.

**பிரபு:**—விஜயனது விநயத்திற்கும், இனிய சொல்லுக்கும் மிகமகிழ்ந்து தம்பீ! முதலில் உன் தோற்றத்தையும், முகக் குறிப்பையும் கண்ட போது, நமது தென்னாட்டுத் திலக மென விளங்கிப் பொய்யுடம்பு நீத்துப் புகழுடம்பெய்திய தேவர் திருவள்ளுவரின் திருக்குறளில்;

"அடுத்தது காட்டும் பளிங்குபோல் நெஞ்சங்
கடுத்தது காட்டு முகம்"

என்றசெய்யுள் ஞாபகத்திற்கு வந்தது. அது பற்றிக்கேட் டேன். அப்பெரியார் திருமொழி அநுபவவாக்கா? அன்றா? என்பது சந்தேகம். எனக்குற்ற ஐயத்தை அறிஞனாகிய நீ அகற்றுதல்வேண்டும். என்றனர்.

**விஜயன்:**—ஐயா! திருவள்ளுவ தேவர் திருவாக்கு என் றும் பொய்க்காததோர் திருமறை. அது 'பொய்யா மொழி'

யென்று ஒரு காரணப்பெயர் பெற்றிருப்பதே அவ்வாக்கின் உயர்வை நன்கு தெரிவிக்கும். அங்ஙனமிருக்க அதனைப் பொய்ம்மொழி யென்று புகலத் துணிவது பேதைமையின் பாற்படும். தாங்கள் கருதுகிறபடி எனக்கு மனோவேதனையும், அதனாலுண்டாகிய துக்க மிகுதியும் மனோவெண்ணத்தின் பிரதி சாயலாகிய என் முகத்தில் தோற்றியது உண்மையே என்றனன்.

பிரபு :—விஜயனது நற்குணத்திற்கும், அவனது கல்வியறிவிற்கும் மகிழ்ந்து தம்பீ! நீ இவ்வாறு வருந்தக்கூடிய வகையில் உனக்கேற்பட்ட துன்பந்தானென்ன? நானறியுமாறு கூறுக என்றனர்.

விஜய :—பிரபு கேட்டகேள்விக்குத் தனக்குற்ற துன்பத்தையும், எண்ணத்தையும், முன்னம் நடுப்பகலில் தன்னைச் சந்தித்த உண்மைத் துறவியாரிடத்துக் கள்ளமற மொழிந்தது போல் மொழிவதில் இஷ்டமற்றவனாய் விஷயத்தை முற்றிலும் மறைத்துக்கொண்டு 'ஐயா! என் மாற்றாந் தாயின் கொடுஞ் செயலுக்கும், சுடுமொழிக்கும் ஆற்றாது, அவர் கண்காணா விடத்தெங்கேனும் சென்று பிழைத்துப் போவோம் என்றுகருதி என் சிற்றன்னைபால் தொடர்புண்டமனத்தோடிருக்கும் என் தந்தையையும், பெரியவீட்டையும், அரும்பொருளையும் அறவே கைவிட்டு வந்துவிட்டேன். வீட்டை விட்டுத் தனியே வெறுங்கையனாய் வந்தவென்னிடத்துப் பொருளிருக்குமோ? அது இல்லாது போனதால் வயிற்றுப் பாட்டுக் கென்செய்வது? யாரைப்போய்க் கேட்பது? இரப்பதைவிட இறத்தல் நன்றல்லவோ! என்ற வாதனையால் வேதனைப்பட்டுக் கொண்டிருந்தேன். இதுதான் என்துயரத்திற்குக் காரணம்' என்று கூறித் தான் மனமறிந்து பேசிய பொய்க்கு நாணினவன்போல் தலைகுனிந்து நின்றான்.

பிரபு:—விஜயனது மொழிகேட்ட பிரபு மெத்த வருந்தி உலகில் மாற்றாந் தாய்களால் இதுபோன்ற பாலர் பாலிகைகளுக்குண்டாகும் துன்பம் மிகவென்பதைப் பலமுறை கேட்டிருக்கின்றோம். அறிவில்லாப் புருடர் கேவலம் காமசுகம் ஒன்றையே பிரதானமாகக் கருதித் தம் இரண்டாவது மனைவியர்களின் புதுமைமயலில் கட்டுண்டு தம் முதல் மனைவியர் அன்பையும், அவர்கள் அன்பின் அடையாளமாகிய அருமைக் குழந்தைகளையும் இவ்வாறு வருந்தியழவும் அவலமாகவும் செய்து விடுகின்றனர். அந்தோ! இவ்வவலட்சணம் நமது நாட்டுப் புருஷர்களைவிட்டு நீங்குந்தனையும், விஜயன் போன்றபாலியர்கள் இங்ஙனம் அகதியாய் வந்து மனம் வருந்திநொந்தழுகத்தான் வேண்டுமென்று கருதிக்கொண்டு பரிவும், இரக்கமும், கருணையும் நிறைந்தவரானதால், தனது சட்டைப் பையினின்றும் நூறு ரூபாய் நோட்டொன்றையெடுத்துத் தம்பி! நீ வீணாக வருந்தாதே. கடவுள் உன் துன்பத்தை விரைவில் போக்கியருள்வர்! என்று ஆறுதல் கூறி அந்த நோட்டை அவனிடம் கொடுத்து, நீ இதனை வைத்துக்கொண்டு க்ஷேமமாகச் செலவழித்துச் சாப்பிட்டுவா! ஒன்றுக்கும் அஞ்சாதே. தெய்வம் துணை நிற்கும் என்று தைரியவார்த்தை சொல்லித் தேறுதல் படுத்தி, விடை பெற்றுத் தன் வேலைமேற் சென்றார்.

விஜய:—நான் சிறைக் கூடத்தினின்று மீண்டது முதல் இங்ஙனம் இருமுறை துக்கித்து வருந்திய போதெல்லாம் ஒரு பெரியாரும், ஒரு பிரபுவும் என்முன் தோன்றி நான் வருந்தா வகை ஆறுதல் கூறி எனக்கு அருந்துணையாக நின்று உதவிபுரிந்து சென்றனர். இது திருப்பெருங்கடவுள் என்பால் வைத்த பெருங்கருணைத் திறம்போலும். அன்றியும், நான் மனதில் சங்கற்பித்துக் கொண்டு வெளிவந்த காரியம் இனிது விரைவில் நிறைவேறுதற்கு இச்செயல்கள்

முன்னறிகுறிபோலும். என்று நினைந்துகொண்டு அன்றிரவு அச்சத்திரத்திலுண்டு தனியிடம்தேடிப் படுத்துக்கொண்டு இரவெல்லாம் ஏதேதோ யோசனையாயிருந்து முடிவாகத் தன் இன்னுயிர்க்காதலி குணசுந்தரியைக்காணுமளவும் இச்சத்திரத்தைவிட்டுச் சிறிதும் அகல்வதில்லை யென்றும், தன்கையிலுள்ள பொருள் சிக்கனமாய்ச் செலவு செய்தால், ஆறுமாதத்திற்கு வருமென்றும், இவ்வாறு மாதத்திக்குள் எவ்வகையிலும் குணசுந்தரியைக் கண்டு கொள்ளலாமென்றும் நிஜவடிவத்தோடே நானிருந்தால் பகைவரிடத்தில் அகப்படநேரிடுமென்றும், யாருங்காணுமல் மறைந்திருப்பதற்கு. இக்காலத்திற்கேற்ற வேடம் துறவுக்கோலமே யென்றும், இப்பொழுது ஆங்காங்கு பல பட்டப்பெயர்களுடனும், படாடோபப் பகல் வேஷத்துடனும் காவிகாம்பரமுண்டு கமண்டல தாரணங்களுடனும் காணப்படும் சாமியார்களெல்லாம் நூற்றிற்கு இருவர் போக, தொண்ணூற்றியெட்டுப் பெயர் கொலை, களவு, மோசம், வஞ்சித்தல், குடிகெடுப்பு, துராகிருதப் புணர்ச்சி, கொள்ளை, வறுமை, சோம்பல், தீபாந்தரசிட்சை, ஜயிலினின்று தப்பி வெளியேறுதல் முதலிய பெரியகுற்றங்களில் சம்பந்தப்பட்டவர்களென்றும், அவர்கள் பிறருணராதபடி தங்களை முற்றிலும் மறைத்துக் கொள்ளச் சிகைவளர்த்தியும், நீண்டதாடி வைத்தும், பெரிய காவிச்சட்டையணிந்தும், கௌபீனம் லங்கோடுதரித்தும், மெய்முழுதும் நீறுபூசியும், கரத்திலும் சிரத்திலும், கழுத்திலும் ருத்திராக்கமாலை யணிந்தும், திருவோடேந்தியும், பிறரிடம் சம்பாஷிப்பதில்லை யென்ற வாய்பேசாதமௌனவிரதமேற்கொண்டும் இருப்பவரென்றும் இந்தகையவேடதாரிகட்கு இங்காரிக நாட்டில் இப்பொழுதுவேலையேயில்லையென்றும்மனத்திற்குள்ளாகவும் வெளிப்படையாகவும் பேசிக்கொண்டேயிருந்து அப்படியே தூங்கிப்போயினன். விடிந்ததும்

எழுந்து காலைக்கடன் முடித்துப் பல்துலக்கித் தான் இரவு நிர்மானித்துக் கொண்டபடி கடைவீதிக்குச் சென்று சாமியார் வேடத்திற்கு வேண்டிய காவித்துணி, உருத்திராக்கமாலை விபூதிப் பை முதலிய வஸ்துக்களை வாங்கிவந்து விதி விலக்கு முதலியவைகளைக் கவனியாமல் தன் இஷ்டப்படியணிந்து கொண்டு "பால்ய சந்நியாசி" என்னும் பெயர்வைத்துக் கொண்டு அதே சத்திரத்தின் அதிகாரியிடத்து அங்குள்ள தனியறை யொன்றைக் குடிக் கூலிக் கமர்த்திக் கொண்டு குணசுந்தரத்தின் வருகைக்கு எதிர்பார்த்தவனாய் அதே சிங்கையில் விஜயன் அங்கு தங்கியிருந்தனன்.

# XVIII

## நினைக்குங்கேடு தனக்கு

“இலனென்று தீயவை செய்யற்க செய்யி
னிலனாகு மற்றும் பெயர்த்து.”

(திருக்குறள்)

மாதவன் முதலிய துஷ்டர்களுக்கு மைனர் குழந்தைவேலப்பனும், தாசி லலிதாவும் என்ன செய்தார்களென்பதைப்பற்றிச்சிறிது கவனிப்போம் :—குணசுந்தரம் இத்துஷ்டர்சிறையினின்றும் லலிதாவால்நீக்கப்பட்டுக்கொழுமம் தங்கவேல் முதலியார் சத்திரத்தில் ஆண்வேடத்துடன் தங்கியிருப்பதை உணராத மாதவன்முதலிய பேதைகளும், அவர்களுறவுமேற்கொண்ட மைனரும், தாசி லலிதாவைக் குணசுந்தரமென்று நினைத்து அவள் வீற்றிருக்கும் அறையை நாடி மைனர் முன்செல்ல, துஷ்டர்கள் பின்சென்றனர். மைனர் வரவுகண்ட குணசுந்தரவேடமிட்ட லலிதா மகிழ்ந்தவளாய் எழுந்துமரியாதையாய் ஒருபுறம் ஒதுங்கியதையும், நேற்றுப்போல் இன்று அப்பிரீதி, சினம், கண்டித வார்த்தை, சீறுங்குணம் முதலிய செயல்களின்றி அமைதியாய்ச் சந்தோஷத்தோடிருப்பதையுங் கண்ட மாதவன் முதலியோர் காரியம் கைகூடியதற்கு மெத்தமகிழ்ந்து, மைனரிடத்து நாளைக்குப் பெறப்போகிற பெருந்தொகையையும், அதற்குமேல்கிடைக்கும் பெரும்பரிசைப்பற்றியும், லலிதா நமது விஷயத்தில்

மெத்த அபிமானமும், மதிப்பும்வைத்து இவ்வளவு சீக்கிரம் குணசுந்தரத்தை மைனருக்கிணங்கும்படி செய்த சமர்த்தைப் பற்றியும் வெகுவாய்ப் பின்னும் மகிழ்ந்து புகழ்ந்தனர். தாங்கள் நினைத்தபடியே காரியம் விரைவில் நன்றாய் முடிந்ததற்குத் தங்களது சாமர்த்தியமே முக்கியகாரணமென்று வியந்து பாராட்டிக் கொண்டனர். "மூர்க்கரே மூர்க்கர் முகப்பர்" என்பது முதுமொழியன்றோ ?

குணசுந்தரம் அறையினுள் சென்ற மைனர் வெளிவராமல் கதவடைத்துத் தாளிட்டதைக் கண்டு இனிநாம் வீணே இங்கு காத்துக்கொண்டிருப்பதில் பிரயோஜனமில்லை. காலையில் மைனர் மாளிகை சென்று கண்டுகொள்வோமென்று தீர்மானித்துக்கொண்டு மூவரும் மாடிப்படி கடந்து தெருவுக்கு வந்தனர். இங்ஙனம் வந்த மூவரில் வரதராஜன் கோவிந்தனையும், மாதவனையும் நோக்கி நண்பர்களே ! இன்று நாம் மூவரும் நன்றாக ஆசையடங்குமட்டும் வெறிக்கக்குடித்து மகிழ்வோம். நாளைக்கு நாம் பெருந்தொகை பெறப்போவதால் இப்பொழுதுண்டாகும் அதிகச் செலவைப்பற்றிக் கவலைப்பட வேண்டுவதில்லை. நமது கையிலுள்ள பணம் அத்தனைக்கும் குடித்துத்தீர்ப்போம் வாருங்களெனக்கூற, மாதவனும், கோவிந்தனும் அப்படியே செய்வோமென்று சொல்லி, மூவரும் அங்குள்ள கள்ளுக்கடைக்குச் சென்று மனங்கொண்டமட்டும் அதிகமாய்க் குடித்துவிட்டு வெளியில் வந்து பாழாய்க்கிடந்த ஒருபுறந்திண்ணையில்குந்தி அடியில் வருமாறு சம்பாஷிக்கத் தொடங்கினர்.

**வரதராஜன்** :—மாதவா ! மதுபானஞ் செய்வதாலுண்டாகும் இன்பத்திற்கு முன் மற்றின்பம் எம்மாத்திரம் ? சோர்வும், தளர்வும் பெற்றிருக்கும் சரீரத்திற்கு இப்பானத்தால் எவ்வளவு உற்சாகமும், தைரியமும், களிப்பு முண்டாகின்றது பார்த்தனையா ! என்று கூறி மகிழ்ந்தனன்.

மாத :—நண்பா ! நீர் கூறுவது முற்றிலும் உண்மையே. நன்ருகப் பேசத்தெரியாத ஒருவன், மணிபோலும் கண்டத்துடன் தாட்டியாகப் பேசவேண்டுமானல் கள்ளமுதைச் சிறிது பருகினல், ஓர் புதிய உணர்ச்சி தோன்றி அவன் வாசாமகோசரமாய்ப் பேசவும், ஞாபகத்தில் வாராதவற்றையெல்லாம் வருவித்துக்கொடுத்து அவனை நன்ருய்ச் சம்பாஷிக்கவும் செய்யும். இக்காரணத்தினுல் இதற்குச் 'சொல் விளம்பி' என்று திருப் பெயரும் ஏற்பட்டதென்ப.

கோ :—மாதவா ! இம்மதுவின் பெருமையை இன்னும் நீ நன்ருய் அறிந்திலைப் போலும். பூலோக கற்பகத்தருக்களெனப் புலவர்களால் புகழ்ந்து கூறப்படுகிற தென்னை, பனை முதலிய மரங்களிலிருந்து உண்டாகும் பால் வடிவமான மதுக்களைத் தேனுக்குள்ள திருநாமமிட்டு வழங்குகின்ற தொன்றே இதன் ஏற்றத்திற்குப் போதிய சாட்சியாம். அன்றியும் நமது தமிழ் நிகண்டுகளில் மதுவுக்கு அளி, இக்கு, களி, சாறு, சொல், தணியல், தேறல், தேன், நறவு, பானம், பிரசம், மது, மதுகரம், மகரந்தம், மாதவம், முருகு, வாருணி, விகுணி, வெறி என்ற பெயர்களைப் புலவர்கள் கூறியிருப்பனவற்ருல் அறியப்படும். இதனைப் பருகிக் களிப்பதற்குக் கையில் பணமில்லாத தரித்திரரும், லோபிகளும். கொடுக்கமாட்டாதவன் கூத்தைப் பழித்தது போல் இது மிக்க கெடுதலும், பஞ்சமாபாதங்களில் ஒன்று என்றும் இழித்துரைக்கின்றனர். இது அம்மதுவின் சுவையறியாதார் அசட்டுச் சொல் என்றனன்.

வரத :—கோவிந்தா! மதுபானங்களின் அருமை பெருமைகளைப்பற்றி நானறிந்தளவு நீங்கள் அறிந்திருக்க மாட்டீர்களென்று நம்புகிறேன். பன்னியுரைத்திடிற் பாரதமாம். சுருக்கமாக இரண்டொன்று மட்டும் கூறுகின்றேன். கவனமாகக் கேட்டு மகிழ்வீர்களாக.

தனவிசனம் மேற்கொண்ட ஒருவன் கள்ளென்னும் திருவமுதைக் கரகத்தில் வாங்கிக் கண்ணை மூடியபடி உண்ணுவானேயானால், அவன் களிப்பெனுங் கடலில் வீழ்ந்து கரைதெரியாது களிப்போடு மெய்மறந்து பெருஞ்சிரிப்புடன் தனது ஆத்மாவைப் பரமாத்மாவோடு ஐக்கியப்படுத்திக் குலாவி விளையாடிப் பெருமகிழ்வை அடைவன். அன்றியும், அன்னந் தண்ணீரின்றி அலைகின்ற யாசகர்கூட கள்ளமுதம் விற்கின்ற கடைகளை நாடிச்சென்று யாசித்திரந்து ஆழாக்கு, உழக்கு, அரைப்படி என்ற அளவிற் கிடைத்ததை ஆவலுடன் பருகிச் சோகமொழிந்து

"கொள்ளும் பெண்டிர் குட்டிகளைக் கூடவிற்றேயானாலும்
கள்ளும் அபினும் கலந்துண்டாற் காயகற்ப மதுதானே."

என்று களிப்பு மிகுந்து பாடி ஆடுவதைக்காண்கின்றோமே. அம்மட்டோ! நமது பூர்வீகத்தமிழ்ப் பேரரசரும், சிற்றரசரும், அவர்கள் பட்டத்துத்தேவிகளும், உத்தமஜாதிப்பெண்களும் கள்ளமுதெனும் இத்தேனமுதைக் காதலுடன் அருந்திக் களிப்படைந்ததாக நமது புராணங்களில்கூறியிருக்கிறது. இராமாயணத்தில்,

"தாமமும் நானமுந் ததைந்த தண்ணகில்
தூமமுண் குழலிய ருண்ட தூநறை
ஓமவெங் குழியுகு நெய்யி னுள்ளுறை
காமவெங் கனலினைக் கனற்றிக் காட்டிற்றே."

என்று கூறிய சிறப்பு எத்தகைய சிறந்ததாகக் காண்கின்றது. பின்னும் இக்கள்ளைக் கம்பர் கலவி செய்கின்ற நாயகனுக்கு உவமையாகவும் விளக்கியிருக்கின்றனர். அது :—

"இலையுழத் துவர்விட வெயிறு தேனுக
முலைமிசைக் கச்சொடு கலைபு முட்டற
அலைகுழல் சோர்தர அசதி யாட்டலால்
கலவிசெய் கொழுநரும் கள்ளு மொத்தவே"

எனவருவதாலும் அறியப்படும்.

"இளித்தக இன்னு செயினும் களித்தார்க்குக்
கள்ளற்றே கள்வநின் மார்பு."

எனப்புலவரிற்சிறந்ததிருவள்ளுவதேவரே இக்கள்ளமுதைப் பெண்கள் தங்கள் நாயகரின் மார்புக்கு உபமானமாகக் கொள்வதாகக் கூறியிருப்பதைக் கவனிக்குந்தோறும் அம்மதுவின் உயர்வு பெரும்புலவர்கள் கற்பனைக்குக்கூட விற்பனந்தருவதாக விளங்குகின்றதன்றோ? என்று புகழ்ந்து கூறினன். இதுகேட்டமாதவனும், கோவிந்தனும், வரதராஜன் மதுபானப்பிரசங்கத்திற்கு மகிழ்ந்து கொண்டாடினர். இங்ஙனம் பேசிமுடிப்பதற்குள் குடிவெறி அதிகப்பட வேறுவகையில் தங்கள் சம்பாஷணையைத் திருப்பினர். அது மைனரிடம் பெறவிருக்கும் லஞ்சத்தொகையைப் பற்றியது :—

கோ :—மாதவா! நாம்பட்டிருக்கும் இத்தகைய பெருஞ்சிரமத்திற்கு மைனர் நமக்குநாளைக்குஎன்னதொகைகொடுக்கக் கூடும்? அவர்குணம் கொடை முதலியவற்றை நன்குணர்ந்த உமக்குத்தானே தெரியும். விபரமாகச் சொல்லும் என்றனன்.

மாத :—கோவிந்தா! என்னுத்தேசம் ஒரு ஆயிரத்திற்குக் குறையமாட்டாதென்பதே.

வரத :—மாதவா! இக்கேவலம் இவ்வோராயிரம் ரூபாய்க்காகவா! நாம் மூவரும் இவ்வளவு நாளாக நமது வேலைகளையெல்லாம் விட்டு, உயிரையும் திரணமாக மதித்து இத்தனை பாடுபட்டது. ரூபாய் ஐயாயிரத்துக்கு ஒரு பைசாக்குறைந்தாலும் நான் வாங்கச் சம்மதியேன். என்னை உமக்குத் தெரியுமா! நன்றாக ஞாபகமிருக்கட்டும்.

கோ :—என்னமாதவா! நீ கூறுவது சுத்த அநியாயமாயிருக்கிறது. இவ்வற்பத்தொகைக்காக எவனும் பாடுபட முன்வரமாட்டான். தேவமாதரும். மதனரதியும் காணின்

வெட்கும் வடிவழகுடைய ஒரு பெண்ணரசியை, உயர்குலக் கொடியைப் பெருந்தனச் செல்வியை மைனருக்கு ஒருவிதக் கஷ்டமில்லாதபடி வெகு எளிதாகக் கொண்டுவந்து அவர் ஸ்வாதீனம் செய்ததற்குச் சரித்திரபட்சம் ரூபாய் பத்தாயிரமும், அதற்குமேல் சன்மானமும் செய்வாரென்றல்லவோ நினைத்திருந்தேன். நீர் கூறுவது 'ஆனை முட்டையிடும்' என்று எதிர்பார்த்திருந்தவன் கதையாகவல்லவோ முடியும் போலிருக்கிறது. வரதராஜன் கேட்பது முற்றிலும் ஞாயமே. நானும் அவன் கருத்தைப் பின்பற்றித் தானிருக்கிறேன். உம்மையும், மைனரையும் நாங்கள் லேசில் விடமாட்டோம். கவனமாயிருந்து நாளை சூரியோதயத்திற்குள் வரதராஜன் கேட்டபடி ரூபாய் ஐயாயிரத்திற்குக் குறையாமல் வாங்கித் தரவேண்டும். ஞாபகமிருக்கட்டும். என்றனன்.

மாத:—கோவிந்தா! வரதராஜா! நீங்கள் என்ன பிரமாதமாய்க் கோபித்துச் சொல்லுகிறீர்கள். என்ன சிரமப்பட்டு விட்டீர்கள்? எல்லாப்பிரயாசையும் என்னுடையதுதானே. ஏதோ! சகாயத்திற்கு உங்களைக் கூடவைத்துக்கொண்டதற்கு ஆயிரம் ரூபாய் போதாதா? அதே எதேஷ்டம். இதுவும் கொடாதவரை நீங்கள் செய்வதென்ன? உங்கள் வீண் மிரட்டுதலுக்கெல்லாம் நான் ஒருசிறிதும் அஞ்சுபவனல்ல. என்றனன்.

வரத:—மாதவா! பேஷ். நன்றாகக்கூறினாய். காரியம் முடியும் வரையும் மலையைப் புரட்டி விடுகிறேன். சமுத்திரத்தைக் கவிழ்த்து விடுகிறேன். பணத்திற் கென்னமோ! கவலைவேண்டாம். கேட்ட தொகை பெறத்தடை யிராது. காரியம் மட்டும் முடிந்தால் போதும். என்று வாய்கொண்ட மட்டும் நீட்டியளந்துவிட்டு இப்பொழுது காரியம் முடிந்ததும் காரியம் வேறாய்விட்டது போலிருக்கிறது. இந்தக் கைவரிசை யெல்லாம் யாரிடம் காட்டுகிறாய். கண்மூடி

விழிப்பதற்குள் நீயும், மைனரும் இருந்தவிடம் அறியாது செய்துவிடத்தெரியும். கவனித்துப் பேசு. மனதில் பய மிருக்கட்டும் என்று கூறினன்.

இங்ஙனம் வரதராஜன், மாதவன், கோவிந்தன் ஆகிய மூவரும் மனங்கொண்டபடி, வாய்க்குவந்தபடி, பதட்டமும், பிதற்றலுமாக வம்பும், தும்பும் பேசி மதுவெறி அதிகப் படத் தாளாதவராய் அப்பாழுந்திண்ணையில் வெற்றுத்தரை யில், மண்டியபுழுதியில் அங்ஙனமே மெய்மறந்து கால்மாடு தலைமாடாய்த் :—

> " துஞ்சினர் செத்தாரில் வேறரல்லர் யெஞ்ஞான்னும்
> நஞ்சுண்பார் கள்ளுண் பவர்."

என்னும் பொய்யாமொழிக் கிலக்கியமாய்ப் பிணம்போற் கிடந்தனர்.

இரவு அதிகம் குடித்துவிட்டதினல் மயக்கந்தெளியாமல், விடிந்து எட்டுமணிவரையும் தூங்கிவிட்டனர். காலை 8 மணிக்குமேல் ஒவ்வொருவராய் எழுந்து, தாங்கள் ஜனக்குடி யற்ற பாழ்மனையில் வெற்றுத்தரையில் நிறைந்த புழுதியில் படுத்துறங்கியதற்கு மெத்த வெட்கினவர்களாய்ச் சட்டென் றெழுந்து குயவன் சூளையில் புரண்ட கழுதைகள்மேல் சாம் பல் நிறைய அவைகள் அதுபோக நன்ருய் தங்கள் மேனி யை உதறுவதுபொல், இவர்களும் தங்கள் மேனிகளிலும், வேஷ்டிகளிலும் படித்திருந்த புழுதிகளை நன்ருய்த்தட்டி உதறிவிட்டு விரைவாகச் சென்று காலைக்கடன் முடித்துப் பல்துலக்கி வெகு அவசரமாக மைனர் அரண்மனையை நாடிச்சென்றனர். மைனர் இவர்கள் காலையில் தம்மைத்தேடி வருவார்களென்று முன்னமே நன்கு உணர்ந்திருந்தபடியால் தமது மாளிகை வாயில்காக்கும் காவலாளிகளிடம் மாதவன் முதலிய துஷ்டர்கள் உள்ளே பிரவேசிப்பதற்கு எவ்வித முகாந்திரங்காட்டினும் கண்டிப்பாக விடாதீர்கள். தவறி

விடுவீர்களாயின் கண்டிப்பாக உங்கள் உத்தியோகத்தை இழந்து விடுவீர்கள். உஷார். சொன்னது ஞாபகத்திலிருக்கட்டும் என்று எச்சரித்திருந்தனன். இயற்கையிலேயே கட்டிவாவென்றால் வெட்டிவரும் சுபாவத்தினர்க்கு இத்தகைய கண்டிப்பான உத்திரவும் கிடைத்தால், அக்காவலர் அதிகாரத்திற்கு ஒரு எல்லையு மிருக்குமா? 'வரட்டும் அப்பயல்கள். நாம் பேசிக்கொள்வோம்' என்று நிர்மானித்துக்கொண்டிருக்கையில், அத்துஷ்டர் மூவரும் அங்குவந்தனர். அப்பொழுது மாதவன் மைனர் மாளிகைக்குள் பலதரம் நுழைந்து பழக்கமுள்ளவனாதலால் சிறிதும் கூசாமல் தன்னுடன் வந்த இருவர்களுடன் உள்ளே பிரவேசித்தான். அதுகண்ட அக்காவலர் அன்று நூதனமாய்ப்பெற்ற உத்திரவை முன்னிட்டு மாதவனைப்பார்த்து 'இதுமுதல் நீர் உள்ளே பிரவேசிப்பதற்கு உத்திரவில்லை. கண்டிப்பாக வந்த வழியே திரும்பிச் செல்லவேண்டியதுதான்' என்றனர். இந்நூதன உத்திரவைக்கேட்ட மாதவன் திடுக்கிட்டு, உண்மையுணராமல் அக்காவலாளரிடம் வீணே கோபித்துச் சண்டையிட்டனன். இவன் செயலுக்கு அவர்கள் பொறுத்து மாதவனைப்பார்த்து "மரியாதையாக போகின்றனையா? உதை வேண்டுமா?" என்று வெகு கண்டிப்பாகக்கூற மாதவன் சற்றடங்கி 'இதுவென்ன விந்தையாயிருக்கிறது? இக்காவலாளிகள் நம்மை தடுப்பதற்குக் காரணமென்ன? இதுவரையும் நம்மை யாரும் தடுக்கவில்லையே! மரியாதை பண்ணு! செய்தனர். இன்று தடுப்பதற்கு ஏதோ காரணமிருக்கத்தான் வேண்டும்! அக்காரணம் யாதாயிருக்கலாம்? மைனருக்கும் நமக்கும் கோபமில்லையே! இரவு 10 மணி வரையிலும் என்னோடு சந்தோஷமாய்த்தான் சம்பாஷித்துச் சம்பிரமம் கொண்டாடினரே! அங்ஙனமிருக்க, அவர் உத்திரவாயிருக்குமென நினைக்கக் காரணமில்லை. பின் யாருடைய

உத்திரவாயிருக்கும்? விவரம் விளங்கவில்லையே. நமக்குப் பெருந்தொகைகொடுக்க வேண்டுமே என்ற காரணத்தால் மைனர் இவ்வாறு தடையுத்திரவு செய்திருப்பரோ? அங்ஙனம் செய்யக்கூடியவரல்லவே. ஒரு கால் குணசுந்தரம் நாம் செய்த தீங்கிற்கு நம்மீது கோபித்து நம்மை இம்மாளிகைக்கு வாராதிருக்கச் செய்தால்தான், நான் உம்மோடு சந்தோஷமாயிருப்பேன் என்று கேட்க, அவர் அப்படியே செய்கிறேன் என்று சம்மதித்து நம்மை தடுத்திருப்பரோ! என்னதானிருப்பினும் நாம் செய்த உபகாரத்தை மறந்து திடீரென அவ்வாறு செய்யத் துணிவரோ? துணிந்திருப்பின் நமக்குக் கொடுக்கவேண்டிய தொகையைக்கொடுத்த பின்னரன்றே! நம்மை உள்ளே வராமல்தடுக்க வேண்டும் ஒன்றும் உறுதியாய்க் கூறுவதற்கில்லையென்று" கேட்டுவாயிலில் நின்றபடியே ஆலோசித்துக் கொண்டிருந்தான். அப்படியேயிருந்து சிறிது பொழுது சென்றபின், 'நாம் தனியாகவேனும் மைனரைக் கண்டு தெரிந்து கொண்டு அதன் பின் வேண்டுமானல், இவர்களை அழைத்துப் போவோம்' என்று கருதி மீண்டும் அக்காவலாளிகளிடம் சென்று "ஐயா! ஒரு அவசரமான காரியம், இரண்டு நிமிஷத்தில் மைனரைக்கண்டு பேசிவிட்டுத் திரும்பிவிடுகிறேன். தயவு செய்து வழி விடும்" என்று கேட்டனன். அதற்கு அக்காவலாளி 'கண்டிப்பாக விட மாட்டேன் இனி நீயும், உன்னைச்சேர்ந்தவர்களும் அடுத்த நிமிஷம் இங்கு நிற்பீர்களேயானல் அடியும், உதையும் தான் விழும். மரியாதை வேண்டுமானல் போங்கள். இல்லாவிட்டால் நில்லுங்கள் என்றனன்' இதற்கு மாதவன் ஏதுங்கூற இயலாதவனாய் அப்படியே நின்று விட்டனன். இரவுமுழுமையும் ஆகாரமின்றிக் கள்ளையும், சாராயத்தையும் குடித்ததினல் வயிறு அளறிக்கையுண்டாக, அத்துடன் இந்தவயிற்றெரிச்சலும் சேர எரிநெருப்புப்போல் அவனை வாதிக்கத்

தொடங்கின. பிறருக்குச் செய்ததும், செய்ய நினைக்கும் தீங்குகளெல்லாம் இங்ஙனம் செய்தவனையே நாடி இவ்வாறு துன்புறுத்தவல்லவென்பதற்கு இதனிலும் வேறு சான்று வேண்டுமோ ?

காவலாளிகளுக்கும் மாதவனுக்கும் நடந்த வாக்குவாதத்தை அருகிருந்து கண்ட கோவிந்தனும், வரதராஜனும் ஏதும் பேச வகையற்றவர்களாய் வாளாவிருந்தனர். மாதவன் இறுதியாகத் தாசி லலிதா வீட்டுக்குச் சென்றேனும், மைனர் தங்களை அரண்மனைக்குள் வரவிடாது தடுத்த உத்திரவின் காரணத்தை அறிந்து வரவேண்டுமென்று நினைந்து தன் தோழர் இருவரையும் அழைத்துக்கொண்டு மூவருமாக அவள் இல்லம் நாடிச் சென்றனர். இதற்குள் காலை மணி பத்தாயிற்று. மூவருக்கும் வயிறெரிச்சலும், பசிவாதனையும் அதிகம். கையிலோ ஒரு நாகூர்ச்சல்லி கிடையாது. முந்தின இரவே நாளை வரும் பெருந்தொகையை ஆதரவாக நம்பி கையிலுள்ள பணம் அவ்வளவையும் விருதாச்செலவழித்து விட்டனர். இப்பொழுது இவர்களுக்குக் கடன் கொடுப்பவர் யார் ? வீணரும், துஷ்டருமாகிய பேதைகளுக்கு எவரேனும் கடன் கொடுக்கத் துணிவரோ ? வேறு நிவர்த்தியின்றி ஆலோசித்த வண்ணமே சென்று கொண்டிருக்கையில் சோலையப்பிள்ளை தெரு சமீபித்தது. தாசி லலிதா பெருமாளிகை கண்டனர். அது தாசி வீடாயினும் கட்டுக்காவலோடு கூடியதாயிருந்தது. யாராயிருப்பினும் உத்திரவு பெற்றன்றி உள்ளே செல்லமுடியாத விதமாய்த் தக்க ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. செல்வமும், மதிப்புமிருந்தால் இக்காலத்தில் யார் எது வேண்டுமானாலும் செய்து கொள்ளலாமன்றோ ! மாதவன் முதலியோர் தாசி வீட்டை யடுத்தும் மாதவன் முதலில் சென்று வாயில் காப்போனிடம் நான் வந்திருப்பதாக உனது எசமானியிடம் போய்த் தெரிவி

என்று கூறினன். தாசிலலிதாவும், மைனரும், முன்னமே கலந்து தம்மரண்மனைக்குள்ளும், இங்கும் கண்டிப்பாய் அவர்களை விடக்கூடாதென்று ஏற்பாடு செய்திருந்ததுடன் மீறி அக்கிரமமாய் நுழைவார்களேயானல், 'அவர்கள் துஷ்டத் தனத்தை நல்லபடி கண்டித்துப் புத்தி வருவிக்கவும்,' என்று தக்கபடி தங்கள் காவலாளிகளுக்கு உத்திரவு செய்திருந்தனர். அல்லாமல் தாசி லலிதாவும் தன் வீட்டுக் காவலாளிகளிடம் தனியாக தன் குடித்தனத்திற்கே தீங்கு செய்ய விருந்த மாதவன் முதலிய குடிகேடர்கள் இங்கு வந்தால் காரணமின்றியே அவர்களை முதல் தரமாக அடித்து அவர்கள் தேகம் இனி இத்தகைய துஷ்டத்தனம் செய்வதற்கு உதவாவகை ஊனம் செய்து வைத்தால் முதல்தரப் பரிசு தருவேன் என்று மொழிந்து நல்ல தைரியமும் சொல்லியிருந்தாள். இவ்வார்த்தைகளுக்குட்பட்டிருக்கும் காவலாளி மாதவன் வார்த்தைக்கிணங்குவனே! மாதவன் வார்த்தைக்கு அக்காவலாளி சற்று மமதையுடன், 'இப்பொழுது நமது எஜமானியைப் பார்ப்பதற்குச் சவகாசமில்லை. நானும் மேலே சென்று தெரிவிக்கமுடியாது நீர் இக்கேட்டை விட்டு அப்பாலே போம்' என்றனன்! பார்த்தான் மாதவன். கேட்டான் அச்சொல்லை அங்குதான் அப்படி யென்றால், இங்குமா இப்படி? ஆ! கஷ்டம். என் நிலைமை இப்படியுமா ஆகவேண்டும். பொருள் தரக்கூடியவர்கட்கெல்லாம் தன் தேகத்தை ஒப்புவித்து அவர்கட்குக் கீழ்ப்படிந்த மனைவியாயிருக்கக் கூடிய கேவல விலைமாதைப் பார்ப்பதற்குக்கூடவா! உத்திரவுவேண்டும்! இவள்கொண்ட கருவம் எத்தனை அதிகமாக விருக்கிறது. என்னுடைய செயலையும், பெயரையும் இக்காவற்காரன் உணர்ந்திருந்தால் என்னை விடேனென்று சொல்ல அவனுடைய தைரியம் அத்தனை பெரிதா! நாய் சும்மா விருப்பின் நமது சொரு

பதத்தை யுணரான். காட்டுவோ மென்று நினைத்துக் கோபக் குறிப்புடன் "அடே! தாசிவீட்டுத்தலைவாயில் காக்கும் சிப்பாயே! நீ இத்தொழிலுக்கு வந்து எத்தனை மாதமாயிற்று. இவ்வூருக்கு எப்பொழுது வந்தாய்? என் பெயர் உனக்குத் தெரியுமா?" என்று கேட்டனன்.

மாதவன் கூறிய இத்தகைய சொற்களைக் கேட்ட அச்சிப்பாய்வடதேசத்து முரட்டு வடுகனும், இறுகிய கரடு முரடான வலிய தேகக்கட்டுடையவனும் ஆனதினால், துஷ்ட சுபாவ மேற்கொண்ட கர்வத்திற்கும், தன்னைச் சிறிதும் மதியாமல் அடே! என்று அலட்சியமாய்க் கூப்பிட்டதற்குமாகப் பொறாது மாதவனையும், அவன் கூடவந்த இருவர்களையும் நோக்கி "அடே பதர்களா! நீங்கள் கொண்டிருக்கும் கர்வந்தானென்ன! உலக அபவாதத்திற்கும், மானத்திற்கும் அஞ்சுகின்ற மானிகளைக் கண்டு நீங்கள் உங்கள் துடுக்குத்தனத்தைக் கண்டஞ்சி அடங்கிவிடுவதாக மனோராஜ்யம் செய்து கொள்வதுடன், உங்களை நீங்களே பெரிய ரணரங்க சூரரும், ஜயசாலிகளு மென்றெண்ணிக்கொண்டு இஷ்டப்படி செய்ய நினைத்து அவர்களை மெத்தவும் பயமுறுத்துகின்றீர்கள், இவ்வகையில் நீங்கள் வயிறு வளர்ப்பது மெத்த மானக்கேடான காரியமென்பதைப் பற்றி நினைக்கின்றீர்களில்லை. உங்கள் உடலிலிருப்பது இரத்தந்தானோ வென்பது எனக்குச் சந்தேகம்? சுத்த சோதாக்களும் வெட்கங் கெட்ட பதர்களு மென்பதை இனியேனும் மனதிற் கொள்ளுங்கள். நீங்கள் கொண்ட கர்வந்தானென்ன? விளக்குமாற்றுக்குப் பட்டுக் குஞ்சங்கட்டி மேலும் அலங்காரஞ் செய்வதுபோல் நீங்கள் கோரா, கிருதா, கிராப் முதலிய புதுமாதிரிக் குடுமிகளை வைத்துச் சொன்னது மல்லாமல் அவைகளுக்கு ஹேராயில், காமினியா முதலிய வாசனைத் திரவியங்கள் இடுகின்றீர்கள். வதனத்திற்கு, 'டாய்லட்விநோலியா,' 'சந்தனச்சோப்,' 'குட்டி

கோரா, முதலிய சோப்புக்கள். உடலுக்கு நன்றாய்ச் சலவை செய்த புக்மஜலின் பைரன்களும் ஆபாரங்களும், உடுப்ப தற்குக் கிளாஸ்கோரா 9000 நயம் வேஷ்டியும், காலுக்கு உய ர்ந்த லப்பர் சூஸும், கையில் சிறந்த ரெஸ்ட்வாட்சும், நெற் றியில் ஜவ்வாதும், திலதமுங் கூடிய பொட்டும் உங்களுக் கொரு கேடா? போதாவதற்றிற்கு ரூலர், அல்லது கத்தரி மார்க் சிகரெட்டு வேறு.என்ன தடபுடலிது. மரியாதையாய்க் காலணாச் சம்பாதிக்கத் தெரியாத முண்டங்களுக்கு இவ் வளவு அலங்காரமும் வேண்டுமோ? கேவலம் வயிறு வளர்ப் பதற்குத் தங்கள் பிராணனிலுஞ் சிறந்த மானத்தை விற்கும் வேசியர்களுக்கு அவர்களுக்கு வேண்டிய மாப்பிள்ளைகளைத் தேடிவந்து கூட்டிக்கொடுத்து அத்தால் கிடைக்கும் வரு மானத்தை மிக்க இழிவும், கேவலமுமானதென்று கருதாமல் கௌரவ சம்பாத்திய மென்று கருதிக்கொள்ளும் மதிகேட ரும், பேடிகளுமாகிய உங்களுக்கு இவ்வளவு மமதையும்; துடுக்குமான சொற்களுமா!" வென்று கூறி அவர்கள் மூவர் வாயிலும் நுரைதள்ள, ரத்தங்கக்கப், பிராணமூர்ச்சை கொள் ளும்படி பலமாய் அடித்து அவர்கள் கருவமடங்கச் செய் தனன்.

அவ்வடிகளைத் தாளாத அம்மூவரும் எதுவும் செய்யவகை யற்றவர்களாய் "முடவனை மூர்க்கன் கொன்றால் மூர்க்கனை முனிதான் கொல்லும்" என்னும் மூதுரை நம்வரையும் மெய் த்துவிட்டதென்று வருந்திச் சற்று நேரமிருந்து மயக்கத்தை தெளிவித்துக்கொண்டு வாய்க்கொழுப்புச் சீலையில் வடிந்த கதைக்கு இலக்கியமாய்த் தத்தம் வீடு சேர்ந்து அந்தோ! ஒரு உத்தமச் செல்வியை, கன்னிகழியாத பெண்ணை, ஸ்ரீமான் செல்வப்புதல்வியை அவள் சம்மதமின்றித் துராக்கிருத மாய்ச் சோரஞ் செய்து மனவருத்தஞ் செய்ததற்கு நமக்கு கைவந்த பலன், நமது விலாவெலும்பு முறிய இடுப்புக்கீல்

சரிய உதைபட்டதுதான். துடுக்கும் அக்கிரமும் செய்வோ ரெல்லாம் முடிவில் அடைவது இக்கதிதான் என்று கூறிக் கொண்டு அது முதல் வெளிவருவதற்கு மார்க்கமின்றி அடி யின் உக்கிரத்தால் பாயும் படுக்கையுமாய்க் கிடந்தனர். இத னால், "நினைக்குங் கேடு தனக்கே" என்பது பிரத்தியட்ச மாய் அறியப்படுகிறது.

# XIX

## குணத்தை யாற்றக் குருவில்லை

" குறைகடல் வறுமையங் குறத்தி யுண்மையும்
நரையற மருந்தையுண் டிளமை நண்ணலும்
விரைசெறி குழலினள் வேசை யாசையும்
அரைய ரன்பமைவது மைந்து மில்லையே."

(விவேகசிந்தாமணி)

மைனர் குழந்தை வேலப்பன் தாசி " லலிதாவுக்கு " 'வன்னியபூபதி' சத்திரத்தில் உன்னையன்றி வேறுமாதரைக் கண்ணெடுத்தும் பார்ப்பதில்லை யென்று உறுதிமொழிந்து கொடுத்த வாக்குத் தவறாது அவளிடத்து முன்னிலும் அதிக மோகமேற்கொண்டு அன்புபெருக்கி இன்பம் எய்திவந்தனன். விடலையும், காமுகனுமான மைனர் தன்மீது இத்தனை பேரன்பும் பெருங்காதலுங் கொண்டிருப்பதை யுணர்ந்து, இவ்வரிய சமயத்தை இழந்துவிடத்துணியாது அவன் வசத்துள்ள அரும்பொருள், பூமி, தனம்,தானியமாதிய பண்டாரங்களைத் தான் கொள்ளைகொள்ள வேண்டுமென்று துணிவேமேற்கொண்டு தனது அழகிய இளமையின் சாகஸத்தால்,

" குனித்தநறி விற்றில ராகினங் குமராரங் குடத்தை
யணிச்ச மெல்லடிக் குறியிள மூலையவ ளழகானகாயத்

தனிக் கயிற்றினில் பூட்டிவிட்டனு தினந்தாழ்ந்த
மனைக் கிணற்றில் பொருட்சலம் வறந்திட முகப்பர்.”

என்ற ‘ஸ்ரீகாளத்திபுராண’ நூலாசிரியர் கருத்தின்படி பொருளை நாளடைவில் சேலைக்கென்றும், நகைக்கென்றும், பூமிக்கென்றும், வீட்டுக்கென்றுமாகச் சிறுகச் சிறுகக் கறந்து வந்தனள். நாம் அடுத்தடுத்து அதற்கும் இதற்குமென்று அதிகப்பணம் கேட்பதில் மைனர் மனம் வேறுபட்டு விடுமோ? வேறுபட்டுவிட்டால் நமது கருத்து நிறைவேறாதொழியுமே என்றஞ்சி அன்புகெடாதிருக்கவும் தன்னிஷ்டப்படி நடப்பதற்குமான சூழ்ச்சிகருதி,

“ஆடவர்மு றைமையைப் பழித்தன ருடுத்துங்
கூடுமுலை தூசொடு குலுங்குற நடந்து
நாடக நடித்துமிசை நல்லன பயின்றும்
வீடலரி தாயமயல் வேலையு ளமிழ்ப்பார்”

என்றபடி காமக்கடலில் ஆழ்த்தியும்,

“மாளரிய செல்வமத மைந்தரெனும் வேழ
நீளுமுகி ரங்குச முறுத்தினர் நிறுத்தித்
தோளெனு மிருந்தொடர் தொடங்கிநம ரெல்லா
நாளும்வளர் கொங்கையெனு நற்றறி பிணிப்பார்,”

என்றபடி காளையர்களாகிய ஆடவரெனும் மத்த கஜங்களைத் தங்கள் தனங்களாகிய கட்டுத்தறியில் பிணித்தும் வசப்படுத்திப் போதாவற்றிற்கு மருந்திடும் வசிய மருந்தும் வைத்துத் தம் சொற்படி கேட்டு நடக்கும்படியும் செய்ய வல்ல அவள் அவனை ஒரு அடிமையாகவும் செய்து கொண்டனள்.

இயற்கையிலேயே மைனர் காமியும், மடனும், வாலிபு மாவன் அதில் வசியமையும், மருந்திடும் சேருமானால், அவன் மதிமயக்க மேற்கொண்டு அவளிட்டது சட்டமாக நடக்கத் தவறுவனோ? மைனர் தாசி லலிதாவின் மோகவலையில்

வீழ்ந்து திசை தெரியாதவனாகி விட்டனன். கன்னியர் காமக்கடலில் வீழ்ந்தானொருவன் எளிதாகக் கரைசேறக் கூடுமோ?

" விண்கு லாவுயர் விண்ணவ ராயினும்
பெண்கள் காமம் பிடித்தவ ருய்வரோ!
புண்க ளாகிப் புரந்தரன் மெய்யலாங்
கண்க ளானது காமத்தி னாலன்றோ."

" நாணி யென்பதை நாரியென் றுரைத்திடும் நசையால்
வேணு வானது வளைந்துபோய்ப் புகுந்தது வென்றாற்
காணு லாவதோ ருருவமெய்ந் நாரியைக்கண்டால்
பூணு வார்மயல் காளைய ரென்பதும் புதிதோ."

வில்லின் கயிறு நாரியென்று பேர்படைத்தமையால் அற்ப மாகிய மூங்கிலானது வில்லாக வளைந்து ஒடுங்குமானால் பெண்களுக்கு நாரியென்னும் திவ்விய நாமமே மெய்யா யிருக்கும்போது அவர்களைக்கண்ட மானிடர் மயில் கொண்டு மயங்குவார் என்பது ஒரு புதுமையாக நினைக்கற்பாலதோ! அன்றியும்,

" கடிமரை முகையினைக் கட்ட ழித்துவேண்
முடியயன் விழியழன் மூட்டி நூக்கிவா
னிடையிரு நேமியை யிருஞ்சி றைப்படுத்
தடையவம் பொடுங்கி லகன்றுவீ றுமால்"

என்று அழகிய ஒரு இளமடந்தையின் தனபாரத்தை ஒரு புலவர், வெகு உற்சாகத்துடன் வர்ணித்திருப்பதை நோக் கும்போது பந்தபாசந்துறந்து உலகப்பற்றற்ற சந்நியாசியும் மனங்கலங்கி அறிவுதடுமாறுவனென்றால் மைனரைப்பற்றிப் பேசவும் வேண்டுமோ?

இங்ஙனம் தாசி லலிதா மைனரைத் தனது புதுவிதபோகங்களாலும், மருந்தீட்டினாலும் மதிமயக்க அவனும் மயங்கிவிட்டனன். மைனர் தன்வசப்பட்டானென் றுணர்ந்

ததும் அவனைத் தன்னிஷ்டப்படி நடத்தவும், பழையபழியை நிவர்த்தித்துக் கொள்ளவுமாகக் கருதி மெள்ள மெள்ள ஆறுமாதத்தில் ஐம்பதினாயிரம் ரூபாய்களை வெகு எளிதாகக் கவர்ந்து விட்டனள். அத்துடன் திருப்திப்படாது மேலும் விரைவில் பொருள் கவர எண்ணியபோது ரொக்கச் சொத்துக்களனைத்தும் தீர்ந்து பூமிவகைகளுமட்டும் மிஞ்சியிருப்பதாக வுணர்ந்தனள். அவைகளை அடகுவைத்துக் கடன் பெற்று பொருள் தரும்வரையும் காத்திருப்பவரெவர்? அப்படிக் காப்பதினால் தனக்கு வருவாய்க்குறைவும் இளமையின் கழிவும் விளைவதற்குத் தாளாதவளாய் அதுவரையில் தான் மைனரிடத்துக்காட்டிவந்த சரஸசல்லாப உல்லாச கேளிவிலாசங்களையும், கானரஸப்புகட்டலையும் ஒருவாறு குறைத்தும், மலர்ந்த முகமின்றிச் சுருங்கிய மனத்தளாயும் நடந்து வரத்தொடங்கினள். இதனை மைனர் குறிப்பாக உணர்ந்தானெனினும், அவள்மீதுள்ள மோகத்தால் கவனியாதொழிந்தனன். மைனர் பசையற்ற கையினன் என்பதை உணர்ந்ததுமுதல் பணந்தரும் பிரபுக்கள் சிலரை மைனர் வராத சமயம் பார்த்து வரவழைத்துக் கொள்ளத் துணிந்தனள். லலிதா போன்ற பெருஞ்சாகஸக்காரிகளுக்கு வைப்பு நாயகர் வருங்காலமும், அவர்கள் மனமும் இத்தகைத்தென்பது தெற்றெனத் தெரியுமானதால், அந்தநேரம் வருவதற்குள் எத்தனை பேரை யெத்தனை விதமாக வரவழைத்துக் காரியத்தை முடித்துக் கொள்ளக் கூடாது! வைப்பு நாயகனாகிய மைனரிடத்தில் லலிதாவுக்கு அன்பென்பது மருந்துக்கும் கிடையாது. முற்றிலும் அருவருப்புடையவள். இது வேசையர்களது பொதுத்தர்மம்போலும்; அத்துடன் அன்பொருபுறமும், அதன் அடையாளம் மற்றொருபுறமும் வைக்கும் சுபாவத்தினர். வெளிக்கு ஆசை மிகுதி போற் பாவனை காட்டி ஆலிங்கனஞ் செய்வதெல்லாம் பிரபுக்

களிடத்திலிருக்கும் பணத்தைப்பறிப்பதற்கேயன்றி வேற ல்ல. இப்பணத்திற்காக ஆலிங்கனஞ் செய்யுங்காலத்து வேசைகள் மனமானது உயிரற்ற பிணத்தைத் தழுவதுபோற் சுருங்கியிருக்குமேயன்றி மலர்ந்திருக்க மாட்டாது. இத னுண்மை,

"பொருட்பெண்டிர் பொய்ம்மை முயக்க மிருட்டறையி
லேதில் பிணந்தழீஇ யற்று"

என்ற தேவர் திருக்குறளால் உணரலாகும்.

வைப்பு நாயகனுகிய பிரபுவின் கையிலிருந்தபொருளெல்லாம் செலவழிந்தொழிந்தனவென்றும், இனிமேற்கொடுக்கப் பண மேதொன்றும் கைவசத்தில்லையென்றும் தெரிந்து விட்டால், தெரிந்தவுடனேயாவது, சிலநாட்களுக்குப் பின்னராவது வைப்பு நாயகன் கொடுக்கும் பொருளைவிட அதிகமான பொருள் வேறொருவர் கொடுப்பாரென்ற நம்பிக்கை வந்த வுடனேயாவது வேசையர் பிரபுவை அந்த உத்தியோகத்தி லிருந்து நீக்கித் தக்காரொருவரை நியமித்துக் கொள்வர். இஃதுறுதி. வைப்புநாயகரை வேசைகள் நீக்குவார்களே யொழிய வேசையர்களை நீக்க வைப்பு நாயகருக்குப் போது மான அதிகாரமும் ஆற்றலுமில்லை. அங்ஙனமிருப்பினும் அதை அவர்கள் அரை நிமிஷத்தில் மாற்றிக்கொள்வர்.

வேசையர்கள் வைப்பு நாயகரை நீக்கச் சமயம் நேர்ந்த போது தாங்கள் விரும்பிக் கேட்டும் பெரிய பொருள் மலை யைத் தவிர வேறெதுவுமிராது. கைநொந்து, மனநைந்து கண்ணீர் வடித்துக் கடன் கொடுப்பார் யாருமற்றுப் பணத் திற்கு வகையற்றுப் பரிதவிக்கும் இப்பாவி யென் செய்வான்? அள்ளியள்ளிப் பிடிபிடியாய்க் கொடுத்த பெரும் பொருளைக் கணக்கிடுவாரெவர்? எந்த விதத்திலும் நீக்கவே வழிதேடு வர். அப்போதவர் இஞ்சி தின்ற குரங்குபோல் எண்ணு தெல்லா மெண்ணி யேங்கித் தவித்து மனம் புண்ணாகி வெளி

ந்து வருந்துவர். அந்தோ! அந்நிலைமையில் அவர்கள் படுங்கஷ்ட நிஷ்டூரங்களுக்கு ஓரள வுமுண்டுகொல்?

இத்தகைய சுபாவத்தைக் குலதருமமாகக் கொண்டுள்ள லலிதாவிடம் பொருளின்றி மைனர் எங்ஙனம் இன்பந்துய்க்க முடியும்? விசுவாச காதகியும், வஞ்ச மனத்தினளுமன்றோ! அவள் எள்ளினளவுக்கு எண்ணெயளந்து காட்டுவது போல், பொருளுக்கேற்ற போகந்தருவதன்றோ! அவள் செயல். அதனை மைனர் இன்னும் உணர்ந்தானில்லை? விரைவில் உணருவன். இதனிடையில், ஒருநாள் மைனர், தன் வேலைமேல் வெளியில் வந்து அது முடிந்ததும் அப்படியே லலிதாவையும் பார்த்து விட்டுப் போவோமென்று கருதி அவள் மனையில் புகுந்து வழக்கம்போல் படுக்கையறைக்குச் சென்றனன். அப்பொழுதவள் அன்னிய நாயகனொருவனுடன் கலவிசெய்து கொண்டி ருப்பதைக் கண்டனன். அப்பொழுது தனக்குண்டான கோபத்திற்கோரளவேயில்லை. செய்வதின்னதெனத் தோன்றாது மிகப்பிரமித்தவனாய் அசைவற்ற பதுமையென அங்ஙனமே நின்று விட்டனன். லலிதா தான் எதிர்பாராத விதமாய்த் திடும்பிரவேசமாய்த் தன்னெதிரில் தோன்றி அசைவற்ற சித்திரமெனப் பிரமையுடன் நிற்கும் மைனரைக் கண்டு பேரச்சமுற்று இதற்கென்ன சூழ்ச்சி செய்வதென ஆலோசித்து முடிவில் சட்டெனத் தன் கள்ளமாப்பிள்ளையை மெள்ளக் கொல்லைவழியிலனுப்பி விட்டு மெதுவாகச் சரஸத்துடன் மைனரையடுத்து என்ன! என் அன்பின்துரையே! தாங்கள் இவ்வாறு இங்கு அசைவற்றுப் பிரமை கொண்டவர் போல் திடுக்குற்று நிற்கும் காரணமென்ன? தாங்கள் கண்ணெதிரே தோன்றிய காட்சியை வேறு விதமாகக் கருதிவிட்டாற்போலிருக்கிறது. உண்மை உணர்ந்தீரில்லை. எனக்குற்றவயிற்றுவலியையும், திடுப்புப் பிடிப்பையும் நிவர்த்திக்கவேண்டி என்சொந்த

அத்தைமகனை மேலேறிவலியடங்க அழுத்தும்படி செய்து கொண்டிருந்தேன். அதனை தாங்கள் திடீரெனத் தோன்றி அசதியில் பார்க்கும்போது நூதனமாய்ப்பட்டது போலும்; புருஷ கெம்பீரா! உம்மையன்றி என் பிராணன் நீங்கினும் பிறனொருவனுடன் போகஞ் செய்யத்துணிவனோ! தாங்கள் என் நல்லன்பை நன்றாகவுணர்ந்தவராயிருந்தும், என்மீது சந்தேகங் கொண்டதற்கு வருந்துகிறேன். உண்மையுணர்ந் தபின் ஐயந்தெளிய வேண்டும் என்றனள். முழுப்பூசணிக் காயைச் சோற்றில் மறைத்த கதைக்குஇலக்கியமாகப் பேசிய அவள் விபரீதப் பொய்க்கு மைனர் வியந்தும், மெய்யைப் பொய்யாக்கத் துணிந்த அவள் துணிகரத்திற்கு மிகவெகு ண்டும், மேலுங் கோபித்து அடி வெட்கங்கெட்ட வேசீ! உன் ஊத்தை வாயை மூடு. உனது தாசித்தொழிலை என்னி டத்தா காட்டவந்தனை! "ஜென்மத்தோடு பிறந்த குணம் செருப்பாலடித்தால் போகுமா" "குணத்தை மாற்றக் குருவுண்டா"? எனக்கூறித்தன் சினம் அடங்குமட்டும் நல்ல அடியும் உதையுமாக அவள் மேனி வருந்தும்படி துன்புறு த்திப் புத்திவரும்படி செய்துவிட்டுத் தான் அங்கு சிறிதும் நில்லாது சரேலெனத் தன் மாளிகை நோக்கிச் சென்றனன்.

பூனை தன் கண்களை மூடிக்கொண்டு பால் குடிப்பதைப் பிறர் அறியாரென்று நினைத்துக்கொள்வது போல், தாசி லலிதாவும் தான் மறைந்து விபசரிப்பதைப் பிறர் உணர முடியாதென நினைத்துக் கொண்டனள். ஒருகால் மைனர் காண நேர்ந்தால், தான் அவனுக்கு வைத்திருக்கும், மருந்தி னாலும், வசியமையினாலும் மயக்கித் தன்தீயநடத்தைக்குக் கண்டிக்காமலும், கோபியாமலும், தன்னைவிட்டுப் பிரிய நினை யாமலும் தன்காலடியின் கீழே விழுந்து கிடப்பானென்று கருதிக் கொண்டனள். தான் கருதியதற்கு நேர்மாறாகக் காரியம் முடிந்ததற்கு மெத்த விசனித்தனள். அல்லாமல்

தான் தனச்செல்வியும் வித்யாவதியுமாயிருந்தும் பிறனால் இவ்வாறு உடல்வருந்தும்படி அடிபட நேர்ந்ததற்குத் துக்கித்தனள். தனது விபசாரசமர்த்து மைனரிடத்துச் செல்லா தொழிந்ததற்கு வெட்கினள். இவையனைத்தும் சேர்ந்து தன்னை சோகத்திலாழ்த்த மூர்ச்சித்து வீழ்ந்தனள். அந்தோ! விபசாரத்தால் வரும் இன்பம் மேலான தெனக்கருதும் பேதைகட்கெல்லாம் ஆபத்து எப்பொழுதும் தலைமேலே யென்பது உறுதி.

மைனர் லலிதா மனையை விட்டதும் எங்குந் தங்காது விரைவாகத் தன் மாளிகைசேர்ந்து தனது தனியறையில் விரித்துக்கிடந்த பஞ்சணையில் மல்லாந்து சயனித்த வண்ணமாய் அடியில் வருமாறு ஆலோசிக்கலானான். என்னே! தாசி லலிதாவின் தைரியம். என்னே! அவளின் அக்கிரமம். நமது கையில் சற்று பணவரவு குறைந்த காரணத்தை உணர்ந்த மறுநிமிஷத்திலன்றோ! பொருள் வருவாய் நிமித்தம் அன்னியனுடன் தேகசம்பந்தம் வைத்துக் கொள்ளத் துணிந்து விட்டனள். என்னே! இவளது நன்றி கொன்ற செயல். இது பற்றியன்றோ பெரியோர் வேசையரைப் "பொருட்பெண்டிர்" எனக்கூறினர். இது அவர்கட்கு முற்றிலும் பொருந்தும். அன்றியும், விளக்கொளியும், புதுப்புனலும், வேசையரன்புக்கு உவமிக்கவந்த புலவர்கள், புதுவெள்ளம் மழை யின்மையாலும், விளக்கொளி தைலமில்லாததினும் நின்றுவிடுதல்போல வேசையர் நேசமும் பொருள்வருவாய் சுருங்கியபோது நீங்குமென்னுங் கருத்துத் தோன்ற :—

"புதுப் புனலும் பூங்குழையார் நட்பு மிரண்டும்
விதுப்புற நாடின் வேறல்ல—புதுப்புனலும்
மாரி யறவே யறுமே யவரன்பும்
வாரி யறவே யறும்"

(நாலடியார்)

எனவும்,

"விளக்கொளியும் வேசையர் நட்பு மிரண்டும்
துளக்கற நாடின் வேறல்ல—விளக்கொளியும்
நெய்யற்ற கண்ணே யறுமே யவரன்புங்
கையற்ற கண்ணே யறும்"

(நாலடியார்)

எனவும் கூறியிருப்பது நம்வரையும் பொய்ப்படவில்லை. அந்தோ! அவளோடு நாம் அன்பளாவி யிருந்தபோது அவள் என்னை நோக்கி!" என் அன்பின் துரையே! நீர் மலைமேலேறிக் கீழே குதிப்பதாயினும் நானும் உம்முடன் சேர்ந்து விழுவேனே யன்றி உம்மைவிட்டு ஒரு கணமேனும் பிரிந்து உயிர்வாழத்தறியேன்," என்றும், "உமக்கே சொந்த மாக்கிய எனது அழகியமேனியை, மறந்தும் ஒருவர்க்கு உடன்படத்தத்துணிவனோ! என் இன்னுயிர் நீங்கிலென்னமோ!" என்றும் கூறியவார்த்தைகளை நாம் இப்பொழுது நினைக்கும்போது, உள்ளுற அன்பற்ற அவள் உழுவலன் புடையாள்போல் வெளிக்கு நடித்துக்காட்டி நமது அரும் பொருள்களை வஞ்சித்துக் கவர்வதையே பிரதானமாகக் கொண்ட வஞ்சக மொழிகளென்றன்றோ தோன்றுகிறது.

"அன்பின் விழையார் பொருள்விழையு மாய்தொடியா
ரின்சொ லிழுக்குத் தரும்"

என்ற தேவர் திருக்குறளும்,

"நாவார வேண்டும் விதஞ் சொல்லுவா ருன்னைநான் பிரிந்தாற்
சாவே னென்றே யிருந்தொக்க வுண்பார்கள் கைதான் வாண்டாற்
போய் வாருமென்று நடுத்தலைக்கே குட்டும் பூவையார்..."

என்ற பட்டினத்தடிகள் திருவாக்கும் என்றேனும் பொய்ப் பட்டொழியுமா?

லலிதாவிடம் சிநேகம்கொண்ட இவ்வோராண்டிற்குள் நாம் அவளுக்கென எண்பதினாயிரம் ரூபா கொடுத்திருந்தும்,

அதனையவள் பெரிதாகக்கருதாது நன்றிகொன்ற பாதகியாய் எமக்குத்துரோகமே நினைத்தனளன்றோ! இத்தகைய இவள் செய்கையானது—காட்டுப்பசு பிறர்க்கு இன்பமுண்டாம்படி முதலில் நாவினால் அவருடலை நக்கி அவர்க்குத் தன் பக்கல் நம்பிக்கையுண்டாக்கிப் பிறகு அஜாக்கிரதையா யிருக்கும் சமயம் பார்த்து முட்டிக்கொல்வதுபோல், பொதுமகளாகிய லலிதா தன்னிடம் அகப்பட்ட எம்மை, நாம் இன்பமடையும்படி ஆலிங்கனமாகியவற்றால் மயக்கி, நம்பிக்கையுண்டாகும்படி செய்து எமது பெரும் பொருள்களனைத்தும் பறித்துக் கொண்டு இனி யில்லையென்றுணர்ந்தபின் நீக்கிவிட நினைந்தது அப்பசுவின் செயலை யொத்திருக்கின்றது.

காமுகர் தமது மோகவலையிற் சிக்கிமயங்கியபோது, அவர் பொருளைப் பறிப்பதற்கு அன்புடையார் போன்றிருந்து அது முடிந்தவுடன், அவர்பொருள் வறண்டுபோனமாக விரும்பி வந்தபோது உடன்படாது மாறுபடுகின்ற பொதுமளிரது இன்பத்தைத அறிஞர் விரும்பலாகாதென அறிவுரையாக—

"பொருட் பொருளார் புன்னலந் தோயா ரருட்பொரு
ளாயு மறிவி னவர்."

"பொதுநலத்தார் புன்னலந் தோயார் மதிநலத்தின்
மாண்ட வறிவி னவர்."

எனக் கூறிய தேவர் திருவாக்குகளையும், சிந்தியா தொழிந்தேனே, இது எமது மடமையன்றோ? ஆன்றோர் கூறிய அநுபவமொழிகளை நம்போல் அலட்சியம் செய்வோரெல்லாம் இங்ஙனம் துக்க நிலையை அடைந்துதான் தீரவேண்டும். அல்லாமல், நாம் முற்பிறப்புகளில் செய்த தீவினைகளால் நமது மனம் தெளிவடையாமல் தீய நினைவுகளெல்லாம் ஒருங்குசேர்ந்து உருவெடுத்தது போன்ற அப்பாவிகளின் நேசத்தை நாமே வலுவிற் சென்றடைந்தன்றோ! துன்புறுகின்றோம்.

இருமனப் பெண்டிருங் கள்ளுங் கவறுந்
திருநீக்கப் பட்டார் தொடர்பு"

என்று கூறிய அனுபவவாசகம் என்போன்ற வேசையர் நேசமுள்ளாரின் செயலறிந்து கூறிய உதாரணம் போலும்.

மேலும், மாதவன் முதலியோர் நம்பொருட்டுப் பெரும் பாடுபட்டு உயிரையும் திரணமாக மதித்துக்கொணர்ந்த திருவினு மேலான தெய்வ மாதுபோன்ற குணசுந்திரத்தை நாமடையாதவாறு மாயஞ் செய்தது மல்லாமல், அம்மாதவன் முதலியோர் இடிப்பொடியும்படி அடிபடவும் ஏற்பாடு செய்தனள். இச்செயல்கள் தன் சுயநலங்கருதிச் செயத விஷமமன்றோ! அப்பொழுது நாம் அவள் போகத்தில் ஈடுபட்டிருந்ததால் அதனை உணராது போனேம். அந்தோ! துஷ்டர்களாகிய அவர்கள் கஷ்டமறிந்து கொடுக்கவேண்டிய தொகையையும் நாம் அவர்க்குக் கொடாது வீணே அவர் மீது விரோதப்பட்டு அடிக்கவும் செய்தோம். அவர்கள் செய்த உபகாரத்திற்கும் பணம் பெறவேண்டிய திருக்கவுதையும் அடியுமா பிரதி உபகாரம். இது பற்றி அவர்கள் நம்மீது கொண்ட கோபமும், மனஸ்தாபமும் கொஞ்சமாயிருக்குமா! அத்துடன் அவர்கள் நம்மை மோசக்காரனும், நன்றி கொன்ற பாதகனு மென்றல்லவோ நினைத்திருப்பர்? இப்பழியொன்றுமட்டுமா நானடைந்திருப்பது? என் உற்றாரும், உறவினரும், நெருங்கிய சுற்றத்தாரும் என் நன்மை கோரிய நண்பரும் நான் தாசி லோலனாய்த் திரிவதைப்பற்றி மெத்த வருந்தி என் நேசத்தையும் வெறுத்தொதுக்கி என் வீட்டுக்கும் வாராதொழிந்தனர். இங்ஙனம் அவர்கள் அரிய அன்பை யிழந்ததனால் நானடைந்த பலன், "பெரியார் தேடி வைத்த பெரும் பொருளெலா மிழந்து பிறர் நிந்தனைக்காளாகவும், துக்கத்தின் தோழனாய்த் துயரத்திலாழ்ந்தவும், இருமல், மேகப்புண், சூலை, வாதநோய், கண்ணெரிச்சல், காமாலை,

காலசதி முதலிய கெட்ட நோய்களுக்குற்ற துணைவனு மாயிருப்பள்.” இத்தோடு அம்மாயப் பரத்தையின் மோக வலையினின்றும் தான் தப்பியது எனது நல்லதிர்ஷ்டவச மென்று தன் தீர்மானத்தை முடித்துக் கொண்டு ஒருவாறு தன் துக்கத்தினின்றுந் தெளிந்தவனாய்த் தன் படுக்கை விட்டெழுந்து, தான் ஒருநாளும் கூப்பிட்டறியாத தன் அருமை மனைவியை அன்று பெயர் சொல்லி அழைத்தனன். இப்புதுமை கண்ட அவள் மிகவியந்து சட்டென்று மைனர் முன் தோன்றி நாணத்தால் தலைகுனிந்து நின்றனள். நின்ற அவள் திருமுகம் துக்கத்தால் சற்று சோர்வடைந்திருப்பினும், அழகு குன்றாது பொலிவுற்றே யிருந்தது. மகரந்தம் உதிரும் பூங்குழலும், கனிபோன்ற செங்கனி வாயின் தத்தை மொழியும், முத்தை யொத்த நகையுடைய அவள் எழில் நலத்தைப் பரத்தை காதலில் ஈடுபட்டதிலிருந்து காணாதிருந்து அப்பொழுது கண்டனன் ஆனதால், அக்காட்சி அவனுக்கு அதிசயத்தை விளைவித்துத் திருவின் செல்வியெனத் தன் முன்னர் நிற்பவள் தனது மனைவியா! வென்னும் ஐயமுங் கொண்டனன். கற்பு நலஞ் சிறந்து அழகின் அவதாரமென விளங்கும் இவளையா! நானிதுவரையும் கவனியாது ஒதுக்கி வைத்திருந்தது. எனது போகூழும், புன்மையும் இருந்தவாறு மிகநன்று என மிக வருந்தி இரங்கி “என் அன்புடையாளே! நான் எனது தீவினையினாலும், துஷ்டர் கூட்டுறவாலும் கொண்டிருந்த தீய நடத்தையை இந்நிமிஷத்தோடு விட்டொழித்தேன். இனிமறந்தும் அத்தீச் செய்கைக்குடம்படேன். இன்று எனக்கு ஈசுரன் நல்லபுத்தி வரும்படி செய்தான். அதற்கு அவனுக்கு அனந்த கோடிவந்தனம். இனி நீயும் நானும் ஒருங்குகூடி இல்லறதர்மத்தை இனிது நடாத்துவோம்.” என்று கூறி, மேலும் கூறியதாவது, “வேசையர்

நேசங் கொண்டிருந்தாளொருவனது பாவம்பரிகாரமாகவேண்டுமானல், "கிரிச்சிரம்" "சாந்தராயணம்" முதலியவிரதங்களிருந்து போக்கிக் கொள்ளவேண்டுமென்று உண்மை நூல்கள் பிராயச்சித்தம் விதிக்கின்றன. ஆனல் அது இக்காலசம்பிரதாயத்திற்குச் சாத்தியப்பட்டதல்ல "விபசாரத்தைவிட்டொழித்தேன், அது சம்பந்தமாகவேற்பட்டபாவமனைத்தும் பரிகாரமாகுகவென்று சங்கற்பம் கூறி எண்ணெயிட்டு முழுகுவதே இயன்றதெனத்தீர்மானித்துத் தைலம் கொணர்க" வென்று உத்திரவிட்டனன். அக்கற்புடைமாது இதோ! கொண்டுவருகிறேனென்று சொல்லித், தனக்குளாகத், தனது கணவன் தன்பால் விரைவில்வந்து சேர்ந்து சந்தோஷத்திலிருக்கவேண்டுமென்று நோற்றதவம், அன்றுபலிதமாம்படி அருள்சுரந்த தெய்வத்தை வணங்கித் தொழுதுத் தைலம் கொணர்ந்து நன்ருய் முழுக்காட்டி உபசரித்தனள். மைனரும் முழுகி யெழுந்து புனிதமடைந்தனன். அது முதல் மைனரும், அவர் மனைவியும் மனமொத்து ஆசைப்பட்டுக் காதலிருவர் கருத்தொருமித்து ஆதரவுபட்டதாகிய இன்பத்தை யடைந்து இனிதுறைந்தனர்.

# XX

## சிந்தனைகள்

*"சிந்தித்த வெல்லா மென்சிந்தை யறிந்தே யுதவ*
*வந்தகருணை மழையே பராபரமே."*

(தாயுமானவர்)

கொழுமம் தங்கவேல் முதலியார் சத்திரத்தில் ஆண் வேடத்துடன் விட்டுவந்த குணசுந்தரத்தைப்பற்றி இனி கவனிப்போம். சத்திரத்துக் கிழவியின் சகாயத்தால் தனி விடுதியில் குணசுந்தரம் வெகுசௌகரியமாயிருந்துகொண்டு தனது வருங்கால சுபத்தை எதிர்நோக்கி அதே நினைவி லாழ்ந்தவளா யிருந்து வந்தனள். இங்ஙனமிருக்கையில் ஒரு நாள் அகஸ்மாத்தாய்த் தானிருக்கும் விடுதிக்கு வந்த தன் ஊர் வயதுபோன கிழவியைக்கண்டு, தன்னை இன்னுளென் றுணர்த்தாமலே, மாவுத்தம்பதியைப்பற்றியும், தனது தாய் தந்தையர்களைப்பற்றியும், ஜெயனைப்பற்றியும், விசாரித்த னள். அதற்கு விடையாக அக்கிழவி "'முத்துவேலப்பர், அருமை மகள் காணுது போனதிலிருந்து அவர் அன்னம் தண்ணீர் நித்திரை முதலியவைகளை வெறுத்துக் கவலை யடைந்த துக்கத்தினுல் சோகமேற்கொண்டு துன்பமடைந்து கொண்டிருக்கின்றாரென்றும், அவர் மனைவி விசாலாட்சி அம்மாள்' மகளின் பிரிவினுல் பாதியுயிரையிழந்து பாயும்

படுக்கையுமாயிருந்து வருகிறாளென்றும், சுந்தரியின் தோழி கமலாவென்பவள் ஏங்கிவாடுகின்றாளென்றும் கூறிவிட்டு, குணசுந்தரம் காணாமற்போனதற்கு விஜயன்தான் காரணஸ்தனென்றும், அவனே களவாடி எங்கேனும் அவளை மறைத்து வைத்திருப்பானென்றும் வேணுகோபாலன் கூற, அவன் வார்த்தையின்படி விஜயனைச் சிறைசெய்து ஜயிலில் அடைக்கும்படி முத்துவேலப்பர் உத்திரவிட்டாரென்றும், அதன்படி விஜயன் சிறையிலடைப்பட்டிருந்தபோது ஒருநாள் இரவு 4 மணிக்கு அவன் ஜயிலிலிருந்து காணாது போனானென்றும் அதுமுதல் இதுவரையும் அவன் சென்றவிடம் தெரியவில்லை. தேடிபிடித்துவரும்படி ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறதென்றும்” ஆகிய விபரங்களைக் கூறினள். குணசுந்தரம் கேட்டுத் தன்பொருட்டுக் கவலைப்படுவோரைப்பற்றித்தானும் கவலைப்பட்டு மிகவருந்திப் பின் அக்கிழவிக்குச் சிறிது உணவளித்து அவளையனுப்பிவிட்டுத் தான் தனியாகவிருந்து அடியில் வருமாறு சிந்திக்கத்தொடங்கினள் :—

விஜயம் தன் பொருட்டுச் சிறைப்பட்டானென்பதைச் சிந்திக்கையில் அவள் மனது பட்ட வேதனை கொஞ்சமல்ல. நிரபராதியாகிய விஜயன் என் பொருட்டுச் சிறையிருக்கவும் நேர்ந்ததா? ஆ! வினை மிகக்கொடிது! வேணுகோபாலன் விஷமக்கருத்தும் வெகு நன்று. தன்கருத்துக்கு விரோதப்பட்டவிஷயம் எவ்வளவு நன்மையும், உண்மையுமாயிருப்பினும், அவைகளைப் பொருட் படுத்தாது தனது எண்ணம் நிறைவேறுதலில் யார் எவ்விதத்தீங்கடைந்து துன்புற்றாலும் அதுபற்றித் தனக்கு அக்கரையில்லைப் போலும். என்னே! இவனது கருவம்? இப்பாவியும் என் உடன் பிறப்பினனன்றோ! எனது ஜன்மம் மிகப்புனிதம் பெற்றதே! அந்தோ! என் அன்புள்ள விஜயமே! நீ என்னை முன்னிட்டுச் சிறையும் சென்றனையா? நான்தான் கள்வர்களால் களவாடப்பட நேர்

ந்தமென்றால், நீயும் சிதடனால் சிறைவாய்ப்பட நேர்ந்ததும் வெகுவிசித்திரம். இது "திண்ணைக்குத் தேள் கொட்ட பிடாவுக்கு நெறிகட்டிய" தென்பதுபோல், நம்மிருவரையும் இப்பழமொழி மிகப் பொருத்தமாகக் காண்கிறது. கேவலம் பொய்யனும், குடியனும் கூத்திக் கள்வனுமாகிய வேணுகோபாலன் வார்த்தையிலும் ஒரு நம்பிக்கைவைத்து, நிரபராதியும், சற்குணவந்தனும், கல்வியறிவுள்ளவனும், கட்டழகனுமான ஒருமானியை, வீணே சிறையிலடைக்க என்தந்தையும் சம்மதியளிக்கத் துணிந்தாரென்பதையுணர நான் மிகவருந்துகிறேன். என் தந்தை நல்லகல்வியுடையாரும் எதையும் நிதானமாயும், தீர்க்கமாயும், ஆலோசிக்கும் சுபாவத்தராயுமிருந்தும் இவ்விஷயத்தில் ஆத்திரங்கொண்டது விஜயனின் துரதிர்ஷ்ட வசம்போலும். இருப்பினும், அறிவுடைய எவரும் குறுகிய நோக்கமும், தீர்க்கசிந்தனையுமற்ற என் தந்தையின் இச்செயலுக்குப் பரிகசியாதொழியான்! அன்றியும், அருமையுள்ள தன்மகளுக்கு ஒரு தந்தையானவர், தகுந்த மணமகனைத் தேடிக் கலியாணஞ் செய்யவேண்டுவது கடமையும், அவள் வாழ்வு தாழ்வுகளெல்லாம் அவரைப்பொறுத்த தென்பதும் உலகவழக்கு. இதற்கு விருத்தமாகத் தந்தை உயிருடனிருக்கும் போதே உடன் பிறந்த தமையன் கெட்டநினைவுடன் தன் சுயநலங் கருதித்தங்கையின் கருத்துக்கு மாறாகத் தீயவழியில் நடக்கும்படி நிர்ப்பந்திக்கத் துணிவது எங்கேனு முண்டா? அத்தீய நிர்ப்பந்தத்திற்கிணங்காத காரணத்தினாலல்லவா? நான் இத்தகைய துன்பங்கட்கு ஆளாக நேர்ந்தது! என்னைச் சூழ்ந்துகொண்டிருக்கும் இக்கருமேகங்களை நீக்க என்னால் கூடுமோ? கூடாதோ தெரிகிலேன். எனினும், ஆரம்பத்தில் சங்கற்பித்துக் கொண்டுள்ள தீர்மானத்தை மட்டும் நான் எவ்விதத்திலும் மாற்றிக் கொள்ளப் போவதில்லை. இது உறுதி. தெய்

வத்தினிடத்திலும், தன்னிடத்திலும் நம்பிக்கையில்லாதவன் தான் இடையூறுகளுக்கு அஞ்ச வேண்டும்? அவற்றில் பூரண விசுவாசமுடைய எனக்கேன் அஞ்சிக்கை? பொய் மலிந்த இப்பேதை யுலகத்தில் இடையூறுகளால் துன்பப்படுவோரெல்லாம் அவரவர் செய்த தீவினையின் செயல்பற்றி வந்ததெனலாம். நானும் அவ்வினையில் சம்பந்தப்பட்டிருப்பதினால்தான் இவ்விதத்துன்பங்களால் துயரடைந்து வருகிறேன். இதற்குப் பிறரைச் சினந்தாவதென்ன? எதையும் பொறுத்துக்கொள்ளச் சக்தி வேண்டும். எனக்கு அதுமெத்தப்பழக்கம். பெண்ணாய்ப்பிறந்தார்க்கே இச்செயல் உடம்பிறப்பு. ஆனால், இடமறிந்து உபயோகிப்பதில் மட்டும் விழிப்புள்ளவர்களாக யிருக்கவேண்டும். சிலர் இதனை உணராது ஏமாந்து விடுகின்றனர். பொறுமையிழந்து சினத்தை அதிகமாகக் காட்டுவதில் ஏற்படுவது ஒருவகை மனோதிருப்தி. அது நிதானமும், நம்பிக்கையுடனும் வினைசெய்யத் தெரியாதவர்களின் செயல். "**ஆத்திரம் மேற்கொள்ளுகையில் புத்தி குன்றுவதியல்பு.**" அதனால், நமது வேகம் அதிலேயே அதிகரித்துக் கொண்டுபோய் லட்சியம் மறைந்து விடுகின்றது. சக்தியிழந்தவர்களாகி விடுகின்றோம். 'ஆண்டை கையில் முறிச்சீட்டுடன் அவதிபட்டுழலும் ஒரு அடிமையைபோல் நானிருக்க ஒருநாளும் சம்மதியேன்.' நான் கருதிய கருமம் கைகூடுந்தனையும், பசிநோக்கேன், கண்துஞ்சேன், பெருமை பாராட்டேன், அருமை கருதேன் அவமதிப்பும் நினையேன். இது சத்தியம் என்னும் தன் **சிந்தனையை** முடிவுக்குக் கொண்டுவருகையில், சத்திரத்துக் கிழவி தன்னருகணைந்து தம்பீ! இன்று இச்சத்திரத்திற்குப் புதிதாய் வந்த இரண்டு தேசாந்திரப் பிராமணர்கள், "புரவிபாளையம் ஜமீன்தார், ஜகமண்டலாதிபதி கோப்பண்ண காங்கேய மன்றுபாரவர்கள் தமது அரண்மனையில் எவ்வருஷத்தி

னும் வீட்ட இவ்வருஷத்தில் தசராமஹோற்சவத்தை வெகு ஜோரும் சிறப்புமாக நடாத்தப்போவதாகவும், அவ்வுற்சவத்தின் முதல் 9 நாட்களிலும், சங்கீத வித்வகோஷ்டிகளின் பிரபல சங்கீதக் கச்சேரிகளும், 10வது நாளில் ஒரு கல்விச் சபையும், அதனையொட்டி ஒரு ஆசார சீர்திருத்தக் காண்பிரன்சும், நடைபெறச் செய்விப்பதாயும், அவ்வாசார சீர்திருத்தக் கான்பிரன்சுக்குத் தென்னிந்தியாவில் கீர்த்திபெற்ற “புவனமாது” என்ற செல்வச்சீமாட்டி அக்கிராசனம் வகிக்கப்போவதாகவும், அதில் பெண்களே பிரசன்னமாய் இருப்பார்களென்றும், பேசிக்கொண்டதுமன்றி, இவ்வுற்சவங்களை நானா தேசங்களிலிருந்துவரும் பிரபல சீமான்களையும் சீமாட்டிகளையும், தகுந்தபடி வரவேற்று உபசரிப்பதற்குப் பெரும்பதி ஜமீன் மைனர் குழந்த வேலப்பனும், மாவுத்தம்பதி பெரிய மிராசுதார் முத்து வேலப்பரும், சுரோத்திரதார் மணவாளப்பிரபுவும், காரியஸ்தர்களாய் இருப்பார்களென்றும், 9வது நாள் இரவு நடக்கும் சங்கீதக்கச்சேரிக்குமட்டும் பெங்களூர்த்தாசி ‘லலிதா’வை வரவழைக்க ஏற்பாடு செய்திருப்பதாயும், இந்தப் பத்து நாளும் நமக்கு முதல் தரமான போசனமும், நல்ல தட்சணையும் கிடைக்கும். சங்கீதக்கச்சேரிகளைச் சுரோத்திரானந்தமாய்க் கேட்டு ஆனந்திக்கலாம்.” என்று வெகு குதூகலமாகச் சம்பாஷித்துக்கொண்டிருந்தனர். நான் அவைகளை வெகு கூர்மையும், கவனமுமாகக் கேட்டுக்கொண்டேயிருந்து அவர்கள் அச்சம்பாஷணையை முடித்ததும் நான் நேரே உம்மிடத்து வந்து அவைகளைத் தெரிவித்துவிட்டேன். மெத்த கல்விப் பிரியரும், தேசயாத்திரைவாசியுமான உமக்கு இவ்விஷயம் மெத்த ருசிகரமும், அன்புமாயிருக்குமென்று நம்புகின்றேன் என்றனள். அதுகேட்ட குணசுந்திரம் “ஆமாம் பாட்டி. இந்த விஷயம் எனக்கு மெத்த அநுகூலமும் சந்தோஷிக்கக் கூடியதுமானதுதான்.

நானும் சென்று பார்த்து வரலாமென்றிருக்கிறேன் " என்றனள். கிழவி ஆமாம் தம்பி! அவசியம் பார்க்கவேண்டியது தான். எப்பொழுது புறப்படுகிறாய் என்றனள். குணசுந்தரம்—அடுத்தவாரம் போவோமென்றிருக்கின்றேன் என்றனள். கிழவி—நல்லதென்று கூறிவிட்டுத் தன் வேலைமேற் சென்றாள்.

குணசுந்திரத்திற்கு கிழவி மூலமாய் விஷயத்தைக் கேட்டதிலிருந்து தனது மனத்திற்கொரு உற்சாகமும், உடல் பூரிப்பும், தன்னையறியாத ஒரு பரவசமும் உண்டாயிற்று. நினைக்குந்தோறும் ஆனந்தமே அதிகரித்தது. இவ்வதிசய விளைவு எனக்குப் பின்னர்நேரப்போகும் நன்னிமித்தத்தின் முன் அறிகுறிபோலும் என்று மகிழ்ந்து அடியில் வருமாறு ஆலோசிக்கவும் தொடங்கினள்.

" என்தந்தையும் சுற்றத்தார் முதலியவர்களும், என் உபகாரி தாசி லலிதாவும், என்விரோதி மைனர் குழந்தைவேலப்பனும்புரவிபாளையத்திற்கு வருவதாக அறிகிறேன். இவர்கள் அனைவரும் நான்எதிர் பாராமலே ஏககாலத்தில் ஓரிடத்தில் கூடுவது மிக அருமையானது. இவ்வரிய சமயம் எனக்கொரு காலத்தில் வாய்க்க வேண்டுமென்று கோறறதுண்டு. எனது எண்ணத்தின் தடிப்பும், வேண்டுதலின் நோக்கமும் இவ்வடி வாயவந்து கூடியது போலும். 'வேண்டுவார் வேண்டுவதீயும்' விமலனது கருணை என் மீதிருந்தவாறு மிகநன்று. புரவிபாளையம் ஜமீன்தாரவர்கள் வெகு நீதிமானும் நியாயவாதியும் நிரம்பிய கல்வியுடையவருமெனக்கேள்வி ? அத்துடன் பிறர்துக்கங்கண்டு சகியாத அருங்குணமும் உமராயிருப்பினும் அநீதியாய் நடப்பின் கண்டிப்பாய்த் தண்டிப்பதில் மிகக்கண்டிதவாதி யென்றும் எந்தந்தை கூறப் பல முறைகேட்டிருக்கிறேன். இத்தகைய நெறிமுறையுடைய அரசனிடத்து எனது தமையன் வேணுகோபாலனாலும்,

மைனர்குழந்தை, வேலைப்பளுவும் எனக்குற்ற அநீதங்களை முறையிட்டுக் கொண்டால் தக்கநியாயங் கிடைப்பதுடன் நான் நிரபராதியும், குற்றமில்லாதவனென்னும் விஷயமும் வெளிப்படும். அப்பொழுது உண்மை எங்கும் பரவ, அத்தால் எனக்கேற்பட்ட அபவாதமும் நீங்கும். ஆனதால், இவ்வரிய சமயத்தை நான் எவ்வகையிலும் இழக்காமலிருக்க வேண்டும் என்பதே."

பின்னும், நான் எண்ணியவாறே விஜயம் முடிவதாக வைத்துக் கொள்வோம். எதற்கும் விஜயம் அருகிலிருக்க வேண்டுமே. இவ்வளவும் அவன் சந்தேக நிவர்த்தியின் பொருட்டுத்தானே செய்வது. அவனில்லாது போனால் நான் என் செய்வேன்? சிறையினின்று விஜயன் எதற்காக வெளிவர வேண்டும்? என்பொருட்டுத்தானே! அப்படியிருக்க என்னைத் தேடிக் கொண்டுதானே அவனிருப்பன்? வெகுதொலைவில் தேடிக்கொண்டிருக்கின்றானோ? சமீபத்தில் தானிருக்கின்றானோ? தெரியவில்லை. சமீபத்திலிருப்பின் தசராமகோற்சவத்தின் விமரிசையைக் கேள்விப்பட்டிருக்கலாம். கேள்விப்பட்டிருப்பின் அவசியம் அங்குவரத்தவான். திருவருள் கூட்டுவதாக என்று எண்ணிக்கொண்டு தன் பிரயாணத்திற்கு வேண்டிய விஷயத்தில் கவனஞ் செலுத்திக் கொண்டிருந்தாள். இங்ஙனம் ஒருவாரம் சென்றன. தசராவுற்சவத்தொடக்கம் இன்னும் இரண்டே நாள் தானிருக்கிறது!

## XXI

### தசராப் பிரயாணம்.

"திலகு முக்குடைச் செல்வன் திருநகர்
பலரு மேத்தினர் பாடின ராடினர்
குலவு பல்லியங் கூடிக் குழுமி நின்
றுலக வெள்ள மொலிப்பது போன்றவே."

தசரா உற்சவம் நெருங்க நெருங்க குணசுந்தரத்தின் யோசனையும் அதிகப் பட்டுக்கொண்டே வந்தது. உற்சவங் காண இன்றுபோவதா! நாளைபோவதா! 9வது நாளன்று தானே லலிதா வரப்போகிருள்? 10-வது நாள் ஆசார சீர்த்திருத்தப் பெண்கள் கான்பிரன்ஸ். அன்றுமுதல் அங் கிருந்தாற்போதாதா? அதற்கு ஒருவாரத்திற்கு முந்தியேன் நானங்குச்செல்லவேண்டும்? செல்வதினுல் தோஷமொன்று மில்லை. ஆணுடையோடு வசிப்பதற்குச் சௌகரியப்படா தென்பது பற்றித்தான். புரவிபாளையம் பெரிய ஜமீனுயி னும், ஊர் சிறியது. அதில் கூடுங்கூட்டமோ மிகப்பெரிது. இச்சந்தடியில் தனிமையும் வசதியுமான விடுதிகிடைப்பது கஷ்டம். தவறி என்வேஷத்தை எவரேனுங்கண்டுவிட்டால் சந்தேகத்திற்கிடம். மேலும் இது வரையும் வெகுஜாக்ரதை யாய்க் காப்பாற்றி வந்ததும் வீணுகும். உரியகாலத்தில் இவ் வேஷத்தைக் களைந்து நிஜவடிவத்தோடு தோன்றி என்

உண்மையை விளக்கவேண்டுமென்பதல்லவா சங்கற்பம். அதுதானே சாதுர்யமும் சாமர்த்தியமுமென்பது. இதனைப் பிறர் கண்டாலும் கேட்டாலும் வியந்து பிரம்மிப்பான்றோ ஆனதால், அப்பொழுது செல்வதே உசிதம். தசராவின் எட்டாவது நாள் காலை 6-மணிக்கு இங்கிருந்து பிரயாணப் பட்டால் எவ்வளவு மெதுவாய்ச் சென்றாலும் மாலை 6 மணிக்குப் புரவிபாளையம் சென்றுவிடலாம். அதுதான் சரி. என்று தன் தீர்மானத்தை முடித்துக்கொண்டு பிரயாணநாளை எதிர்பார்த்துக்கொண்டிருந்தாள். மனிதனது வாள்நாளை அளக்கும் சூரியனது உதயாஸ்தமானம் வெகுவிரைவானதால் நாட்கள் சீக்கிரம் கழிந்து ஒழிந்தன. குறித்தநாளும்வந்தது. குணசுந்தரம் கிழவியிடத்துத் தான் சத்திரத்துத் தனி விடுதியிலிருக்குமளவைக்கும் யாதொரு குறைவுமின்றி வசதி செய்து கொடுத்த அவள் உபகாரத்திற்கு உபசாரங் கூறித் தன் நன்றியறிவிப்பைத் தெரிவித்ததுமன்றி அவளுக்குச் செய்யவேண்டிய சன்மானத்தையும் மனங்களிக்கச்செய்து விடைப்பெற்றுக் கொண்டனள். புரவிபாளையத்திற்கு நேராகச் செல்லக்கூடிய நாட்டுவண்டி முந்தியநாள் திட்டஞ் செய்தபடி சத்திரத்துவாயிலில் வந்து நின்றது. குணசுந்தரம் மீண்டும் கிழவியிடத்துப் பிரியா விடை பெற்றுக் கொண்டு சீக்கிரம் திரும்ப வந்து உன்னைப்பார்க்கிறேன் என்றுகூறி வண்டியேறினள். வண்டியும் சத்திரத்தைவிட்டு நகர்ந்தது. அப்பொழுது சுமங்கிலியப் பிராமணப் பெண்கள் மங்களத்திரவியங்களைத் தட்டுகளில் வைத்துக் கொண்டு நிறைந்தபாற் செம்புடன் எதிரே வந்தார்கள். பசு, குதிரை, நிறைகுடம் முதலியன எதிரில் வந்தன. வாத்திய வொலியும், கோவில்மணி யோசையும் வெகு முழக்கமாய் ஒலித்தன. இவ்வளவு நல்ல சகுனத்தையும், நன்னிமித்தத்தையுங் காண குணசுந்தரத்திற்கு மகிழ்ச்சியதிகரித்து உற்சாகந்தோன்

றின, தான் உத்தேசித்துச் செல்லும் காரியம் வெகு நன்ருய் முடியுமென்னும் தைரியமும் உண்டாயிற்று. அத்துடன் விஜயனை விரைவில் காணக்கூடுமென அநுமானமும் உதித்து. இத்தகையமனக்களிப்புடன் தனது பிரயாணத்தைச் செலுத்திக்கொண்டிருக்கையில் பகல் 12 மணியடித்தது. வண்டியும் சிறுமங்கலம்" என்னும் சிற்றூர் வந்தது வண்டிக்காரன் தனது வண்டிக்குள்ளிருக்கும், வாலிபரை நோக்கி! "ஐயா! தாங்கள் இங்குள்ள சத்திரத்தில் ஒரு மணிநேரம் இளைப்பாறுங்கள். நான் அதற்குள் மாட்டுக்குத் தீனிவைத்துத் தண்ணீர்காட்டிப் போஜனத்தையும் செய்து முடித்துக் கொள்ளுகிறேன். பின்னர் வண்டி கட்டினுல் மாலை 5 மணிக்கெல்லாம் புரவிபாளையம் சேர்ந்து விடும். மாட்டுக்கும் களைப்பிராது. விசையாகவும் செல்லும். அனைவர்க்கும் சௌகரியம் என்ன சொல்லுகிறீர்? அத்துடன் இச்சத்திரத்தில் இவ்வாறு மாதமாக "பால்ய சந்நியாசி" ஒருவர் வந்து தங்கியிருக்கிறுர். மெத்த நல்லவர், உத்தமர். நன்ருய்ப் படித்தவர். அவரை வேண்டுமானுலும் பார்க்கலாம்." என்றனன். வண்டிக்காரன் கூறிவந்த விஷயங்களில் இறுதியாகக் கூறிய பால்யசந்நியாசி இவ்வாறு மாதமாய் இங்குத் தங்கியிருக்கிறுர் என்ற விஷயமட்டும் குணசுந்தரத்தின் மனதில் ஆழப்பதிந்து அவசியம் பார்க்க வேண்டுமென்ற ஆவலையுண்டாக்கிற்று. "அப்படியானுல் உன்னிஷ்டப்படி செய். விடு அச்சத்திரத்திற்கு வண்டியை. எனக்குச் சந்நியாசியைக் காட்டி விட்டு, நீ சொன்ன காரியத்தையெல்லாம் விரைவிற் செய்து முடித்துக் கொண்டுவா." என்றனள், வண்டிக்காரனும் வண்டியைச் சத்திரத்திற்கு விட்டு, மாட்டை அவிழ்த்து ஒருபுறங்கொண்டு கட்டிவிட்டுத் தன் வண்டியுள்ளிருந்த வாலிபனை அச்சத்திரத்திற்குள் அழைத்துப் போய் அங்கொருதனி அறையில் வாசஞ்செய்து கொண்

டிருக்கும் பாலிய சந்நியாசினியைக்காட்டி 'இவர்தான் நான் சொன்னவர்.' சம்பாஷித்துக்கொண்டிருங்கள். நான் விரைவில் வருகிறேன்" என்று சொல்லித்தன் வேலைமேற்சென்றான்.

அப்பொழுதுதான் விஜயன் தன்பூசையெல்லாம் ஒருவாறு முடித்துவிட்டுப் போஜனம் செய்வதற்கு ஆயத்தமாயிருந்தான். குணசுந்தரம் அவனைப்பார்த்ததும் அவனது புதுக்கோலத்தால் முதலில் இன்னானென்று புலப்படாதொழியினும், அவனது முகவடிவம், சாயல், அங்க அடையாளம், உருவமைப்பு கூட இவைமுதலியவற்றால் தனது விஜயனேயென்று தெள்ளிதினுணர்ந்து கொண்டாள். அப்போது அவளுக்குண்டான பேராவல், பரபரப்பு இவைகள் அளவிடங்காதாயிருந்தன. தன்மனமும் தனதிருகைகளும் அவனைத்தாவி ஆலிங்கனஞ் செய்யத்துள்ளிக்கொண்டிருந்தன. இம்மெய்ப்பாடுகளனைத்தையும் தனது பொறுமையினால் ஒருவாறடக்கிக்கொண்டு அறியாதபாவனையிலிருந்து கொண்டிருந்தாள். விஜயனுக்குத் தன்னிருக்கைநாடிப் புதிதாய்வந்த அவ்வாலிபனை இன்னானென்று உணர்ந்துகொள்ள முடியாமற்போயிற்று. சற்றுநேரம் இருவரும் ஒருவரையொருவர் பார்த்துக்கொண்டேயிருந்தனர். இன்னவர்தான் முதலில் பேசுவது என்ற தீர்மானத்திற்கு வாராமலேயிருந்து முடிவாக விஜயன், யாவராயிருப்பினும் தன்னிருக்கை நாடி வந்தவர்க்கு உபசாரம் செய்யவேண்டுவது பொது தர்மம் ஆனதால், தானே தான் முதலில் பேசவேண்டுமென்று கூறி "ஐயா! வாருங்கள்! தாங்கள் எந்தவூர்? எங்குச்செல்லுகின்றீர். இங்குவந்தகாரணமென்ன? நாழிகையாகிறது போஜனம் செய்வோம் எழுந்திருங்கள்" என்று முகமன் சொல்லி உபசரித்தனன். குணசுந்தரம் அதற்குப் பிரதிவிடையாகத் தன் குரலை ஒருவாறு மாற்றிக்கொண்டு ஐயா!

தங்கள் உபசாரத்திற்கு அனந்தவந்தனம். ஒரு துறவிக்கிருக்கவேண்டிய அருட்கோலமும், சாந்தகுணமும் இனிய சொல்லும், வந்தவரை பட்சமுடன் முகமன் கூறி உபசரிக்கும் நல்லன்பும் தங்களுக்கு உள்ளவாறே பொருந்தியிருப்பதற்கு நான் மெத்த சந்தோஷிக்கிறேன். நான் ஒரு யாத்திரைவாசி. புரவிபாளையம் ஜமீனில் நடக்கப்போகும் தசரா உற்சவங்காணச்செல்லுகின்றேன். வரும்வழியில் தங்களைப்பற்றிக்கேள்விப்பட்டேன். பார்த்துப்போவோமென்று இங்கு வந்தேன். நான் வந்தகாரணம் இதுவே என்றனள்.

சந்நியாசி :—ஐபா ! தங்கள் வரவு நல்வரவு ஆகுக. தங்களைப் பார்க்க எனக்கும்மெத்தச் சந்தோஷம். முதலில் போசனம் செய்வோம். பகல் பதினைந்து நாழிகைக்கு மேலாகிறது எழுந்திருங்கள் என்று கூறி கைகால் சுத்தி செய்து கொள்ளும்படி ஒரு சிறு செம்பில் தண்ணீர் கொண்டுவந்து வைத்தனன். குணசுந்தரம் மறுமொழி கூறவகையின்றி இன்று மனமொத்த தன் அன்பனுடன் முதலில் ஒருசேர உண்ணும் பாக்கியம் வாய்த்ததற்காக அளவிலாக் களிப்பெய்திக் கைகால் சுத்தி செய்துவந்து உடனிருந்து அன்பளாவி வயறு நிறையப் புசித்து மகிழ்ந்தனள். அன்று அவர்களுண்ட உணவின் சுவை, தேவர்கள் உணவாகிய அமிர்தத்திற்கும் அதிகப்பட்டிருந்ததெனக் கூறுவது மிகையன்று. இவ்வாறு உணவருந்தி முடித்தபின் எழுந்து கைகால் சுத்தி செய்துக்கொண்டு ஓரிடத்திலுட்கார்ந்து அடியில் வருமாறு சம்பாஷிக்கத் தொடங்கினர்.

பால்ய சந்நியாசி :—வாலிபரை நோக்கி" ஐபா ! தாங்கள் இவ்வளவு இளமையில் தங்கள் தாய்தந்தையரைத் தனியே விட்டுப் பிரிந்து அவர்கள் மனம்வருந்த அகன்ற இவ்வுலகத்தைச் சுற்றிவர யாத்திரையாகச் செல்லத் துணிந்திருப்பதற்கு மிகவியக்கின்றேன் என்றனன்.

வாலிபர் :—ஐயா! தாங்கள் இன்னும் பால்யனாயிருந்தவராகவும், இவ்வுலகத்தைப்பற்றியே இன்னும் இன்னதென்றுணரமுடியாத அவ்வளவு தாழ்ந்த நிலையிலுள்ளவராகவுமிருந்து முற்றுமுணர்ந்த பெரியவர்போல் துறவுக்கோலம் கொள்ளத் துணிந்துக்கொண்டுவிட்டீர்! எனது உலகயாத்திரையின் துணிவு தங்களுக்கு அதிசயமாகத் தோன்றியது என்றனன்.

பால்ய சந்நியாசி :—ஐயா! தங்களை நான் கேட்ட வினவுக்கு நேர்விடைதாராது "பட்டுக்கோட்டைக்கு வழியேதென்றால் கோட்டைப்பாக்குத் துட்டுக்கு மூன்று" என்றாற்போல பேசுகின்றீர். தங்கள் வார்த்தை விபரீதமாக விருக்கிறதே என்றனன்.

வாலிபர் :—நான் தங்களைக் கேட்ட கேள்வி தவறென்றும், விபரீத வார்த்தையென்றும் சொல்லத்துணிந்து விட்டாற்போலிருக்கிறது. சந்நியாசியாகவருவோர் இளமையில் இல்லறத்தில் மனைவியோடு கிரமமாகக் காலங்கழித்து முதுமை வந்தபின் பிள்ளை வழிபட்டு ஆன்மலாபத்தையடைய வனத்திற்குச் சென்று தவமேற்கொண்டு உடலைவருத்தி விடவேண்டியது பண்டைக்கால வழக்கு. இக்காலத்தில் அதற்கு நேரெதிராகத் "தடியெடுத்தவனெல்லாம் தண்டக்காரன்" என்பதுபோல் குடும்பவிரக்தி, மனைவியர்பிணக்கு, ஜயிலினின்றுந் தப்பிவெளிவருதல், முதலிய துன்பங்களினின்றும் நீங்குதற்கு இது போன்ற சந்நியாசவேடம்மெத்த உபாயமானதென்று கருதிப் புனைந்து கொள்வது விபரீதமா? எனது கேள்வி விபரீதமா? எது உண்மையென்பதைச் சற்று ஆலோசித்துப்பார்க்க வேண்டுகிறேன் என்றனன்.

பால்யசந்நியாசி :—வாலிபர் கூறிய அச்சொற்கள் தன்னைத் தூக்கிப் போட்டாற்போலிருந்ததுமன்றி, உண்மையுணர்த்துத் தன்னை நோக்கிக்கூறியதோவென்னும் சந்தேகத்தையும் உண்டாக்கிற்று. இருப்பினும் அதனை அத்தனை எள்

ஆனந்தத்தையும் இதுகாறும் கண்டதில்லை என்று சந்நியாசியிடத்து வாலிபன் கூற சந்நியாசியும் எனக்கும் அப்படியே என்றனன். இவ்வாறு இருவரும் தம்முள் மொழிந்துகொண்டு பட்டினத்துள் புகுந்து அங்கு நிகழும் கோலாகலத்தையும், சனங்கள் ஆரவாரத்தையும் பார்த்துக்கொண்டே செல்ல, எதிரே தோன்றிய வருவிருந்தினரை உபசரிக்கும் சபையோரால் வரவேற்று உபசரிக்கப்பட்டு அவர்கள் ஊட்டிய உணவையுண்டு; காட்டிய இருக்கையிலிருந்து வழியிளைப்புத்தீரத் தனித்தனி நிம்மதியாகச் சயனித்துக்கொண்டு உறங்கினர்.

## XXII

## புரவிபாளையம்

"உறுபசியு மோவாப் பிணியுஞ் செறுபகையுஞ்
சேரா தியல்வது நாடு."

(திருக்குறள்)

புரவிபாளைய மென்பது கொங்கு நாட்டில் கோயமுத்தூர் ஜில்லாவின் தெற்கிலுள்ளதோர் சிற்றூர். ஊத்துக்குழி சமுத்தூர், இராமபட்டினம்,' 'பொள்ளாச்சி,' ஆகிய ஜமீன்களைவிடப் புரவிபாளையம் பெரியதொரு ஜமீன். மெத்தச் செல்வாக்கும், அதிக வருவாயுமுள்ளது. 'நொய்யல்' நதியும், 'அமராவதி' யாறும், ஊற்றெடுத்துப்பாய்வதனால் நஞ்சை விளைவும், புஞ்சைப் பெருக்கும் அதிகப்பட, செல்வாக்கும் செழிப்பும் மிகுதியாவதற்குக் காரணமாயின. "நீருயர நெல்லுயரும், நெல்லுயரக் குடியுயரும் குடியுயரக் கோலுயரும், கோலுயரக் கோனுயர்வான்" என்பது பொய்யா வாசகமன்றோ! ஊரைச் சுற்றி நான்குபுறத்திலுமுள்ள தென்னை, பாக்கு, முதலிய தோப்புக்களும், அதனிடையிலுள்ள மா, பலா முதலிய சோலைகளும் வெகு செழிப்பாக வளர்ந்து ஒழுங்கும் வரிசையுமாய் வானளாவ ஓங்கியிருக்கும் தோற்றம், ஜமீனது காவற்படைகள் அணிவகுத்து நகரைச் சூழ்ந்து காவல் செய்ய நின்றிருப்பது போற்காணப்பட்டன. ஊர் நடுவ

ஆனந்தத்தையும் இதுகாறும் கண்டதில்லை, என்று சந்நியாசியிடத்து வாலிபன் கூற சந்நியாசியும் எனக்கும் அப்படியே என்றனன். இவ்வாறு இருவரும் தம்முள் மொழிந்துகொண்டு பட்டினத்துள் புகுந்து அங்கு நிகழுங் கோலாகலத்தையும், சனங்கள் ஆரவாரத்தையும் பார்த்துக்கொண்டே செல்ல, எதிரே தோன்றிய வருவிருந்தினரை உபசரிக்கும் சபையோரால் வரவேற்று உபசரிக்கப்பட்டு அவர்கள் ஊட்டிய உணவையுண்டு; காட்டிய இருக்கையிலிருந்து வழியிளைப்புத்தீரத் தனித்தனி நிம்மதியாகச் சயனித்துக் கொண்டு உறங்கினர்.

# XXII

## புரவிபாளையம்

> " உறுபசியு மோவாப் பிணியுஞ் செறுபகையுஞ்
> சேரா தியல்வது நாடு."

(திருக்குறள்)

புரவிபாளையமென்பது கொங்கு நாட்டில் கோயமுத்தூர் ஜில்லாவின் தெற்கிலுள்ளதோர் சிற்றூர். ஊத்துக்குழி சமுத்தூர், இராமபட்டினம்,' 'பொள்ளாச்சி,' ஆகிய ஜமீன்களைவிடப் புரவிபாளையம் பெரியதொரு ஜமீன். மெத்தச் செல்வாக்கும், அதிக வருவாயுமுள்ளது. 'நொய்யல்' நதியும், 'அமராவதி' யாறும், ஊற்றெடுத்துப்பாய்வதனால் நஞ்சை விளைவும், புஞ்சைப் பெருக்கும் அதிகப்பட, செல்வாக்கும் செழிப்பும் மிகுதியாவதற்குக்காரணமாயின. "நீருயர நெல்லுயரும், நெல்லுயரக்குடியுயரும் குடியுயரக் கோனுயரும், கோனுயரக் கோனுயர்வான்" என்பது பொய்யா வாசகமன்றோ! ஊரைச்சுற்றி நான்குபுறத்திலுமுள்ள தென்னை, பாக்கு, முதலிய தோப்புகளும், அதனிடையிலுள்ள மா, பலா முதலிய சோலைகளும் வெகு செழிப்பாக வளர்ந்து ஒழுங்கும் வரிசையுமாய் வானளாவ ஓங்கியிருக்கும் தோற்றம், ஜமீனது காலாட்படைகள் அணிவகுத்தது ஊரைச் சூழ்ந்து காவல் செய்ய நின்றிருப்பது போற்காணப்பட்டன. ஊர் சிறிய

தாயிருப்பினும், தெருக்கள் ஒழுங்கும், அழகுமாய் அமைந்திருந்தன. நாற்சந்தி முச்சந்தி கூடுமிடங்கள், விளக்கமும், விசாலமாயுமிருந்தன. அரண்மனை ஊருக்குமேற்கில் தனிமையில் வசதியானவிடத்தில் வாசாயோக்கியமாய் அரசர் அந்தஸ்திற்கேற்ற முறையில் அழகு சிறக்க நன்கு கட்டப்பட்டிருந்தது. ஜமீன்தார் வீற்றிருந்து குடிகளை விசாரணை செய்வதற்குரிய அத்தாணி மண்டபமும், தசரா முதலிய உற்சவ விசேஷங்களில அரியாசனமேறிக் கொலுவீற்றிருக்கும் தர்பார் ஹாலும், வெகு நன்றாய் நேத்திரானந்தமாய்ச் சமைக்கப்பட்டிருந்தன. இக்கதை நிகழ்ந்த சமையத்தில் புரவிபாளையம் பிற ஜமீன்களைவிடப் பெரியதாயும், பெயர் சிறந்து மிகுந்ததெனவும் கூற வேண்டாம். அப்பொழுது பட்டம் வகித்து விளங்கிய ஜமின்தார் "ஜகமண்டலாதிபதி கோப்பண்ண காங்கேய மன்றாடியாரவர்கள்," அரசர்க் கிருக்க வேண்டிய அருங்குணங்களும், தோற்றம், உருவமைப்பு, முகப்பொலிவு, வசீகரத்தன்மை, முதலிய அங்கலக்ஷணங்களும் "சாமுத்திரிகா" சாஸ்திரவிரோத மின்றிப் பொருந்த, சிறந்த ஒரு ஆணழகனாய்த் திகழ்ந்தனர். அத்துடன் கல்வியிலும், கனத்திலும், தனத்திலும், பிரபுத்வத்திலும் பெருமை பெற்றுத் திருமாதும், ஜயமாதும் தமதிருபுறத்துஞ் சேர்ந்திருப்ப மண்ணுலகத்து மகவானெனப்ப விருந்தனர். இயற்கையிலேயே புரவிபாளையம் அழகிற் சிறந்ததென்று மேலே கூறியுள்ளோம். இப்பொழுது விசேஷ தசரா உற்சவப்பிரிமையும் சேர்ந்ததென்றால், அவ்வூரின் அலங்காரத்தை அளவிட்டு உரைக்க முடிந்ததோ! அந்நகரை எங்கு பார்க்கினும் வாழை கமுகுகளாலும், மாவிலைத் தோரணங்களாலும், நன்றாய் அலங்கரிக்கப் பட்டிருந்ததானது வெகு சோபிதமாய்ப் பார்ப்போர்க்கு நேத்திரானந்தத்தைத் தந்து கொண்டிருந்தன. கல்விச் சபைக்காக அமைக்கப் பட்டிருந்த

பெரும் பந்தல்களும், உயர்ந்த மேடைகளும், எடுத்த விதானங்களும், கட்டிய நீண்ட தோரணங்களும் வெகு அழகாய் விளங்கின. அரண்மனை வாயிலிலும், பந்தல்கள் மீதும் தூக்கிய துகிற்கொடிகள் காற்றினால் மோதப்பட்டசைவது, 'அறியாமையினாலும், குணக்கேடுகளாலும், அநாகரிகத்தாலும் கெட்டலையும் பேதைமக்களே! இன்று கூடும் நமது சொந்த பாஷைக் கல்விச் சபைக்கு நீங்கள் விஜயஞ் செய்து உங்களிலுள்ள நானென்னும் அகந்தை, தற்புகழ்ச்சி, படாடோபம், ஜாதியென்னும் கருவம் இவைகளை விட்டொழித்து, அன்பு, ஒற்றுமை, சமத்துவம், சகோதரத்வம், சத்தியம், அஹிம்சை பரோபகாரம் இவைகளைக் கைக்கொண்டு நமது நாட்டையும் நாட்டின் கைத்தொழில்களையும் விருத்திக்குக் கொண்டு வர முந்தி வாருங்கள்! முந்தி வாருங்கள்!! என்று கையசைத்து விரைந்து அழைப்பது போலிருந்தது. இனி, இன்று 9வது நாள் தாசி லலிதாவின் சங்கீதக்கச்சேரி. இதோ! வருகிறாள்; அதோ! வருகிறாள், வந்து கொண்டிருக்கிறாள், வந்து விட்டாள் என்று அவள் வருகையைப்பற்றியும், அவள் அழகு செல்வம், பாட்டின் மேன்மை, சாரீரச் சிறப்பு இவைகளைப் பற்றியும் ஜனங்களில் அதிகமாய்ப் பேசப்பட்டு அந்த சப்தம் எங்கும் ஒரே முழக்கமாய்க் கேட்டுக் கொண்டிருந்தன. மாலை மணி நாலாயிற்று. தாசி லலிதா வந்து விட்டாளென்றும், அரண்மனையில் சங்கீதக் கச்சேரி ஆரம்பமென்றும் பிரஸ்தாப முண்டாக, அரண்மனையில் கூட்டம் கூடத் தொடங்கின. எள்ளிட இடமின்றி எங்கும் ஒரே ஜனத்திரளாய்க் கூடி விட்டனர். பெரும்பதி ஜமீன்மைனர் குழந்தைவேலப்பனும், மாவுத்தம்பதி மிராசுதார் முத்துவேலப்பரும், சுரோத்திரதார் மணவாளப் பிரபுவும், மற்றும்பல பிரபுக்களும் அவரவர்க்குள்ள ஸ்தானங்களில் வந்து வீற்றிருந்தனர். புரவிபாளையம் ஜமீன்தாரும் மந்திரஸ்தானத்

தில் தக்க தொருபீடத்தில் வெகு கம்பீரமாய் வந்து எழுந்தருளினர். அச்சமையத்தில் பதினெட்டே வயதுடைய அழகிய ஒரு இளவாலிபனும், இருபது வயது நிரம்பாத எழில்மிக்குடைய ஒரு இளம் பால்யசந்நியாசியும், அதிக ஆடம்பரமின்றிச் சாதாரணவுடைகளுடன் அக்கூட்டத்தில் தோன்றினர். அங்ஙனந் தோன்றிய அவ்விருவர் தோற்றமும் காண்போருக்கு, கிருஷ்ணனும் விஜயனும் போலவும், ராமனும் லட்சுமணனும் போலவு மிருந்தன. அவர்கள் அதிசயவரவும் அழகின் தோற்றமும் பார்ப்போர்க்கு வியப்பாயிருந்ததினால் யாவர் கண்ணும் மனமும் அவர்கள் மீதே சென்று கொண்டிருந்தன. ஜமீன்தாரும் அவர்கள்வரவுக்கு அகமகிழ்ந்து தமது சமீபத்திலேயே அவர்களுக்கு ஆசனமிடச் செய்து வீற்றிருக்கச் செய்தனர். இதற்குள் குறித்தகாலமும் வந்தது. தாசி லலிதாவும் தனது தனபாரங்குலுங்கச் சிற்றிடையசைய மேகலைநெகிழ, மந்தகாசந்தோன்ற மைதீட்டிய தனதிரு நீல விழிகளால் காமுகரை வருத்தும் மோகப்பார்வையுடன் மயிலெனச் சாய்ந்து அன்னமென நடந்து அங்குவந்தனள். அங்ஙனம் வந்த அவளை அவளுக்கெனத் தனியாக ஏற்பாடுசெய்யப்பட்டிருந்தவிடத்தில் இருத்திப் பாடும்படி உத்திரவுசெய்தனர். அவள் தனது தம்பூரைச் சுருதிகூட்டித் தனக்கியற்கையாயுள்ள இனிய சாரீரத்துடனும், அனுபவம்பெற்று மெருகேறிய பாடலின் சமர்த்தாலும், யாவர் மனத்தையும் பரவசப் படுத்திக் கானரஸத்திலாழ்த்தி ஆனந்திக்கச் செய்தனள். சங்கீதஞ் சிரவணித்தாரெவரும் சிரக்கம்பம் கரக்கம்பஞ் செய்து கொண்டிருந்தனரேயன்றி விருதாவாய் ஒரு நிமிஷமும் வீண்பொழுது போக்கினரில்லை, மாலை மணி ஏழடித்ததும் தனது கானத்தை முடித்து மங்களம் பாடினள். அச்சபை அங்ஙனமே இரண்டு நிமிஷம் அசைவற்று நிஸ்சப்தமாயிருக்கையில் ஆண்வேடத்துடன் ஜமீன்தார் பக்கத்தில்

வீற்றிருந்த வாலிபன் எழுந்து "அரசர் பெருமானே! எனது சிறுவிண்ணப்பத்திற்குச் செவி சாய்த்தருள வேண்டும். நான் இந்நாட்டுக்குப் பழையனே யெனினும், இவ்வூர்க்குப் புதியன். விலக்க முடியாத சில நிர்ப்பந்தங்களால் நான் யாத்திரை வாசியாயிருக்கிறேன். இன்றுபாடி நம்மியாவரையும் சங்கீத சாகரத்திலாழ்த்திப் பேரானந்த மூட்டிய தாசி லலிதாம்பாளின் அரியகான வித்தையை மெச்சிப் பாராட்டுகிறேன். நாளை நடந்து முடியும் கல்விச்சபைக்கு மறுநாள் மற்றுமொரு சங்கீதக்கச்சேரிவைத்து அவ்வித்வாம்சிக்குத் தக்க சன்மானம் செய்யவேண்டுமென்பது எனது விருப்பம். அதற்கும், நாளை முற்பகல் நடந்து பிற்பகல் நடக்கவிருக்கும் ஆசார சீர்திருத்தக் கான்பிரன்சில் அக்ராசனர் முகவுரைப் பிரசங்க முடிவையடுத்து, "எனது உண்மையும் உற்றதுன்பங்களும்" என்ற விஷயத்தைப்பற்றி நான் பிரசங்கிப்பதற்கும், பெரியமனது வைத்து உத்திரவு செய்வதோடு, இன்றுவிஜயம் செய்த தனதனவான்களும், மகாஜனங்களும் நாளைக்கும் விஜயஞ் செய்து எனது பிரசங்கத்தைக் கேட்டு மகிழும்படியும் கேட்டுக் கொள்ளுகிறேன்" என்று வேண்டினன். ஜமீன்தார் உமது இஷ்டப்படியே உத்திரவு செய்திருக்கிறோம். குஷாலாய்ப் பேசலாம். மகாஜனங்களும் அவசியம் வருவார்கள் என்று சொல்லினர். சபையும் கலைந்தது. வாலிபனுக்கும் பாலிய சந்நியாசிக்கும் அரண்மனையிலேயே இடவசதி செய்து தரும்படி அரண்மனையாரால் உத்திரவிட, அதன்படியே செய்யப்பட்டு சர்வோப சாரங்களும் நடந்தன.

# XXIII

## கல்விச் சபையும் ஆசார சீர்திருத்தமும்

" இக்கிளை நகுமொழி யெழின் மன்றார்றன்
மக்கண்மக் கோரென்ன மடமையா மிரண்
டக்கமு மொக்குமே யவற்று ளல்லகண்
எக்கண்மற் றெக்கணே யழிவு டைக்கணே "

பிரயாண இளைப்பால் இருவரும் மிகக்களைத்திருந்தால் ஸ்மரணையின்றி நன்றாய்த் தூங்கி அதிகாலையில் எழுந்தனர். அடுத்துள்ள மலர்க்காவிலிருந்து மலர் மணங் கவர்ந்த காலைக்காற்றுத் தேகத்தில் மெல்லென வீசிக் களிப்பித்தது. பூங்கொடி, செடிகளில் மலர்ந்த புதிய பூக்களில் தங்கியிரா நின்ற மதுவையுண்டு வண்டுகள் சோலைகள் தோறும் சென்று இசைபாடின. இல்லுறைப் பறவைகளாகிய கிளியும், நாகணைவாய்ப் புள்ளும் இனியமழலைமிழற்றின. மணிப்புறாவும் மாடப்புறாக்களும் விந்தை விந்தையாக விளையாடின. இதற்குள் ஏழ்புரவி பூட்டிய இரதத்திவர்ந்து இரவியாகிய சூரியன் இன்று நடக்கும் அதிசயங்காண ஆவல் கொண்டவன் போல் விரைந்து ஆகாயத்தில் தோன்றினன். வாலிபனும், சந்நியாசியும் படுக்கைவிட்டெழுந்து அரண்மனை வெளிமுற்றமடைந்து வாலிபன் இளஞ்சந்நியாசியை நோக்கி! "என் ஆருயிர்நண்பீர்! நான் கண் விழிப்பதற்குச் சற்று முன்னே கண்ட

சொப்பனத்தைக் கேட்டீரா? என்னைச் சில மாதங்களாக விட்டுப்பிரிந்துள்ள என்தாயும் தந்தையும் என் முன் தோன்றி 'எங்கள் அருமைக் குழந்தாய்! நீ இது காறும் எங்குச் சென்றிருந்தனை? உன்னைக் காணாது நாங்கள் பட்ட மனோவேதனை கொஞ்சமல்ல. எங்கள் ஆருயிர்ச் செல்வமே! இனி எங்களை விட்டு க்ஷணமும் நீங்க நாங்கள் சிறிதும் சம்மதியோம், என்று கூறி என்னைக் கட்டித்தழுவி முத்தமிட்டதாகக் கண்டேன்' என்றனன். அதற்கு இளந்துறவி, "என் அன்பனைய தோழா! விடியும் காலத்தில் காணும் கனவு பிரத்யட்சக் காட்சியென்று அனுபவமுணர்ந்த பெரியோர்கள் சொல்லக் கேட்டிருக்கிறேன். அதன்படி இன்று தங்களைப் பிரிந்த தாய் தந்தையரைத் தாங்கள் காண நேரிடினும் நேரிடலாம். தெய்வ சங்கல்பம் அங்ஙனம் கூட்டி வைத்தால் அகமகிழ வேண்டுவது தானே!

"எல்லிருட் கனவிற் கண்டேன் கண்ணிட னுடுமின்னே
பல்லியும் பட்டபாங்கர் வருங்கொலோ! யென்னையீன்றோர்"

என்ற உதாரணமும் உளதன்றோ?" என, வாலிபனும் "ஆம்" எனப் புன்னகை கொண்டனன். இது நிற்க.

கல்விச் சபைகாண நாம் செல்லவேண்டும். அது கூடும் காலமும் சமீபத்தது. நாம் நல்லாடை யுடுத்திச் சிற்றுண்டியருந்தி அங்கு செல்லுமுன் அங்குயாவரும் வந்து கூடியிருப்பர். இன்று நசராவின் கடைசி நாளானதினால் 'கவிவாணர்' 'பண்டிதசிரேஷ்டர்' 'பிரசங்கரத்திநாகரர்' 'வித்வரத்தினம்' 'வித்வஜனசேகரர்', வித்வஜனகோலாகலர்', 'சபாரஞ்சிதர்', 'பாலசரஸ்வதி,' 'வரகவி,' 'கவிக்குஞ்சரம்,' 'விருதுகவி ராஜசிங்கம்,' 'பாலபாரதி,' 'முத்தமிழ்ரத்னாகரம்,' 'அத்வைத சண்ட மாருதம்,' சிலேடைப்புலி,' 'வெண்பாப்புலி,' 'சிமிஷ கவிராயர்,' 'சந்தச்சிங்கம்,' 'புலவர்சரபம்,' 'பிரதிவாதிபயங்கரன்,' ஆகிய வித்வ கூட்டங்கள் சன்மானத்தின் பொரு

ட்டு விஜயஞ் செய்திருப்பர். ஆனதால், நாம் சென்று நமது காலைக்கடன்களை விரைவில் முடித்துக்கொண்டு சபை சேருவோம் வாருமென்றுகூறி அக்கடன்களை நிறைவேற்றச் சென்றனர்.

பொன்னகர்க்கிறைவனாகிய இந்திரனது "சுதர்மை" என்னும் சபையோவென ஐயுறும்படி கூடிய தெய்வத் தமிழ்த் திருச்சபையில் ஒவ்வொரு நிமிஷமும் கூட்டம் அதிகரித்துக் கொண்டேயிருந்தன. எள்ளிடவிடமின்றி ஜனத்திரள் நிறைந்ததும் அளப்பருங்கல்வியும், நிறைப் பெருஞ்செல்வமும் குணப்பெருங்குன்றமும், கோதிலாச் சீலமும் வாய்ந்த ஜமீன்தாரவர்கள் அழகிய தமது ராஜவுடையுடன் தன் மெய்க்காவலரும், சுற்றத்தாரும், அமைச்சரும் சூழ்ந்து நெருங்கிவர ஆங்கெழுந்தருளிச் சிங்காதனத்தமர்ந்து சிறக்க விருந்தனர். முன்னரே கூடியிருந்த வித்வான்களும், பிரஜைகளும் அரசர் வரவிற்கு ஆரவாரித்து மரியாதை செய்தபின்னர், அரசர் உத்திரவின்வண்ணம் வித்வான்கள் ஒவ்வொருவரும் தத்தம் கல்வித்திறமை விளங்கவும், அருமை பெருமை தோன்றவும், "கல்வியின் அவசியம், அன்பின்பெருக்கு, நட்பின்பெருமை, ஈகையின்சிறப்பு, அறத்தின்உயர்வு, கற்றோரைப்பேணல், சிற்றினஞ்சேராமை. கூடாநட்பு, பிறன்மனைவிழையாமை, பொருட்பெண்டிர்விலக்கம், ஆகிய விஷயங்களைக் கேட்போர் மனதில் பசுமரத்தாணி யெனப்பதியும்படி வெகுவிளக்கமும், தெளிவுமாக வாசாமகோசரமாய் அழகாகப் பேசினர். பேசிய விஷயங்கள் ஒவ்வொன்றும் பிரகிருதத்திற்கு வேண்டுவதாய், அத்யாவசிய மானதாயிருந்ததுடன், கேட்பதற்கு இனிமையையும், மகிழ்ச்சியையும் பெருக்குவித்து மேலும் கேட்கத்தக்க ஆவலையும் அதிகரிக்கச்செய்து கொண்டிருந்தன. என்னே! தமிழின் இனிமை, என்னே! தமிழின்சிறப்பு. இத்தகைய புலவர் கூட்டத்தா லுண்டாகும் சிறப்பையும்,

இன்பத்தையும் பற்றி முன்னரே கூறவந்த தமிழ்ப் பெரும் புலவர் ஒருவர், குற்றமற்ற தொன்னூலாராய்ச்சியிற் சிறந்துள்ளவராய்ப் பகைபற்றவராய் மனத்திட்ப முடையரா யுள்ள புலவர்பெருமக்கள் பல்லோர்கூடித் தாம் கண்ட அரிய பெரிய விஷயங்களைக் கூறிப் பிறர் மகிழ்ச்சியைக் கண்டு தம்மகிழ்ச்சி முன்னினும் மிகக்கொண்டு வாழ்வதைப் போல் இன்பந்தரும் வாழ்வு, பொன்னாட்டிற் புகுந்து அமிழ்த முண்டு அனுபவிக்கும் தேவரின்பமும் இதற்கீடாகாது என்னுங் கருத்துத் தோன்ற :—

"தவலருந் தொல்கேள்வித் தன்மை யுடையார்
இகலிலர் எஃகுடையார் தம்முட் குழீஇ
நகலின் இனிதாயிற் காண்பாம் அகல்வானத்
தும்பர் உறைவார் பதி." (நாலடியார்)

என்று கூறியது இச்சந்தர்ப்பத்திற்கு மிகப் பொருத்தமாய்க் காண்கின்றதன்றோ? வென அறிஞர் சிலர் கூறித் தத்தம்முள் மகிழ்ந்து கொண்டனர். அரண்மனையாரும் கல்வியின் அருமையும், கற்றோர் பெருமையும் நன்கு அறிந்தவரானதால் அவர்கள் பிரசங்கத்தை வியந்து புகழ்ந்து மிகப்பாராட்டினர். அதன் பின்னர் பாடவல்ல வாக்குச் சிறப்புடைய சில கவிராயர்கள் அரசர் பெருந்தகையைப் பற்றியும், தசரா விமரிசையைப் பற்றியும், வித்வ கூட்டத்தைப்பற்றியும் விற்பனையாகப் புனைந்த கற்பனைக் கவிகளைக் கூற, அவ்வினிய கவிகளை அரண்மனையாரும் கர்ணாமிருதமாகச் சிரவணித்து அதனதன் தன்மைக் கேற்ப அவ்வவர்களுக்கு வெகுமதியளித்து மனமகிழச் செய்தனர். அத்துடன் கல்விச் சபையும் கலைந்தது.

இனிக் கூடி முடிவடைய வேண்டுவது "ஆசார சீர் திருத்தப் பெண்கள் பெரிய சபை". இதில் நான், ஆண்வேடத்து

டனிருக்கும் "குணசுந்தரம்" தன் தமையன் வேணு கோபாலனால் விளைந்த விபரீதங்களையும், அதனால் தான் பட்ட கஷ்ட நஷ்டங்களையும், ஜமீன் மைனர் அக்கிரமத்தையும், மாதவன் முதலிய துஷ்டர்கள் அடாச் செய்கைகளையும், தாசி லலிதாவின் உபகாரச் சிந்தையையும், தன் ஆண் வேடத்தையும், விஜயன் மீது தான் கொண்டுள்ள உண்மைக் காதலையும் விவரப்பட விளக்கி வெளிப்பட வேண்டும். இவ்விஷயத்தில் இவள் சிந்தை வெகுவாய் ஈடுபட்டுக் கவனமுழுதும் அதிலேயே அழுந்திக் கிடந்தது. ஆறு மாதத்திற்கு முன் பிரிந்த தன் அருமைத் தாய் தந்தையரை அரிதிற் கண்டும், தன் ஆருயிரனைய விஜயனை அடுத்திருந்தும், அவர்களுடன் தான் இன்னாரென்றுணர்த்தி அளவளாவிச் சம்பாஷியாது உபேக்ஷையாயிருப்பது அலட்சியபுத்தி கொண்டல்ல. பொறுமையிழந்து அவசரப்பட்டால் உண்மை வெளிவராது லட்சியம் மறைந்து விஷயம் வேறாகி விடுமென்றும், துஷ்டரைத் தக்கபடி தண்டிக்கச் செய்து தான் நிரபராதி யென்பதை மெய்ப்பித்துக்காட்டவும், முடிவில் தான் இன்னாளென்பதை அவர்களே உணர்ந்து பிரமித்து வியந்து மகிழச் செய்யவும், அது வேதனது முடிந்த மனோசங்கல்ப மென்பதை உணர்த்தவுமாகக்கருதி அத்தனையும் தன் சிந்தையுள் வைத்தடக்கிப் பொறுமை மேற் கொண்டிருந்த தென்க. என்னே! பெண்களின் சாகஸம். "கானாறியக் கடவுளருங் கண்பரோ, மானார் விழியார் மனம்" என்றது எவ்வளவு உண்மையாய்க் காண்கின்றது. இஃதிவ்வாறிருக்க, மாலை மூன்று மணிக்கெல்லாம் பெண்கள் "ஆசார சீர்திருத்தச் சபை" கூடுவதற்கு ஆரம்பமாயிற்று. காலையில் கூடிக் கலைந்த கல்விச் சபைக்கு விஜயஞ் செய்திருந்ததை விடப் பதின் மடங்கதிகமான ஜனங்கள் வந்து கூடினர். எல்லா வித்துவான்களும் அவரவரது விஜயமாயிருந்தனர். பெண்கள்கூடும் விசேஷக் கூட்ட மென்

ளுல் பார்க்கவரும் ஜனங்கள் அதிக மென்பது பதிவுதானே நிற்கக் கூட விடமின்றி ஜனங்கள் அமோகமாய்க் கூடி விட்டனர். காலைச் சபைக்கு விஜயஞ்செய்திருந்ததைவிட ஜமீன்தாரவர்கள் பின்னுஞ் சிறந்த அலங்காரங்களுடன் விஜயமாகித் தமது ஆசனத்தில் வீற்றிருந்தனர். பெண்கள் அக்ராசனர் "புவனமாது' என்பவளும் தன் தோழியர்களுடன் உரியகாலத்தில் வந்து தன் ஆசனத்திலிருந்தனள். சபை ஆரம்பிக்க இரண்டு நிமிஷமிருக்கும் போது, வாலிபனாகிய குணசுந்தரமும், பாலசந்நியாசியாகிய விஜயனும், சபையினுள் பிரவேசித்தனர். இவர்கள் வருகையாவர்க்கும் மிக விருப்பமாயிருந்ததால் தங்கள் சந்தோஷத்தின் அறிகுறியைக் கரகோஷங்களால் அறிவித்து மகிழ்ந்தனர். அதன் பின்னர் சபைக் காரிய தரிசியால் பிரேரேபிக்க, சபையிலுள்ளோரால் ஆமோதிக்க, புவனமாது அக்கிராசனமேற்றுத் தனது ஆரம்பப்பிரசங்கத்தைச் செய்யத் தொடங்கினள்.

"கண்ணியமுள்ள சீமான்களே! சீமாட்டிகளே! இச்சபை கூடியதின்காரணம் இன்னதெனத் தங்களுக்கு முன்னமே தெரிந்திருக்கலாமென நம்புகின்றேன். இக்கால சந்தர்ப்பத்திற்கும், நாட்டின் அபிவிர்த்திக்கும், இச்சபை அத்யாவசியமென்பது தங்களுக்கும் கருத்தாயிருக்கலாம். பிரமசிருஷ்டியில் ஒன்றேபோன்ற நாம், ஆண் பெண் என்ற வித்தியாசம் தவிர வேறு ஒருவகையிலும் வேறுபாடில்லாத நமக்கு, ஆண்மக்களாகிய புருஷர்கள் சிலர், 'கல்வி,' 'சுதந்தரம்', 'சமத்வம்,' முதலியன கொடுக்கக் கூடாதென மாச்சரியமாகவும், வாய்ப்பறையாகவும் கூறிப் போதாததற்குப் பல சபைகளில் ஆரவாரமாய்ப் பிரசங்கமும் செய்து மகிழ்கின்றனர். இதனால் பெண்கள் கூட்டமாகிய நமது அபிவிர்த்தி குறைவதுடன் பல அனர்த்தங்களுக்கும் நாம் ஆளாகி வருகின்றோம். நாகரீகமுணராத பாழும் புருஷர்களாகிய இவர்

களுக்கு நமது பண்டைக்கால பழக்க வழக்கங்களும், அதனில் சிறப்பெய்திய பூர்வகாலப் பெண்மணிகளின் உயரிய அந்தஸ்தும், அவர்கள் அரியகல்வி, உயர்ந்த ஒழுக்க நலங்களும்; இன்னதென்றுணராமையே தூற்றத்துணிந்ததற்குக் காரணமெனலாம். அது தவறென்பதை—அவர்கள் நன்கறிந்து தெளியும் பொருட்டே சுருக்கமாகச் சில கூறி எனது பிரசங்கத்தை முடித்து விடுகிறேன் என்று முன்னுரைகூறி விஷயத்தைக் கூறத்தொடங்கினள்.

சபையோர்களே !

இலக்கண நூல் வகுத்த "**தொல்காப்பியர்**," தமது தொன்னூலாகிய தொல்காப்பியத்தில் "மரபியலில்" **மாவுமாக்களுமையறிவினவே' 'மக்கடாமே யாறறிவுயிரே'** எனக்கூறுவனவற்றால் மானிடரை மாக்கள், மக்கள் என இருதிறத்தினராகப்பகுத்துக்கூறினர். மக்களெனப்படுவார் ஐம்பொறியுணர்வுமட்டும் பெற்று மனவுணர்ச்சி பெறாதவராயினர் எனவும், மக்களெனப்படுவோர் ஐம்பொறி யுணர்வேயன்றி மனமென்பதோர் அறிவையும் உடையாராயினர் எனவும் கூறுவர். இது மானிடரை அறிவுவேற்றுமைபற்றிப் பகுத்த பகுப்பாகும். இனி அவயவவேற்றுமைபற்றி மானிடர் ஆண்பெண் என இருத்திறத்தினராவர். ஆணியல்பு மிக்க அலி ஆண்பாலெனவும், பெண்ணியல்பு மிக்க பேடி பெண்பாலெனவும்வழங்கப்படும். ஆதலால், அவயவம்பற்றி பகுப்பும்இரண்டேஎனலாம். இவ்வாறே ஒவ்வொரு குறையுடைய ஊமையும், செவிடும், குருடும், முடமும், இவ்விருபகுப்பில் அடங்குதலுங் காண்க. அவயவவேறுபாட்டால் இருபகுப்பினராகிய மானிடரே அறிவுவேற்றுமையால் மாக்களும் மக்களும் உண்டென்பதும், அவ்வாறே பெண்பாலினும் மாக்களும் மக்களும் உண்டென்பதும் அவர்க்கு உடன் பாடாம். இதனால், ஆசிரியர் தொல்காப்பியனார் எவ்வளவு அறிவுண்

மையும் அறிவின்மையும் ஆண்பாலார்க்கு உடன் பட்டாரோ அவ்வளவும், பெண்பாலார்க்கும் உடன்பட்டனராதல் தெளியப்படும். களவியலுள் 'ஒத்தகிழவனும் கிழவியுங் காண்ப' எனவுரைத்து, அத்தலைவற்கும் தலைவிக்குமுள்ள ஒப்புமை வகையினை விரித்தோதுவாராய் மெய்ப்பாட்டியலில் :—

" பிறப்பே குடிமை யாண்மை யாண்டே
யுருவு நிறுத்த காமவாயி
னிறையே யருளே யுணர்வொடு திருவென
முறையுறக் கிளந்த வொப்பினது வகையே "

என்று கூறினாராதலின், ஆண்மக்களுக்கொத்த ஆண்மையும், உணர்வும், பிறவும் பெண்மக்களுக்கும் ஒக்குமென்பதும் உடன்பட்டனராவர். இதனால் ஆண்மையும், அறிவும், ஆண்மக்களுக்குச் சிறந்தனவென்பது ஆசிரியர் கருத்தல்லவென்பதுந் தெள்ளிதிற் உணரப்படும். மற்றுக் களவியலுள் பெருமையு முரனுமாடூஉமேனக் கூறியதென்னெனின்— அவர் பொருளியலுள் :—

" செறிவு நிறைவுஞ் செம்மையுஞ் செப்பு
மறிவு மருமையும் பெண்பா லான "

எனக் கூறினாராதலால், ஆண்பாலினை யுயர்த்திக் கூறும் வகையில், பெண்பாலினைத் தாழ்த்திக் கூறினரென்பது பொருந்தாதாகும். (1) செறிவாவது—அடக்கம் (2) நிறைவாவது—மறைபுலப்படாமல் நிறுத்தும் உள்ளம் (3) செம்மையாவது—மனக் கோட்டமின்மை. (4) செப்பாவது—செய்யத்தருவன கூறுதல். (5) அறிவாவது—நன்மை பயப்பனவும், தீமைபயப்பனவும் அறிதல். (6) அருமையாவது—உள்ளக்கருத்தறிதலருமை என்பர். இவ்வாறு பெருங்குணங்களும் ஆண்பாலார்க்கோதிய பெருமை உரன் என்னுமிரண்டற்குஞ் சிறிதுந் தாழ்ந்தன வாகாமை உய்த்துணர்க. மகளிர்க்கே சிறந்த சில இயற்கை வேற்றுமையினை நன்

றுய்ந்து ஆசிரியர், கிழவோள் பணிவும், கிழவோன் உயர்வும் உடன் பட்டனரல்லது வேறு எவ்வகை அறிவு வேற்றுமையும் உடன் படாமை கண்டு கொள்க. இதுவே தெய்வப் புலமைத் திருவள்ளுவனார்க்கும் கருத்தென்பது அவர், "அறிவறிந்த மக்கட்பேறு" "நன்மக்கட்பேறு" "பேதையார் கேண்மை" பேதையார் சொன்னோற்றல்" "மடவார்ப் பொறை" என்னுமிடங்களில், ஆண் பெண் இருபாலார்க்கும் பொதுப்பட வழங்கிய பெயர்களாலே ஆய்ந்தறியத் தக்கது. 'வகை தெரிவான் கட்டேயுலகு' என்பது முதலாக ஆண்பாலாற் கூறியன வெல்லாம் 'நஞ் சுண்டான்சாம்' என்பது போல ஒருபாற்கிளவி ஏனைப்பாற் கண்ணுஞ் சேறற்குரிய என்பது பற்றித் தலைமையாற் கூறி னாராவர்.

இனிக் கல்வியில் பெண் மணிகள் முன்னிருந்த பெருமை யினைப்பற்றிச் சிறிது கவனிப்பாம்:—நன்னெறி பற்றியொ ழுகிய பண்டைத் தமிழ்மக்களெல்லாம் ஆண்பெண் என்ற இருதிறத்தாரையும் நற்றமிழ்க்கல்வியிலும், அற்றமிழறிவி லும், குற்றமில்லாத வொழுக்கத்திலும் வேற்றுமை யின்றிப் பயில்வித்தனராவர். இத்தகைய பயிற்சி நம்மில் சிறவாதொ ழிந்திருப்பின், நமது நாட்டில் பேரிசை பெற்று வருணபேத மின்றி ஒரு தாய் வயற்றில் பிறந்த மக்கள் போல் ஒற்றுமை யுடன் நடந்த முச்சங்கங்களிலும், அரசர் பெருஞ் சபைகளி லும் உத்தமக் கல்வி வித்தகர் போற்றும் நல்லிசைப் புலமை மெல்லியலார்கள் பல்லோரைநாம்பெற்றுபெருமையடைந்து உய்வதெங்ஙனம்? பெண்டிரெல்லாம் அறிவு நிரம்பிப் பெரும் பெயர் சிறந்தது தமிழ் வளஞ்சிறந்த நமது இந்திய நாட்டில் பண்டே விளங்கிய பழைமை யென்பது மறுக்கமுடியாத விஷயம். இதற்குச் சான்றாக நமது இந்திய மாதரில், தமிழ்ப்புலமையில் பெயர் சிறந்து பெரும்புலவர்களாக

விளங்கியவர் "ஆதிமந்தியார்" "வெள்ளிவீதியார்" "ஔவை யார்" "பாரிமகளிர்" "பூதபாண்டியன்தேவியார்" "குற மகள்இளவெயினி" "பேய்மகள்இளவெயினி" "காவற் பெண்டு" "காரைக்காற் பேயம்மையார்" "வில்லி புத்தூர் கோதையார்" "காக்கை பாடினியார்" "ஒக்கூர் மாசாத்தியார்" "வருமுலையாரித்தி" "குன்றியாள்" "நெ டும்பல்லியத்தை" "நன்முல்லையார்" "நக்கண்ணையார்" "வெண்பூதி" "பொன்மணியார்" "மாற்பித்தியார்" "பூங் கண்ணுத்திரையார்" போன்றவர் எவ்வளவு உயர்ந்தனராவர். அம்மட்டோ! அவர்கள் அரசருடன் சமத்வம் பெற்று வேந் தன் அவையை அலங்கரித்து வந்ததை அறியாதார்யாரே? அன்றி, மகளிரால் அக்காலத்தில் பிரபலமாகப் பயிலப்பட்டு வந்த யாழ் முதலான இசைக்கருவிகளை ஆண்மக்களும் பயின் று பயிற்சி பெற்றுச் சிறந்ததும்; பெண்களுக்கே உரியதான சமைத்தலென்னும் மடைப்பள்ளி நூல்களை ஆண்களாலும் பயிலப்பட்டு அவ்வகையிலே மேம்பட்டு விளங்கினரென்பது, "நளனும்," "வீமனும்" சமைத்தலில் வல்லவர் என்பதற் குச் சான்றாக நளபாகமென்றும், வீமபாகமென்றும் கூறும் வழக்கும் நம்முள் உண்மையும்; காண்க. அக்காலத்து இவ் வேற்றுமையில்லாத காரணத்தாலன்றோ? மகளிர்க்கோதிய யாழ் முதலியவற்றில் தேர்ச்சி மிக்க நல்லாடவரும் இத்தமிழ் நாட்டில் இன்றும் பயிலப்பட்டு வருவதும் வழக்கத்திற் கொண்டதாகும். அல்லாமல், நம்மில் ஆண் பெண் என் னும் வேற்றுமையின்றிப் பிறப்பின் இழிவு கருதாது கடை நிலத்தோராயினும் கற்றறிந்தோரைத் தலை நிலத்து வைத்து மகிழ்ந்தது இத்தமிழ் நாடன்றோ? குலத்திலும், பகுப்பி லும், குடியிலும் தொழிலிலும், கொள்கையிலும் பல்வேறு வகைப் பட்டநன்மக்களும் மாறுபாடில்லாது ஒற்றுமையுடன் ஒருமனப்பட்டு அறிவால் மகிழ்ந்தது இவ்விந்திய தேசமல்

லவா ? நன்மக்கள் எங்கே பிறந்தாலுமென் ? என்று அறிவின் பெருமையும், அன்பின் அருமையுமே கருதிப் பெண்களும், பிறப்பில் தாழ்ந்தாரும் உரைத்தருளிய நன்மொழியனைத்தையும் வேதமெனப் போற்றிப் புகழ்ந்து அவரது அன்புருவாய இன்புறு வடிவத்தை ஞாபகார்த்தமாகத்திருக்கோயிலில் வைத்து வழிபட்டுவருவதும் இத்தென் மொழித்தேயமன்றோ ! எக்குடிப் பிறப்பினும் யாவரே யாயினும் அக்குடியிற்கற்றோரை வாவென்றழைத்ததும் இவ்வண்டமிழ் வரைப்பன்றோ ! ஆண்மையில்லை யென்போர் நாணங்கொள்ள எண்டிசை வென்று ! பெண்ணரசாண்டதும், இத்தண்டமிழ தனிநிலமன்றே ? இவையெல்லாம் அறிவுடையார் நன்கு ஆராய்ந்து பார்த்திருப்பின், ஆண் பெண் என்ற இருபாலார்க்கும் அவயவ வேற்றுமையல்லது அறிவுவேற்றுமை சிறிதுமில்லை யென்று தெரிவர். இதனால், ஆண் மக்கள் போலவே, பெண்மக்களும் சமத்துவமாய்க் கல்வி கற்பதற்குரியவரென்பது விளக்கமாய்த் தெளிந்ததன்றோ ?

இனி விவாக விஷயத்தில் ஒரு பெண் தன் இஷ்டப்படி நினைத்து நடத்துவதென்ற வகையைச் சேர்ந்த எந்த ஏற்பாட்டையும், எந்தககாலத்திலும் ஒப்புக்கொள்ள முடியாதெனச்சிலர் விவாதிக்க முன் வருகின்றனர். இந்த விஷயத்தை அப்பழுக்கின்றித் தெள்ளத்தெளிவும் எம்போன்ற பெண்கள் கூட்டாத்தாருணர, ஆடவர் சபையேறி அழுத்திச் சொல்லிவருவதுடன் அச்சேறிய துண்டுப் பிரசுரங்களாலும் தங்கள் கருத்தை வெளியிட்டு வருவதாக முன்னமே கூறினேன். இது எந்தக்காலத்துக்குமா ! இக்கலியுகம் முடியும் வரைக்குமா ? இது கேவலம் துர்த்திரபுத்தியல்லவா ? உலக முடிவுவரை எப்போதுமே ஒரு இளம்பெண் தன் கலியாண காரியத்தில் தன் இஷ்டம் எய்தியபடி நடந்து கொள்ளும் சுதந்தரம் சுத்தமாய்க் கூடாதென்று அவர்கள் கூறுவது

எனக்கு ஒரு பக்கம் வருத்தமும், மறுபக்கம் சிறிப்பும் விளைவிக்கிறது.

நாமென்ன வண்டிக்காலா? வாசப்படிக்கல்லா? அவர்கள் இஷ்டங் கொண்டவரையும் அவர்கள் காலடியே கிடைப்பதற்கு? மனிதர்வர்க்கமன்றோ! நாடுமுழுவதும், நகரமெங்கும் சமத்வஞானத்தை வற்புறுத்துவதாகிய கல்வித்தீ—சுதந்தரத்தீ ஓங்கிக்கொண்டிருக்கையிலேயே, ஒரு கூட்டத்தார், மற்றொரு பிரமாண்டமான கோடிக் கணக்கான மாதர் வர்க்கத்தை எவ்வளவு காலம் வரை தாழ்ந்த நிலையிலேயே அழுத்திவைத்துக் கொண்டிருப்பது சாத்தியமாகும்? இது அடிமை விலங்கு, நரகவாழ்க்கை யென்று பெண்கள் சுதந்தரத்தைப்பற்றிப் பேசிப் பின்னும், வயது வந்த பெண்களின் இஷ்டப்படி தாய் தந்தையரும் பந்துக்களும், மணம் முடித்து வைப்பது மேலான செயலென்பதையும், வயது வாராத, 8, 10, 12, 14 வயதுப் பெண்களுக்கு நடாத்தும் பொம்மைக் கலியாணம் அநாகரிகமும், கெட்டவழக்கமென்பதையும், அதனாலுண்டாகும் பல அனர்த்தங்களையும் தக்க உதாரணமுகத்தால் விளக்கிக் காட்டி விட்டு, மேலும், பால்ய விதவைகளுக்கு மறு விவாகம் செய்விக்க வேண்டுமென்ற அவசியம் அவசரங்களைப்பற்றியும் அவர்கள் ஜீவனாதாரத்திற்குரிய கைத்தொழில்களின் அம்சங்களைப் பற்றியும், இன்னும் அது சம்பந்தமான சில விஷயங்களைப்பற்றியும் மிக அழகாகவும் தெளிவாகவும், உருக்கமாகவும், உற்சாகமாகவும், வற்புறுத்துதலாகவும் பேசி யாவர் மனதும் மிக மகிழும்படி செய்துவிட்டு, இனி அடுத்தாற்போல் புதிய வாலிபர் ஒருவர், "எனது உண்மையும், உற்ற துன்பங்களும்" என்ற விஷயமாக ஒரு உபந்நியாசம் செய்வார். அதனை அமைதியுடனிருந்து கேட்டானந்திக்க வேண்டுமென்று கூறித் தனது ஆசனத்திலமர்ந்தனர்.

# XXIV

## அந்தரங்கம் வெளியானது

"வஞ்சித் தொழுகு மதியிலிகாள் யாவரையும்
வஞ்சித்தோ மென்று மகிழன்மின்—வஞ்சித்த
வெங்கு முளனொருவன் காணுங்கொ லென்றஞ்சி
யங்கங் குலைவ தறிவு"

(நீதி நெறிவிளக்கம்)

இங்ஙனம் அக்கிராசனனாகிய 'புவனமாது' கூறி முடித்ததும் வாலிபனாகிய குணசுந்தரம் தன்னாசனம் விட்டெழுந்து சபைமுழுதும் ஒரு முறை காதளவோடிய தன்னிரு விழிகளால் நாற்புறமும் கவனித்து நோக்கினன். முன்னம் தான் எதிர்பார்த்தபடியே பெரும் பதி ஜமீன் மைனர் 'குழந்தை வேலப்பன்' மாவுத்தம்பதி மிராசுதார் 'முத்து வேலப்பர்,' அவர்மனைவி 'விசாலாட்சியம்மாள்,' சுரோத்திரதார் 'மணவாளப்பிரபு,' அவர் நண்பன் 'வேணுகோபாலன்,' 'தோழி கமலா,' மைனர் அந்தரங்க நண்பர்கள் 'மாதவன்' 'கோவிந்தன்,' 'வரதராஜன்' ஆகிய மூவர், தாதி 'லலிதா' முதலியவர்களும் தவறாது விஜயஞ் செய்திருப்பதைக் கண்டனன். அதற்குத் தன்னுள் மகிழ்ந்து கொண்டு தன் மிருதுவான குரலில் மிகு விநயமாக அரசர் பெருமானே! யான் தெரிவித்துக் கொள்ளுகிறபடி தாங்கள் சிறிய உத்திரவொன்று செய்தருளல் வேண்டும். அது—"எனது

பிரசங்கம் நடந்து முடியும் வரையும் நான் குறிப்பிடுகிற 9 பேர் வழிகள் எக்காரணத்தைக் கொண்டும் இச்சபையை விட்டு வெளியிற் செல்லக் கூடாதெனக் கண்டிப்பாய் உத்திரவு செய்வதுடன், அவர்கள் தவறிவிடாதிருப்பதற்குத் தக்க காவலும் அமைக்கவேண்டும், என்பதே." இங்ஙனம் கூறிவிட்டு அவ்வொன்பதின்மர் இன்னின்னாரென்பதையும் வெளியிட்டனன். அரசனும் அவ்வேண்டுதலின் படியே உத்திரவு செய்து காவலும் அமைத்தனன். இது கேட்ட சபையினரும், அரசரும் அதிசயித்து ஏதோ! விசேஷ ரகசியம் வெளிவரப் போவதாகக் கருதி அதனை வெகு ஆவலுடன் எதிர்பார்த்த வண்ணமாயிருந்தனர். அப்பொழுது அவ்வாலிபன் தான் முதலுள் அறிவித்துக் கொண்டபடி, எனது உண்மையும்; உற்றதுன்பங்களும் என்ற விஷயத்தைப் பற்றிக் கூறத்தொடங்கி "அரசர் பெருமானே! அக்கிராசனாதிபதியவர்களே! அன்பார்ந்த சகோதரிகளே! உங்கட்கு என் அன்பார்ந்த வந்தனம் அனந்தங் கோடியுரித்தனன். குடிகளுக்கு அரசன் தந்தையும், தெய்வமும் போன்றவனென்பது உண்மைநூல்களின் சம்மதம். அவர்களுக்கு நேர்ந்த குறையை அவரிடத்து விண்ணப்பித்துப் பரிகாரம் பெற வேண்டுமென்பது மரபுவழக்கு. அதன்படி எனக்குற்ற துன்பத்தை அரசரிடத்துச் சவிஸ்தாரமாகத் தெரிவித்து நிவர்த்திபெற வேண்டுமென்பது கருதியே நான் இச்சபை முன் தோன்றியதுமாகும். ஆனதால், அரசர் என் வழக்கின் உண்மையுணர்ந்து நீதி செலுத்தி ஆதரிக்க வேண்டுகிறேன்." என்று முகவுரை கூறி மேற் சொல்லத் தொடங்கினன் :—

வேந்தர் வேந்தே!

"நான், தொழுதூண் சுவையினும், உழுதூண் இனிதாகிய, வேளாண்மையை உயர்வாகக் கொண்ட வேளாளர்

மரபில் மாவுத்தம்பதி பெரிய வீட்டு மூத்து வேலப்பருக்குப் புத்திரியாகப் பிறந்தேன். என்பெயர் '**குணசுந்தரம்**' என் உடன் பிறப்பினனாகிய மூத்தவன், "உடன் பிறந்தே கொல்லும் வியாதி" யைப் போன்ற கொடியதுஷ்டன். அவன் பெயர் '**வேணுகோபாலன்**,' எங்கள் தாய் தந்தையர்கட்கு நாங்களிருவருமே செல்வப் புதல்வர்கள். எங்களில் பெண்பாலாகிய நான், என் தந்தையவர்களால் நன்கு கல்வி கற்பிக்கப் பெற்று அதில் மிகத் தேர்ச்சியுற்று போதுமான நல்லொழுக்கமும் பெற்றேன். என்னுடன் சேர்ந்து கல்வி கற்ற என் அத்தை மகன் '**விஜயன்**' என்பவனுடன் நான் இளமைமுதல் மனமொத்துப் பழகிக் கலப்பற்ற அன்பினால் பிணைக்கப்பட்டு ஒருவித வேற்றுமையின்றிச் சிநேகங் கொண்டுவந்தேன். எனக்குத்தக்க பருவம் வர, நான் ருதுவடைந்து கன்னிகா மாடத்து வைக்கப்பட்டேன். அப்போது என் உடன் பிறந்தானாகிய வேணுகோபாலன், குல வொழுக்கந் தவறிய விஷயங்களில் ஈடுபட்டுத் தகாத கூட்டுறவை மேற்கொண்டு குடிப்பதும், கூத்திவைப்பதும், நாடகங் காணச் செல்வதுமாகிய காரியங்களில் முந்திவந்தனன். இவ்விபரங்கள் என் தந்தைக்குத் தெரியாமலே அந்தரங்கத்தில் நடந்து வந்தன. இத்தகைய துற் செலவுகளுக்கு அதிகப் பணம் தேவையானது பற்றி மணவாளப் பிரபுவை வஞ்சித்துப் பணம் பெற்றுச் செலவழிக்க நினைந்து என் அநுமதி யில்லாமலும், தந்தைக்குத் தெரியாமலும், மானஹீனமென்று கருதாமலும், தன்னிஷ்டப்படி, சிறிதும் நாணமின்றி என்னை அவருக்கு விவாகம் செய்து தருவதாகப் பொய்புகன்று உறுதி வாக்களித்தனன். உலகநடையுணராத அப்பிரபு, அவ்வார்த்தை உண்மையெனக் கொண்டு நம்பிக்கைவைத்து அவன் விரும்பிய போதெல்லாம் வேண்டிய பணம் தாராளமாய்க் கொடுத்து வந்தனர். பொய் எத்தனை

நாளைக்கு வெற்றிபெறும், பணம் எத்தனை நாளைக்குச் சலியாது கொடுப்பர். நெருக்கிப் பிடித்து விவாக விஷயத்தை முடித்துத் தரும்படி மெத்த வற்புறுத்த, அதற்கு வேணு கோபாலன் 'பெருவிலை மதிப்பில் கல்லிழைத்த மாங்காமாலையும், உயர்ந்த காசிப் பீதாம்பரப் புடவையும் கொண்டு வந்தால் என் தங்கையிடத்திலே தானே நேரில் சொல்லிச் சம்மதிபெறச் செய்விக்கிறேன்,' என்றனன். பேதைமையும், ஆலோசனையுமற்ற மணவாளர், ஆவல் மிகுதியால் அதன்படியே தயார் செய்து அவைகளுடன் வேணுகோபாலனையும் அழைத்துக் கொண்டு எங்களது பூங்காவனத்தில் எனது தோழியுடன் நான் தனித்திருக்கும் சமயத்தில் அங்குவந்தனர். அங்ஙனம் வந்த அவர்கள் வருகைக்கும், அறியாமைச் செயலுக்கும் பொருத நான் சீறிச்சினக்க, அவர்கள் ஏதும் பேச வகையற்றவர்களாய் வந்த வழியே திரும்பிச் சென்றனர். என் தமையனின் அக்கிரமமான இத்துணிகரச் செயலுக்கு நான் மிக வருந்தி என் தந்தையிடத்துக் கூறி விசாரிக்கச் செய்யவேண்டுமென நினைந்து பூங்காவை விட்டுத் தோழியுடன் வீட்டுக்கு வந்து நான் வழக்கமாயிருக்கும் அறையின் ஜன்னலருகில் உட்கார்ந்து கொண்டிருந்தேன். அப்பொழுது யாருடைய தூண்டுதலினாலோ, என்னை அவமானப் படுத்தவும், வஞ்சிக்கவும் நினைந்த துஷ்டர்கள் மாதவன் என்பவனைத் தூதாக விட, அவன் என்னருகே வந்து 'அம்மா! தங்கள் பிரிய நாயகர் விஜயன் மார்பின் மீது மோட்டார் வண்டியேறி மரணத்தருவாயிலிருக்கிறார். தங்களை வந்து காப்பாற்றச் சொன்னார்.' என்று கூற, நான் அதனை வஞ்சம் என்று கருதாது நிஜமென நம்பி, உண்மையிலேயே விஜயன் மீதுள்ள அன்பின் மிகுதியினால், வெகு ஆத்திரத்துடன் என் தனிமையையுங் கருதாது வீட்டைவிட்டு அவ்வபாயஸ்தலத்திற்குச் சென்

றேன். அங்ஙனம் சென்ற என்னை மைனரும், அவரது ஆட்களும் சூழ்ந்து நான் சத்தமிடாதவாறு என்வாயில் ஒருபந்து வைத்தடைத்துத் துராக்கிருதமாய்த் தூக்கி, அதற்கெனக் கொண்டுவந்திருந்த வேகமாய்ச் செல்லக் கூடிய மோட்டார் வண்டியில் வைத்துக் கொண்டு தனது ஊராகிய பெரும்பதிக்குவந்து அங்குள்ள 'வன்னியபூபதி' சத்திரத்தின் தனியறையொன்றில் இறக்கினர். நான் பயத்தால் மதிமயங்கிப் பிராண மூர்ச்சையாய்க்கிடந்த படியால், இன்னவிடத்திலிருக்கிறே னென்ற நினைவின்றி யிருந்தேன். அது கண்ட அவர்கள் என்னை மூர்ச்சை தெளிவிப்பதற்கு வேண்டிய சைத்யோபசாரங்கள் செய்ய அதனால் நான் மூர்ச்சை தெளிந்து கண்விழித்தேன். அப்பொழுது என்னெதிரில் நான் முன்பார்த்திராத மூன்று துஷ்டர்களும், மைனரும் இருக்கக்கண்டேன். பொருத நான் மிக வெகுண்டு அவர்களைக் கோபக்குறிப்புடன் உறுத்துநோக்கிக் கடுமையான சிலவார்த்தைகள் கூற, அவர்களஞ்சி என்னை விட்டுச் சற்று விலகி தங்களுள் மெதுவாக ஏதேதோ பேசிப் 'பார்வதி' யென்னும் பணிப் பெண்ணொருத்தியை என்னருகிலிருத்திப் பார்த்துக் கொள்ளும்படியும், மறுநாள் காலையில் வந்து பேசிக்கொள்ளுவதாகவும் பயமுறுத்திச் சென்றனர். அவர்கள் சென்றபின் மிக்கபரிவுடனும், ஆதரவுடனும், பார்வதி என்னை உபசரிக்க, அதனால் நான் ஒருவாறு அன்னமுட் கொண்டு உயிர்பிழைத்திருந்தேன். காலையில்யாரும் வரவில்லை. மாலை 7 மணிக்கெல்லாம் தன் தோழி, யொருத்தியுடன் தாசி 'லலிதா' என்பவள் வந்து என்னையடுத்து துஷ்டர்கள் துடுக்குத்தன்மையையும் மைனர் அயோக்கிய செயலையும், அவர்கள் செய்ய நினைந்திருக்கும் தீயகாரியத்தையும் விவரப்பட எடுத்துச் சொல்லி, 'தாங்கள் இவ்வாபத்தினின்று நீங்கி மானத்தோடு உயிர் பிழைத்து

வாழவேண்டு மென்றிருந்தால் நான் கூறுகிறபடி கேட்டு நடவுங்கள் என்றனள். நான் அஃதென்னை? அவள்—“தாங்கள் உடுத்திக்கொண்டிருக்கிற புடவையை அவிழ்த்து என்னிடங் கொடுத்து விட்டு எனது புடவையைத் தாங்கள் உடுத்திக்கொண்டு என் தோழியுடன் புறக்கடைவழியாகச் செல்வீர்களானால், அங்கொரு வண்டிநிற்கும். அதிலேறிக் கொண்டால் அது தங்கள் ஊரருகே சென்று நிற்கும். தாங்கள் இறங்கித் தங்கள் இச்சைவழி செல்லலாம். இதோ வழிச் செலவுக்கு இந்த நூறு ரூபாநோட்டையும் வைத்துக்கொள்ளுங்கள்,” என்று கூறினள். அச்சமயத்திற்கு அவ்வார்த்தைகள் மெத்த சகாயமாயும், பெருந்தயையாகவுமிருந்ததினால் நான் அப்படியே நடப்பதாக உடன்பட்டேன். தோழி வழிகாட்டினள். அதன்படி சென்று நின்ற வண்டியிலேறிக் கொண்டேன். அப்பொழுது உடன் வந்த தோழி இவ்வாறுடையும் தந்தனள். அதனையும் பெற்றுக்கொண்டதும் வண்டி வேகமாய் நடந்து மாவுத்தம்பதிக்கருகில் வந்து நின்று என்னை இறக்கிவிட்டுத் திரும்பிச் சென்றது. நான் ஒன்றுந் தோன்றாதவளாய் பயத்தால் அசைவின்றி அப்படியே சிறிது நேரமிருந்து பின் ஒருவாறு தெளிந்து பலவாறுலோசித்து முடிவில், இந்தஸ்திதியுடன் நேரே ஊருக்குச் செல்வது பழிப்புக்கிடமாகும், நல்லகாலம் வரும்வரையும் எங்கேனும் மறைந்திருப்பதே நலம் என்று தீர்மானித்துக்கொண்டு அன்றிரவெல்லாம் என் ஜன்மத்திலும் தனித்திராத நான் அம்மையிருளில் பேயொப்பத் தனித்திருந்து விடிய நாலு நாழிகை யளவில் தாசிபுதல்விய ஆணுடையை இதுவும் ஒரு நன்மைக் கென்றெண்ணி அணிந்து கொண்டு ஒருஆடவனைப் போல் கால்நடையாக நன்றாகப் பொழுது புலர்வதற்குமுன் “**உயர்குன்றம்**” சேர்ந்து பின், அங்கிருந்து செல்லும் தபால வண்டியிலேறி அன்றிரவு கொழுமம் சேர்ந்து' **தங்கவேல்**

**முதலியார் சத்திரத்தில்** ஒருகிழவியினுதவியால் தனியறையொன்றை ஏற்படுத்திக் கொண்டு அதினில் தங்கியிருந்தேன். இதனிடையில் அங்குவந்த மாவுத்தம்பதிக் கிழவி யொருத்தியால் எனது பெற்றோர்களுடையவும், சுற்றத்தார்முதலியவர்களுடையவும், விஜயனுடையவும் க்ஷேமலாபங்களைப் பற்றித் தெரிந்து கொண்டு என் விமோசன காலத்தை எதிர் பார்த்தவண்ணமாயிருந்து வருகையில், இவ்வருஷத்தில் தங்களால் நடத்தப் போகிற தசரா விமரிசையைக் கேள்விப் பட்டு அதுகாரணமாக இங்கு வந்தால், யாவரையும் அவசியம் சந்திக்கக்கூடும், எனக்குற்ற இவ்வநியாயத்திற்கும் ஒரு நிவர்த்தி பெறலாம், என்று நிச்சயித்துக் கொண்டு அச்சத்திரத்தை விட்டு நீங்கி வந்துகொண்டிருந்தேன். அங்ஙனம் வரும்வழியில் **சிறுமங்கலம்** சத்திரத்தில், 'வேணுகோபால' னென்னும் தீயனால் கூறப்பட்ட பொய்ச்சாட்சியத்தின் நிமித்தம்பெண்களவு செய்தானென்னும் குற்றத்திற்குச் சிறைப்பட்டவிஜயன், சிறையினின்றும் எவ்வாறோ தவறிப் பிறருணரமுடியாதவாறு சடைமுடிவளர்த்துத் துறவுக் கோலம் பூண்டு **'பால்ய சந்நியாசி'** என்னும் பெயருடன் மறைந்திருப்பதாகத் தெரிந்து அவன்நடை, குணம், குறி, செயல்களால் ஒருவாறறிந்து என் உண்மையை உணர்த்தாமலே அவனையும் தசராக்காண வருமாறு மிகவேண்டி உடனழைத்து வந்தேன். இதோ! அச்சந்நியாசி கோலத்துடன் என்னருகில் வீற்றிருப்பவன் அவ்விஜயனே. இதுவே எனது விருத்தாந்தம்." இதோ என் நிஜவடிவத்தையும்பாருங்கள்" என்று அச்சபையிலிருந்தபடியே அவ்வாணுடையைக் களைந்துவிட்டுத் தனக்குரியபெண்கோலத்துடன் நின்றனள். இங்ஙனம் குணசுந்தரம் திடும்பிரவேசமாய் ஆண்கோலத்தினின்றும் பெண் கோலமாய் மாறியதற்கு, ஆகாயத்தினின்றதொருமின்னற்கொடி தெய்வ உருப்பெற்று நல்லெழில் விளங்க ஒரு பெண் ரூப

மாய்த்தோன்றியதோவென அரசரும் அவையினரும் அதிசயிப்பட்டனர். அதுவரையும் ஐயத்தின் பாற்பட்டுப் பொறுமையுடன் விஷயத்தைக் கவனித்துக் கொண்டிருந்த முத்துவேலப்பரும், அவர் மனைவி விசாலாட்சியம்மாளும் குணசுந்தரத்தின் நிஜவடிவத்தைக் கண்டதும் தாளாதவர்களாய்ச் சட்டெனத் தங்களிருக்கையினின்றெழுந்து குணசுந்தரம் நிற்குமிடத்தை விரைவாகச் சென்றடைந்து அவர்களிருவரும் அவளைக்கட்டித்தழுவிக்கொண்டு "ஆ! எங்கள் கண்மணீ! ஆ! எங்கள் அருஞ்செல்வமே! ஆ! எங்கள் பிள்ளைக் கலி தீர்க்க வந்த பெண்கள் நாயகமே! கட்டிக் கரும்பே! முக்கனியே! சர்க்கரையே! என்று பற்பலவாறு பரிந்துரைகூறி. நீ கூறியவந்தனைத்தும் உண்மையா? உனக்கா அத்தகைய துன்பங்கள் நேர்ந்தன? அங்ஙனமாயின் நாங்கள் மெத்த பாவிகளே" என ஓவெனக் கதறிப் புலம்பத் தொடங்கினர். அவர்களுடன் மற்றும் அவர்கள் நெருங்கிய சுற்றத்தாரும், தோழி கமலாவும் சேர்ந்து அழ ஆரம்பித்தனர். இங்ஙனம் தன்பெற்றோர்களும், சுற்றத்தாரும், பந்துக்களும் தோழி கமலாவும் சூழவிருந்து தன் பிரிவின் காரணமாகப்பரிந்தழுவதற்குப் பொறாது தானும் அவர்களுடன் சேர்ந்து துக்கிக்கத் தொடங்கினள். என்னதான் கல்வி கற்றும், பொறுமை சிறந்தும், நாகரீகமடைந்தும், விவகாரஞானம் பெற்றிருப்பினும் பெண்மனந்தானே. பேதைமையின் பாற்படா தொழியுமோ? மேலும் இளகியமனம் பிறர் அழுகை கண்டு தாளுமோ! குணசுந்தரம் நாணமின்றிச் சபையில் அழுதது அவள் குற்றமல்ல. சுற்றத்தாரும், பெற்றோர்களும், பந்துக்களும், தானும் சேர்ந்து ஏகமாய் ஓரே அழுகை செய்ததினால் சபை முழுதும் பேரொலி பெருகியிருந்தது. ஒவ்வொருவராய்த் தங்கள் தங்கள் துக்கத்தைச் சமாதானப் படுத்திக் கொள்ள அரவமும் அடங்கிற்று. அத்தருணத்தில் முத்துவேலப்பர்

"என் னருங்குமாரத்தி குணசுந்தரத்திற்கு அநியாயமாய்த் என் குமாரனுல் விளைந்த பழிக்கும், அவன் தீய நடத்தைக் கும் அக்கொடியனை இச்சபையிலேயே கொன்றெழித்து விடுகிறேன்: மைனருக்கு என் குமாரத்தியைத் துராக்கிரு தமாய்த் தூக்கிச் செல்லுதற்கு அவ்வளவு ஆண்மையும், துணிவும் வந்து விட்டதா? அவைகளை இப்பொழுதே ஒரு கைபார்த்து விடுகிறேன்" என்றும் வீரவாதம் பேசி அவர் களை துன்புறுத்தத் துணிந்தனர். அது கண்ட குணசுந்தரம், தந்தையைத் தடுத்து "அப்பா! தாங்களென்ன இவ்வளவு ஆத்திரப்படுகிறீர்கள்? சற்று பொறுங்கள். எல்லாவற்றை யும் ஒழுங்காய் விசாரித்துக் குற்றவாளிகளைத் தக்கபடி தண்டிப்பதற்கு அரசர் காத்துக்கொண்டிருக்கிறார். தாங் களேன் முந்தவேண்டும்? ஆக்கப் பொறுத்தவர் ஆறப் பொறுக்கலாகாதா?" என்று விநயமாய் வேண்டிக் கொள்ள, அவரும் சரியெனச் சினந்தணிந்தனர். அதன் பின்னர், குணசுந்தரம் தன் தாய் தந்தையர்களை நோக்கி, "என்னைப் பெற்றோர்களே! இன்று காலையில் தாங்கள் என்னைச் சந்தித் துத் தழுவிக்கொண்டதாகக்கனவுகண்டேன். அக்கனவு இப் பொழுது மெய்யாய் முடிந்தது". என்று கூறி அவர்கள் இணையடிகளில் வீழ்ந்து வணங்கி "என்பால் ஏது பிழை யிருப்பினும் மன்னித்தருள வேண்டு" மென்றிறைஞ்சி அவர் கள் பக்கஞ் சேர்ந்து நின்றனள் அங்ஙனம் செய்த அவள் விநயத் திற்குத் தாங்கள் நீண்டநாள் அவளைப் பிரிந்திருந்து இத்தகைய சிறந்தவைபவத்தினிடையில் கண்டதற்கும், அவர் களடைந்த பேரானந்தம் எல்லையற்றதெனச் சொல்லவும் வேண்டுமோ? ஜமீன்தாரும் அவ்வதிசயத்திற்கு அகமிக மகிழ்ந்து அவர்களைத் தக்கவாறுபசரித்துத் தம் அன்பைத் தெரிவித்தனர். இவ்விளைவெல்லாங் கண்ட சபையினர் பற் பலவாறு புகழ்ச்சி மொழிகூறி குணசுந்தரத்தின் அருமை

பெருமைகளைக் கொண்டாடினர். அப்பொழுது அரசர், சபையோர்களைப் பார்த்து "இன்று இரவு எட்டு மணிக்கு மேலாய் விட்டதினால் மற்றவர்களை விசாரிப்பதற்குச் சாவகாசமில்லை. ஆனதினால், விசாரணையை நாளைக்கு வைத்துக் கொண்டு ஒருமுடிவு செய்வோம். நாளைக் காலை பத்து மணிக்கு இன்று வந்தவர்களெல்லாம் தவறாது வரவேண்டும்" என்று அவர்களுக்குச் சொல்லி அனுப்பிவிட்டு, மைனர், வேணுகோபாலன், மாதவன் முதலிய துஷ்டர்கள், ஆகியவர்களைப் பந்தோபஸ்தில் வைத்துத் தக்கபடி காவல் காக்குமாறு தமது உத்தியோகஸ்தர்களுக்கு உத்தரவுசெய்து, முத்துவேலப்பர் முதலியவர்களுடன் குணசுந்தரம் விஜயர்களை அவர்களுக் கெனத் தயாரிக்கப்பட்ட விடுதியிலிருக்கும் படி அனுப்பிவிட்டுத் தாம் தமது பரிசனங்களுடன் அரண்மனை நாடிச்சென்றனர்.

## XXV

## விசாரணையும் தீர்ப்பும்

"முறைசெய்து காப்பாற்று மன்னவன் மக்கட்
கிறையென்று வைக்கப் படும்."

(திருக்குறள்)

புரவிபாளையம் அரசரால் விடைதரப்பெற்று தங்களுக்கென விடப்பட்ட தனி விடுதியில் முத்துவேலப்பர், அவர் மனைவி விசாலாட்சியம்மாள், குணசுந்தரம், விஜயன், மற்றும் சுற்றத்தார்களும், தோழி கமலாவும் ஒரு சேரக்கூடி சூழவிருந்து அளவளாவி அன்னமருந்தி அகமிகமகிழ்ந்தனர். அதன்பின், முத்துவேலப்பர் முதலனைவரும் "குணசுந்தரத்தைப் பிரிந்ததிலிருந்து தாங்கள் அதுவரையும் அடைந்த துக்கங்கள், அதுபற்றிய சம்பவங்கள், முதலியவைகளை ஒன்றும் விடாமல் சவிஸ்தாரமாகச் சொல்லினர். குணசுந்தரம் அவைகளையெல்லாம் கவனமாகக்கேட்டு அழுவதற்கழுது, இரங்குவதற்கிரங்கி, ஏங்குவதற்கேங்கிச் சிரிப்பதற்குச் சிரித்து, மகிழ்வதற்கு மகிழ்ந்தனள். அன்றிரவு நெடுநேரம் வரையும் யாரும் தூங்காமல் அதே பிரஸ்தாபத்தை மாறிமாறி ஓய்வின்றிப் பேசி ஓய்ந்தனர். தங்கள் மனதில் அடைப் பட்டுக்கிடந்த துக்கத்தை யெல்லாம் தொலைத்தொழித்தனர். ஒருவன் அடைந்த துக்கங்கள் யாவும்

அவர்கள் குற்றத்தாரைப் பார்த்த மாத்திரத்தில் விலகிவிடு மென்பது ஆன்றோர் கருத்து. அது :—

"அசா அத்தா னுற்ற வருத்த முசாத்தான்
கேளிரைக் காணக் கெடும்"

என்னும் செய்யுளால் உணரலாகும். இறுதியாக முத்து வேலப்பர் தன் துஷ்ட குமாரன் வேணுகோபாலன் பொய் வார்த்தையை நம்பித் தான், அறிவுள்ள விஜயனை அநியாய மாகச் சிறை செய்வித்ததற்கு மெத்த வருந்துவதாகவும், இரங்குவதாகவும் விஜயனிடத்துக் கூறினர். அதற்கவன் பிரதியுத்தரமாக "எனதுஊழ்வினை அவ்வாறிருப்பின் தாங்க ளென்செய்வீர்கள் ? வினையூட்டாது கழியாதன்றோ !

'ஊழிற் பெருவலி யாவுள மற்றொன்று
சூழினுந் தான்முந் துறும்'———என்பதும்

உண்மையல்லவா !" என்றனன். இங்ஙனம் கூறிய அவனது அறிவுடைமைக்கும், விநயத்திற்கும் முத்துவேலப்பர் மிக மகிழ்ந்தனர். குணசுந்தரம் தன் தந்தை காட்டிய பரிவுக் கும், விஜயன் கூறிய மறுமொழிக்கும் வியந்தனள். அப் பொழுது அங்கிருந்த கடியாரம் கணீர் கணீரென மணி மூன்றடித்தது. அதுவரையும் அவர்களை விட்டு ஒவத் திருந்த நித்திராதேவி இனிவிடேனென்று கூறுவது போல் அவர் கண் இமைகளில் வந்து குதிகொள்ள அனைவரும் அவரவர்கள் இருக்கைகளிலிருந்தபடி அங்ஙனே சயனித்து விட்டனர். இனி இவர்களை இங்கு விட்டுச் சிறையிலுள்ள மைனர் முதலானவர்களின் மனோநிலைமைகளைப் பற்றிக் கவனிப்போம் :—

மைனர் :— நமக்குள குணசுந்தரம் நம்மால் கைவிடப் பட்ட விஷயம் பிறர் உணரமுடியாத பரமரகசியமாக விருக்குமென்றல்லவோ நினைத்திருந்தோம். அங்கினைப்புத் தவறாய்ப் பலரும் அறியச்சபை யேறிவிட்டதல்லவா ? அவ்

வகையில் அவ்வளவு சிரமப்பட்டும் நாம் குணசுந்தரத்தோடு மருவிச் சுகித்து மகிழ்ந்தோமா? அதற்கும் தாசி லலிதா பிரதி கூலியாயிருந்து நம்மை ஏமாற்றிவிட்டனள். அப்பொழுது நாம் அந்தரங்கத்தில் அவமானப்பட்டோம். இப்பொழுது அம்பலத்தில் அவமானப்படுகிறோம். அம்மட்டோ! நமது துஷ்ட சேர்க்கையும், கெட்ட நடவடிக்கைகளும் வெளிவருவதற்காயின. இனி நமது மதியும், கண்ணியமும், பெருமையும் ஜமீன் அந்தஸ்தும் என்னாகும்? அனைத்தும் கெட்டொழிந்தனவே, போதாவற்றிற்குப் பெரியவீட்டு மூத்துவேலப்பர் பெரிய வருத்தத்தையும் வீணே தேடிக்கொண்டோம்? அல்லாமலும் புரவிபாளையம் ஜமீன்தாரவர்கள் நம்மீது வைத்திருந்த உள்ளன்பையும், நன்மதிப்பையும் அநியாயமாய் இழந்ததுமன்றி அவர் கோபத்திற்கும் பாத்திரமாகிக் குற்றவாளியாகச் சிறைப்படவுமன்றோ வாய்த்தது. ஜமீன்தாரவர்கள் நடுநிலைமை தவறித் தீச்செயல்கள் செய்பவர் யாராயிருப்பினும் கண்டிதமாய்த் தண்டிப்பதில் தவறாரென்பதை நாம் முன்னமேயே அறிந்திருக்கிறோமே! ஆனதால், நாம் தப்புவதெங்கனம்? இவ்வளவிற்கும் நமது கருவமும், தற்பெருமையும், துஷ்டர் கூட்டுறவுமன்றோ காரணம்? அப்பொழுதே எமது தந்தையின் விருத்த நண்பர்கள் நமது நன்மையைக்கருதிக்கூறிய இதமொழிகளைக்கேளாது அவர்களை அவமதித்துச் சிந்து பழிப்புரை கூறி வெளியில் அனுப்பினோமே; அப்போதவர்கள் மனம் வருந்தி "இதன் பலனைச் சிறிது நாளில் காண்பாய்," என்று கூறிச் சென்றது வீணுகாமல்—

"எரியாற் சுடப்படினு முய்வுண்டா முய்யார்
பெரியார்ப் பிழைத் தொழுகுவார்."

என்பதும் மெய்யாய் முடிந்ததே. பலபேசியென்ன? 'மானமழிந்தபின் வாழாமை முன்னினிது' ஆனதால், நமது

உயிரை மாய்த்துக்கொள்வதுதான் சிறந்தது என்று தீர்மானித்துக்கொண்டு துக்கத்தினால் மனமாழ்கத் தலைநாணிச் சமயத்தை எதிர்பார்த்திருந்தனன்.

**வேணுகோபாலன்** :—மடைப் பள்ளியின் அடுக்களையிலிருந்து சமைத்துப் புருஷர்களுக்குப் படைத்து அவர்கள் சுக துக்கங்களைக் கவனிப்பதை விட வேறு எவ்வகைக்குயோக்யதையற்ற ஒரு பெண் சபையேறிச் சிறிதும் நாணமின்றித் தான் விஜயன் மீதே காதல் கொண்டிருப்பதாகக் கூறிய துணிகரத்திற்கு நான் மெத்த வருந்துகிறேன். அத்துடன் தன்னைத் தமையன் என்ற மரியாதை ஒரு சிறிது மின்றிக் கூத்திக்கள்வன், குடியன், கூட்டிக்கொடுக்கும் குலாமத் தொழிலுடையான் என்று இழிவான வார்த்தைகளாலும் ஏசினளன்றோ? என்னே! இவளது தைரியம். நான் லட்சாதிகாரியும், பெரிய மிராசுதார் பெரிய வீட்டு முத்து வேலப்பரின் முதல் குமாரனென்றும் எண்ணிப் பார்த்தனளா? மணவாளப்பிரபுவும், மற்றவர்களு மிருந்ததினால் பாதகமில்லை. கேவலம் தரித்திரனும், நிர்கதியவனும், எனது விரோதியுமாகிய விஜயத்தின் முன்னர் பரிகசித்ததுதான் எனக்குப் பெரிய துக்கமும் அவமானமாகவு மிருக்கிறது. அவன் வெளிவராவகை தக்க காரணங்காட்டி சிறையிலடைத்திருந்தும் எவ்வாறோ தப்பி இதுவரையும் பிழைத்திருந்து இச்சபை முன்னும் ஏகாந்தஸ்தானத்திற்கு வந்து விட்டான். குணசுந்தரமும் மணவாளப் பிரபுவை மணப்பதாகத் தோன்றவில்லை. எனது துஷ்டச் செயல்களனைத்தும் எனது தந்தைக்குத் தெரியநேர்ந்தது. இனி என்னை அவர் புத்திரனாகக் கொள்ளுகின்றாரோ! இல்லையோ? நான் நினைத்த காரியம் அனைத்தும் எனக்கு நேர் எதிர் மறையாய் முடிந்தது. போதாக் குறைக்குக் குற்றவாளியாய்ச் சிறைப்படவும் வாய்த்தது. நானினி மீள்வதெங்ஙனம்? எனக்கு இத்தீங்குற்றது! உடன் பிறந்த சகோதரிக்குத் தீங்

கிழைக்க நினைத்த பாதகமே காரணமாகும். பல நினைத்தாவ தென்ன? நான் புத்தியுள்ளவனும், இக்குற்றத்தினின்று நீங்க வேண்டுமென்ற நினைவும் உள்ளவனுயிருந்தால் அடியில் வருமாறு செய்தால் நிவர்த்தி பெறலாம் அது :—"சாட்சிக்காரன் கால்களில் விழுவதினும் சண்டைக்காரன் கால்களில் விழுவது மேலென்பதற்கேற்ப என் தங்கையை அடுத்து எனது அறியாமையினுல் செய்த எனது பிழைகளை மன்னித்தல் வேண்டுமென்று வேண்டினுல்பெருந்தன்மையும், பரிவுறு குணமுமுடைய என்சகோதரி மனமிரங்கி மன்னிப்பள்" அதுதான் சரியென்று ஒருவாறுதீர்மானித்துக் கொண்டு சூரியன் வரவை எதிர்பார்த்துக் கொண்டிருந்தான்.

மூன்று துஷ்டர்கள் :—சணப்பன் வீட்டிக் கோழி தானே விலங்கில் மாட்டிக் கொண்டது போல் நமக்கு நாமே தீங்கு தேடிக்கொண்டோம். ரூபா 100 ரொக்கமும், அதற்குமேல் தீனிவகைருக்களில் ரூபா 25-ம் தாசி லலிதாவின் தாயாருக்குக் கொடுத்ததிற்கு அவள் நன்றி மறந்து நமக்கு இத் தீங்கைச் செய்தாள்.

"—பாங்கறியாப்
புல்லறி வாளர்க்குச் செய்த வுபகாரம்
கல்லின்மே லிட்ட கலம்"

என்பது பொய்யா வாசகமன்றே ?

அதுபற்றி நாம் இப்பொழுது சிந்தித்தாவதென்ன ? நமது துஷ்ட செயல்களுக்கு அப்பொழுதே விலா வெலும்பு நொருங்கவும், இடுப்பொடிபடவும் நல்ல அடிகிடைத்ததே, அது போதாதென்றே ? இவ்வல்லிடி வழக்கும் வாய்த்தது. இக்குற்றத்தில் நாம் தப்புவதென்னமோ கண்டிப்பாயில்லை. நமக்கு விதிக்கப்படுவது ஜன்மத்தீர்ப்போ ! தூக்குத்தண்டனையோ ! விளங்கவில்லை. அநியாயமும், அக்கிரமச் செயல்களும் துணிந்து செய்வோர்களுக்கெல்லாம் முடிவில் எவ்வகையி

லும் ஆபத்து வந்தேதீரும். "அரசன் அன்று கொல்வான் தெய்வம் நின்று கொல்லும்" என்பது என்றும் பொய்யாவதில்லை. என்று சிந்தித்துக்கொண்டிருந்தனர். இதற்குள் காலைக்கோழி "குக்குரக்கூ" வெனக்கூவிற்று. அடிவானம் வெளுத்தது. சற்று நேரத்திற்குள் பொழுது நன்றாய்ப் புலர, யாவரும் நித்திரைவிட்டெழுந்து தங்கள் தங்கள் காலைக்கடன்களை விரைவாக முடித்துக்கொண்டிருந்தனர். சரியாய்க் காலை மணி பத்தடித்ததும் அரசசபையில் ஜனங்கள் கூடத்தொடங்கினர். நேற்று வராதிருந்தாரனைவரும் இன்று தவறாது வந்தனர். சபைமுழுதும் ஜனங்கள் நிரம்பியிருந்தனர். அரசரும் தமது அங்கங்களுடன் வந்து தமது நீதியாசனத்தமர்ந்தனர். குற்றவாளிகளும் கொண்டுவந்து நிறுத்தப்பட்டனர்.

அப்பொழுது அரசர் வேணுகோபாலனை முதல் குற்றவாளியாகக் கருதி அவனை நோக்கி, உமது விஷயத்தில் ஏற்பட்டுள்ள குற்றங்களுக்கு நீர் என்ன சொல்லுகிறீர்! எதிர்வாதம் ஏதேனுமிருந்தால் சொல்லிக்கொள்ளலாம் என்றனர். அப்பொழுது வேணுகோபாலன் அரசரை வணங்கி "அரசர் பெருமானே! நான் சொல்லுவதென்னவிருக்கிறது? எனது அறியாமையினாலும், துஷ்டர்சேர்க்கையினாலும் மதிகெட்டுத் தகாத காரியத்திலிறங்க, அதனால் பழிப்புக்கிடமாகிய இவ்விதத்தீமைகளை என் உடன்பிறந்த அருமைச் சகோதரிக்கு இழைக்கத் துணிந்தேன். அது என் மடமையேயாகும். ஆனால் அது என் மனமறிந்து செய்த குற்றமன்று. பேதைமையால் நேர்ந்த பிழையானதால், என்னைத் தாங்களும் எனது சகோதரியும் மிக மன்னிக்கும்படி கேட்டுக்கொள்ளுகிறேன். இதனைவிட நான் சொல்லிக்கொள்ளக் கூடியதொன்றுமேயில்லை", என்று கூறித் தலைவணங்கி நின்றனன்.

இரண்டாவது குற்றவாளியாகக் கொண்டுவரப்பட்ட

பெரும்பதி ஜமீன்மனரைப்பார்த்து அரசர் "ஐயா, உம்மை என்முன் ஒருசாமானியக் குற்றவாளியாகக் கொண்டுவந்து நிறுத்தப்பட்டிருப்பதற்கு மெத்த விசனிக்கிறேன். நீர் குடிகளை நீதிப்படி ஆளக்கூடிய அதிகாரியாய் ஒரு சிறு பகுதிக்கு ஜமீன்தாராயிருந்தும் உமது நடத்தை அருவருக்கத் தக்கதாகக் காண்கிறது. நீர் பெருங்குடியில் பிறந்தும் அதற்குரிய பெருங்குணமின்றி இழிந்தது விதியின் பிழை போலும். ஒரு அதிகாரியானவன், தன் தர்மத்திலிருந்து பாவங்களை நீக்கி வலிமையினால் தவறாத மனமுடையவனாயிருத்தல் வேண்டும். அத்துடன் பாவபுண்ணியங்களையும், நன்மைதீமைகளையும் பகுத்தறியும் சக்தியையும் உடைமையாகக் கொண்டிருத்தல் அவசியம். குதிரையை நிலமறிந்து செலுத்தும் பாகனைப் போல் மனத்தைப் புலமறிந்து செலுத்துவதே அறிவுடையார் செயலென்ப. குடிகளை யான் நியமித்து ஆளுதலேயன்றி அவர்கள் என்னை நியமிக்கவில்லை யென்று தற்பெருமையும், அகம்பாவமும் மேற்கொண்டு தாம் நினைத்தபடியெல்லாம் நடப்பது பெரும் பாவமும் பழியுமேயாம்,

"அஞ்சுவ தஞ்சாமை பேதைமை யஞ்சுவ
தஞ்ச லறிவார் தொழில்"

ஆனதால், பழி பாவங்கட்கு அஞ்சுவதே மனிதர்க்கு அறமாகும்.

செருக்கு, சினம், மிகுதிபற்றியகாமம், இவைகளைச் செல்வர்கள் கடியாதொழியின் அவைகள், அதிகரித்து அநீதிகளைச் செய்விக்கத் தூண்டுகோலாகுமாதலாலும், நன்மை நீங்கிய மானமும், அளவிலாமகிழ்ச்சியும் கைக்கொண்டிருப்போர்க்குக் குற்றமே விளைவிக்குமானதாலும், அவைகளை அளவில்மிகுதியும் சுருக்குதல் வேண்டும், இன்றேல் நேரும் குற்றங்களாவன :—சான்றோர். அருந்தவர், தம்முன்னோர்,

தந்தை, தாய் என்றாகியவரை வணங்காமையும், அவர்களை எதிர்த்தலும், தீமைபுரிதலும், செய்யத் தகாதவற்றில் தலையிட்டுச் செய்து முடித்தலுமாம்.

இனி மானம் மனிதரென்பவர்க்கிருக்க வேண்டியதவசியமாமென்பதைப் பார்ப்போம். மறுமைக்குத் தீவினையும், இம்மைக்கு உலகநிந்தனையும் உண்டாகும்படி நேருகிற காரியங்களை நற்குண நற்செய்கைகளாகச், சிறந்த பெரியோர் மரணம் நேர்வதாயிருந்தாலும் செய்யமாட்டார்கள்.

"இறந்திட வரினு மல்லா விடுக்க ணொன்றுறினுந் தம்மாற்
பிறந்திடு மானந்தன்னை விடுவரோ பெரியாரோர்."

(கந்தபுராணம்)

"தானத்தின் மிக்க தருமமுந் தக்கார்க்கு
ஞானத்தின் மிக்க உசாத்துணையு—மான
மழியா வொழுக்கத்தின் மிக்கதூஉமில்லை
பழியாமல் வாழுந்திறம்."

(அறநெறிச்சாரம்)

ஏனெனில், இறத்தல் ஒருநாளிலே, இறக்கிற அவ்வொரு பொழுதில் மாத்திரமே அனுபவித்துக் கழிகின்ற துன்பமாகும். அந்த இழிதொழில்கள் போல் உயிருள்ளளவும், அழியும்படி அருமையாகியமிக்கதுன்பங்களைச் செய்வதில்லை. அறிவுடையோர் மானக்கேடான காரியமாயிருந்தால் அது எத்தகைய சிறப்புடையதாயிருப்பினும், உடம்பினது நிலையில்லாமையும், மானத்தினது நிலையுடைமையும் ஆராய்ந்து செய்யாதொழிவர். கொல்லும் குணமுடைய வீரமிக்க கானகத்தின் புலியுமன்றோ! தான் மிகப்பசியுடையதாயிருப்பினும், தனது வலது பக்கத்தில் விழாத உணவையுட்கொள்வதில்லை. அங்ஙனமிருக்கப் பகுத்தறிவுடைய நாட்டில் நாகரிகமாக வாழும் மனிதர் மானக் கேடான காரியத்தைச் செய்யத்துணிவது அறிவீனமன்றோ!

இவ்வளவையும் நானிது காறும் கூறியது நீர் ஒரு செல்வவந் தனும், சிறு குடிக்கு ஜமீனுமாயிருந்து தவறியதால் நேர்ந்த பிழையை எடுத்துக்காட்டவந்த செயலாகும். குற்றம் செய் பவர் எவராயிருப்பினும், தண்டித்தலே அரசர்க்கு நீதி. அரசனானவன், நடுநிலைமை திறம்பாது அரசு புரிதல் வேண் டும். நாட்டில் தீயிடுவோர், நஞ்சுவைப்போர், படையிற் கொல்வோர், கள்வர், வழிப்பறி செய்வோர், கொள்ளை யிடு வோர், பிறன் மனைவியை விரும்புவோர் ஆகிய இத்தகைய கொடியரை அரசன் தக்கபடி தண்டிக்காதவரையில், களை யெடுக்காத பயிர் விளைவதற்கின்றிச் சோம்புவதுபோல், குடி கள் துன்புற்று வருந்துவர். ஆனதால், நீர் பழிக்கஞ்சாது செய்த இப்பெருங்குற்றத்திற்குத் தண்டித்தலே முறை யென்று கூறி உம்மீது சுமத்தப் பட்டிருக்கும் குற்றத்திற்கு நீர் ஏதேனும் எதிர்வாதம் செய்வதாயிருந்தால் சொல்லிக் கொள்ளலாம்", என்றனர். அரசர் கூறி வந்தவனைத்தையும் விடாது கேட்டுவந்த மைனர், ஏதும் சொல்ல வகையின்றித் தலை தாழ்த்தியபடியே யிருந்து அரசரை நோக்கி "வேந்தே! நான் மறுக்கத் தக்க விஷயம் ஒன்றுமே யில்லை. நான் புரிந்த பிழை முற்றிலும் உண்மையே. தாங்கள் விதிக்கும் தண்ட னையை ஏற்றுக் கொள்ளக் காத்துக் கொண்டிருக்கின்றேன்" என்றனன்.

மூன்றாவது குற்றவாளிகளாகிய மாதவன் முதலிய துஷ் டர்களை நோக்கி "அரசர் மாதவா! கோவிந்தா! வரதராஜா! உங்கள் மூவர் மீதும் சுமத்தப்பட்டிருக்கும் குற்றங்களுக்கு நீங்கள் என்ன சொல்லுகிறீர்கள்? விரைவில் உங்கள் பதி லைச் சொல்லி முடியுங்கள், என்றனர். அங்ஙனம் கேட்ட அரசர்க்கு விடையாக மாதவன் சிரம் வணங்கி மிகப்பணிந்து வெகு விநயமாக ராஜராஜேஸ்வரா! ராஜ மார்த்தாண்டா! ராஜகெம்பீரா! அடியேங்கள் சமுகத்தில் சொல்லிக் கொள்வ

தென்ன விருக்கிறது! எங்கள் மீது சுமத்தப் பட்டிருக்கும் குற்றங்கள் முற்றிலும் உண்மையே. பஞ்சமா பாதகங்களைக் கொஞ்சமேனும் நெஞ்சிரக்கமின்றிச் செய்து அத்தால்வயிறு வளர்க்கும்படி எங்கள் தலையில் "வேதா"! விதித்திருக்கின்றனன். அதன்படி நாங்கள் நடந்துதானே யாகவேண்டும். "பங்கயத்தோன் எழுதாப்படிவருமோ இல்லை வாழும் தேசிகனே" என்ற பெரியோர் வாக்கும் பிரமாணமாக விருக்கின்றதன்றோ? அன்றியும், 'மக்களுயிர்க்கெல்லாம் வாழ்நாளும் அதற்கு வேண்டுவதாகிய உண்டியும், அதற்கு ஏதுவாகிய செய்தொழிலும், பழ வினை வசத்தால் கருவோடு கலந்து அப்போதே அவன் கற்பித்து விட்டனன். அதன்படி பழ வினையால் சம்பந்தப்பட்டு உடலெடுத்த நாங்கள் அவ்வினைக்கு உள்ளாக வேண்டுவது தானே. அது பற்றி நாங்கள் இத்தீயவினைக்கு உட்படலானோம். எங்களை இவ்விதிக்குள்ளாக்கிய செயல் பற்றித்தான் அப்பாழும் பிரம்மாவுக்குக் கோயிலில்லா தொழிந்தன போலும்.

இன்னும் இது பற்றி எத்துணை நான் இரந்துகூறிக்கொண்டாலும் ஆவது ஒன்றுமில்லை; ஆனால், நாங்கள் செய்த பெருங்குற்றத்திற்குத் தக்க தண்டனையை முன்னமே, தாசில்தா விட்டின் காவல் சேவகனால் முதுகெலும்பு முறியவும், இடுப்பொடியவும் நல்ல அடிபட்டு அதன் உக்கிரத்தால் இன்னும் எங்களுக்கு நல்ல சுவாதீனமில்லாமல் அதனையொட்டிப் புத்தி தெளிந்து அத்துஷ்ட செய்கைகளையே விட்டிருக்கின்றோம். போதாமைக்கு இப்பொழுது சமுகத்தின் முன்னும் குற்றவாளிகளாய் நிறுத்தப்பட்டு விசாரணையும் முடிந்து விஷயமும் உண்மை யென்று விளக்கமானது. இனி இதற்கும் கொடிய தண்டனை ஏற்படும். அதனையும் அனுபவித்தாக வேண்டும். கொலை போன்ற இத்தகைய பெரும்பழி செய்த எங்கள் குற்றங்கள் மன்னிக்கப்படுமோ! தடிக்கந்

சும் குரங்குகள் போலிருக்கின்றோம். ஆனதால், சமூகத்தில் கூறிக்கொள்ளுவதொன்றுமேயில்லை. சமூகம் தங்கள் இஷ்டம்போல் எங்களைச் செய்யலாம்" என்று கூறித் தண்டாகாரமாய்ப் பணிந்து எழுந்து வணக்கத்தோடும் நின்றனர்.

இங்ஙனம் குற்றவாளிகளாக நின்ற ஐவரும், கூறிய வாக்குமூலங்களினால், குற்றத்தின் விஷயம் முற்றிலும் உண்மையென்று அரசர்க்கு ஐயமறத்தெரிந்தது. ஒவ்வொருவரும் தாங்கள் தாங்கள் செய்தது பெருந்தவறுதலென்றும், அறியாமை யென்றும் கூறினர். செய்த குற்றங்களை மறைக்காமல் முழுதும் ஒப்புக்கொண்ட வகையில் அரசர்க்கு மெத்தத் திருப்தி. இதற்கு இனித் தீர்ப்புச் சொல்லவேண்டுவது அரசருடைய கடைமை யெனினும், "அறிந்தாலும் ஐந்து பேரைக் கேட்க வேண்டும்" என்னும் அறவுரை யொன்றிருப்பதால் அது கருதி, தமது சமஸ்தானத்துத் தமிழ்ப்புலவராகிய "வித்யாசாகரபண்டிதரை" நோக்கி! தமிழ்க்கலையை நிலைகண்டுணர்ந்த தண்டமிழ்ப்புலவீர்! இவ்வழக்கில் தங்களுக்குத் தோன்றும் அபிப்பிராயமென்ன? விரைவில் விளக்குதல் வேண்டும் என்றனர். அது கேட்ட புலவர் சட்டெனத்தமது ஆசனம் விட்டெழுந்து அரசர்பெருமானே! நீதிப்புலமையில் நிகரற்ற திறமை வாய்ந்த தங்களுக்குத் தெரியாததொன்றில்லை; எனினும், என்னையும் கேட்பதினிமித்தம் கூறுகின்றேன்: கேட்டருளுக:—

மநு நீதி தவறாத மாண்புடைய அண்ணலே!

"உயர் குடிப்பிறப்பினனான ஒருவன் அறியாமையினால் தான் தவறிச்செய்த குற்றத்தை மனப்பூர்வமாய்த் தப்பிதமென்று ஒப்புக்கொள்ளுவானாயின், அக்குற்றம் சரிபாதி நிவர்த்திக்கப் பட்டதென்பது பெருந்தன்மையுள்ள சில பெரியோரது அபிப்பிராயம். இதில் முதற் குற்றவாளியாகக் காணப்படும் மைனர், உயர் குடிப்பிறப்பினரும், செந்

யிழுக்கினரும், சிறந்த அந்தஸ்தும் உடையவரும் ஆவர். அங்ஙனமிருந்தும் இங்ஙனம் தவறிக் குற்றவாளியாக நேர்ந்ததற்கு துஷ்டர் கூட்டுறவின் மிகுதியே காரணமாகும். உயர்குடிப்பிறந்தார்க்கு மிக்க நல்லொழுக்கத்தாலும் பெரும்புகழுண்டாவதில்லை. சிறிய தீயொழுக்கத்தாலும் பெரும்பழிஉண்டாகின்றது. தாழ்குடியிற் பிறந்தார்க்கோ இங்ஙனமில்லை. சிறிது நல்லொழுக்கத்தாற் பெரும்புகழும், பெருந் தீயொழுக்கத்தால் பழியும் உண்டாகின்றது. நல்லவை செய்தலை இயல்பாகவும், தீயவை செய்தலைப் பலரும் தூற்றும் பழியாகவுங்கொண்டு யாவராலும் அறிந்து நன்கு மதிக்கப்படுகின்ற உயர் குடிப்பிறப்பு ஒருவர்க்குக் கூடுமாயின், அதனினும் இலாபம் வேறு யாதோ? வெள்ளாடைக்கு மாசுபடிதல் போல, உயர்ந்தோர்க்குப் பழியுண்டாவது எளிதாம்.

“ குடிப்பிறந்தார் கண்விளங்குங் குற்றம் விசும்பின்
மதிக்கண் மறுப்போ லுயர்ந்து ” (திருக்குறள்.)

“ ஒன்றாய் விடினு முயர்ந்தார்ப் படுங் குற்றங்
குன்றின்மே லிட்ட விளக்கு ”

“ வந்து தோன்றிய மலர்கதிர் மண்டிலம்
சான்றோர் தங்க ணெய்திய குற்றம்
தோன்று வழி விளங்குந் தோற்றம் போல
மாசறு விசும்பின் மறுநிறங் கிளர ”. (மணிமேகலை)

எனக்காணும் பிரமாணங்களும் கவனித்தற் குரியன.

மானமும் மதிப்பும் உடைய பெருங் குடிப்பிறப்பினர் பேதைமையாலோ, ஊழ்வினை காரணமாகவோ தவறுதல் செய்துவிடின், அதனை மேலோர் எடுத்துக்காட்டுவாராயின், அதனின்றுந் தெளிந்து அதனையே கடைப்பிடியாகக் கொண்டு இனிச் சிந்தனையும் தீயகாரியங்களில் செல்ல மனந் துணியார்கள். இப்பொழுது செய்த குற்றத்திற்கு இப்

பெருஞ்சபையில் தலை நாணிநின்ற தொன்றே இவர்க்குப் போதுமான தண்டனையாம். ஆனதால், மைனர் செய்த குற்றத்தைச் சமூகம் மன்னித்தலே வேண்டும்.

இரண்டாவது குற்றவாளியாகக் குறிக்கப்படுகிற வேணுகோபாலர்க்கும் மைனர்க்குக் கூறிய இலக்கணங்கள் அனைத்தும் பொருந்தும், அவரும் உயர்குடிப்பினர். கணக்கற்ற செல்வவான், தக்கமதிப்பினர். அத்துடன் ஒழுக்க நலத்தில் உயர் வொப்பற்ற பெரிய வீட்டு முத்துவேலப்பர் தலைமைப் புதல்வருமாவர். அத்தகையர் தமது உடன் பிறந்த தங்கைக்குத் தீங்கிழைக்க நினைந்தது அவர் சொந்த புத்தி கொண்டல்ல வென்ப தொருதலை. கள்ளும், காமமும், துஷ்டர் கூட்டுறவும் மேற்கொண்டதால் வந்த தீங்கு. ஆனதால், அவரும் இம்முறை மன்னிக்கப்பட்டால் இனி மறந்தும் இத்தகைய துஷ்டச் செயலுக்கு உடன்படமாட்டார். அவர் தன் தங்கையாலேயே பலர் முன்னிலையிலும் நன்றாக ஏசப்பட்டதே போதுமானது. அதுவே தக்க தண்டனையுமாம். ஆனதால் அவர்குற்றமும் மன்னிக்கப்படுவதே.

மூன்றாவது மாதவன் முதலிய துஷ்டர்கள் செயல்கள் மிகவருந்தக் கூடியதே. இவர்கள் கீழ்மக்கள். துர்ச்சனர்கள் கூறும் சொற்களும், செயல்களும் மன்னிக்கத்தக்கவைகளல்ல. "துஷ்டன் இனிமையாகப் பேசுகின்றவனாயிருந்தாலும் நம்பலாகாது. ஏனெனில், அவனுடைய நாக்கின் நுனியிலே தேன் இருக்கின்றது. இருதயத்திலே விஷம் இருக்கின்றது". "துர்ச்சனன் வித்தையினால் அலங்கரிக்கப் பட்டவனாயினும், நீக்கப்பட வேண்டியவன். பாம்பு இரத்தினத்தைத் தரித்திருந்தாலும் பயங்கர முள்ளதன்றோ! மேலும் துர்ச்சனனோடு சிநேகமும், பிரீதியும் செய்யலாகாது. கரி, சூடாயிருந்தால் கையைச் சுடும்; தணிந்திருந்தால் கையைக் கருமையாக்கும்". 'ஆனதால், துஷ்டர்

வார்த்தைகளில் நம்பிக்கை வைக்கலாகாது ; அவர்கள் சொல்லுக்கும் காது கொடுத்துக் கேட்கலாகாது ; அவர்கள் குற்றத்தை மன்னித்தலும் குற்றமென்பது நீதி நூற்களின் கருத்து". இனி அரசர் இவையனைத்தும் நன்கு கவனித்துத் தங்கள் யுக்தப்படி செய்யலாம். நான் இறுதியாகக் கூறுவதொன்றுண்டு. அது—" பழங்குடி மக்களும், உயர் குணச் செல்வர்களுமாகிய விஜய குணசுந்தரர்க்கு இவ்வுற்சவ சமயத்தை யொட்டி இவ்விடத்திலேயே திருமணம் நிறைவேற்றுதல் உத்தமமும் சிறந்ததுவுமாம். மணமொத்த இத்தம்பதிகளின் மணவினையைக் கண்டு களிக்கப் பலரும் இவ்விடத்திலேயே மிக விருப்பமாயிருக்கின்றனர். நாளையே நன்னாளும், நன்முகூர்த்தமும் மிகப் பொருத்தமாயிருக்கின்றன. அரசர் பெருமான் கவனித்து அருள் சுரந்து ஆகவேண்டும் காரியத்திற்கு ஆணையிட்டால், அனைத்தும் தயாராய் விடும் என்பதே." இவ்வாறு கூறித் தமது ஆசனத்தில் அமர்ந்தனர். அது கேட்டு அங்கு வீற்றிருந்த அவையினரும் பிறரும் ஒரு முகமாய் "ஆஸ்தான பண்டிதர் கூறியபடியே அரசர் செய்வது மெத்த நல்லது. மேற் கூறிய அவ்வரிய திருமணத்தைக் கண்டு களிக்க நாங்கள் மிக விரும்புகின்றோம்" என்று ஆரவாரித்துக் கூறினர்.

"நாவலர் சொற் கொண்டார்க்கு—
நன் கலாற் றீங்கு வாரா".

என்பது நன்றுணர்ந்த வேந்தன், ஆஸ்தான பண்டிதர் அபிப்பிராயப்படியும், அவையினர் விருப்பத்தைத் தழுவியும் திருமணத்தை நிறைவேற்றக் கருதி, பெரிய வீட்டு முத்து வேலப்பர் முகத்தை நோக்கினர். அரசர் கருத்தையும், அவையினர் விருப்பத்தையும் நன்குணர்ந்த முத்து வேலப்பர் சரியென்று தமது கருத்தைத் தெரிவித்தனர். அரசர் மகிழ்ந்து மைனருடையவும், வேணுகோபாலனுடையவும் குற்றங்களை

மன்னித்து அவர்கட்கு அறிவுரையாகச் சில இதோபதேசங்களை அரசர் கூறி அவர்களை ஆட்கொண்டனர். மறு நாள் நடைபெற வேண்டிய விவாகத்திற்கு வேண்டிய சகலவித ஏற்பாடுகளையும், துரிதமும் சிரத்தையுமாகச் செய்யும்படி உத்திர விட்டு அன்று கூடிய சபையைக் கலைத்து அரசர் அரண்மனைக் கெழுந்தருளினர்.

# XXVI

## திருமணம்

தசராவுக்கென நகரெங்கும் நன்றாக அலங்கரிக்கப்பட்டிருந்த சித்திரப்பந்தர்களும், சிங்காரஜோடினைகளும் அந்தங் குலையாமல் வெகு அழகாகவே விளங்கிக் கொண்டிருந்தன. தர்பார் மண்டபத்தை மட்டும் தனியாக மாவிலைத் தோரணங்களாலும், வாழை, கமுகு இளநீர்க் குலைகளாலும் நன்றாக அலங்கரிக்கப்பட்டு ரமணீயமாகத் துலக்கஞ் செய்யப்பட்டது. விவாகத்திற்கு வேண்டிய சாமக் கிரியைகளை வெகுபரபரப்பும் தீவிரமுமாகச் சேகரஞ் செய்யப்பட்டன. விஜயமும், குணசுந்தரமும் விவாகவிஷயத்தைக் கேட்டதிலிருந்து மட்டடங்காத மகிழ்ச்சியடைந்து இன்பம் பூரித்தனர். முத்துவேலப்பரும், அவர்மனைவி விசாலாட்சியம்மாளும் இவர்களினும் பதின்மடங்கு ஆனந்தங் கொண்டனர். இவர்கள் விவாகத்தைப்பற்றி நகரெங்கும் ஓரே சொல்லாய் "நல்லதாம்பத்தியம், பொருத்தமான விவாகம். இங்ஙனம் அன்பின் கொழுகொம்பென மணமக்கள் அமைவது அரிது. பூர்வ புண்ணியத்தின் பரிபாகமே இது. அழகில் மதனனும் ரதியும் போன்றவர்கள்" என்று சம்பாஷித்துக் கொண்டிருந்தனர். வேலையாளரும் பிறரும் இரவு முழுமையும் தூக்கமின்றி விவாகத்திற்கு வேண்டிய சகல ஏற்பாடுகளையும் குறைவின்றிச் சீராய்ச் சேகரஞ்செய்து முடித்தனர். பொழுதும்

புலர்ந்தது. சூரியனும் இந்நற்றம்பதிகளின் திருமணங் காண விரைந்து வந்தாற் போல் ஆகாயவீதியில் அழகாகத் தோன்றி பொன்மயமான தனது இளங்கதிர்களால் புரவி பாளையத்தைப் புதுப்பித்துக் கொண்டிருந்தனன். அது கண்டு அரசரும் அந்தணரும் விரைந்தெழுந்து மணவினைக்கு வேண்டிய விஷயங்களில் கவனஞ் செலுத்தினர். தம்பதி களிருவருக்கும் வேதவிதிப்படி புண்ணிய தீர்த்தங்களைக் கொண்டு நீராட்டிச்சிறந்த ஆடையாபரணதிகளால் நன்றாக அலங்காரஞ் செய்யப்பட்டனர். மங்கல வாத்தியங்கள் மணப் பந்தரில் வெகு முழக்கமாக ஒலிக்கத் தொடங்கின. அது கேட்ட நகரமாந்தரும், பிறரும் பெருங் கூட்டமாக அந்த மான உடையுடுத்து வெகு அழகாக மணப்பந்தரில் விஜய மாய்க் கொண்டிருந்தனர். குறித்த சுபமுகூர்த்தம் கிட்டிய தென மறையவர் கூற, அப்பொழுதே தம்பதிகள் மணப் பந்தரில் எழுந்தருளிவிக்கப்பட்டனர். மங்கலப்பாடகர்கள் நற்கீதம் பாடினர். விப்பிரர் வேத கோஷம் செய்தனர். புலவர்கள் வாழ்த்துப் பாக்கூறினர். எங்கும் குதூகலமே கூத்தாடி நின்றது. சுற்றத்தார் சூழ விருந்தனர். இத்த கைய நற்சமயத்தில் மணவினைச் சடங்கனைத்தும் முறைப் படிக் கிரமமாக நிறைவேற்றிக் குணசுந்தரியின் திருக்கழுத் தில் விஜயனைக் கொண்டு மங்கல நாண் புனையப்பட்டது. தம்பதிகளிருவரும் இதயம்பூரித்துக் களிப்பெனுங் கடலி லாழ்ந்தி இல்லற தர்மத்தின் எல்லையை மிதித்தனர். அதன் பின்னர் விஜயம் மாமனர் மாமியாரை வணங்கியபோது முத்து வேலப்பர் விஜயனது அன்பானது தனது மனத்திலே மிகுந்து புறத்தே ஒழுகினாற்போன்று கண்கள் தாரைகள் பொழியத் தன்னை வணங்கிய விஜயனைத் தழுவி மகிழ்ந்தனர். குணசுந்தரம் பெற்றோர்களின் திருவடியை வணங்கித் தன் னைப்போல் உயர்வடைந்தவர்கள் உலகில் ஒருவருமேயில்லை

யெனக்களிப்பின் மிகுதியால் கூறி வியந்து கொண்டனள். அங்ஙனம் வியந்து கூறிக் களிப்புக் கொண்டதற்குத் தாங்களும் களித்தவர்களாய் ஒரு வருஷ காலம்போல் தங்கள் அருமைப் புத்திரியை இழந்து அத்தால் உளம் வருந்தி மறுகியிருந்து இப்பொழுது இத்தகைய சிறந்த வைபவத்தில் மகிழ்வதைக் கண்டதனால், அவர்களடைந்த பேரானந்தம் அளவற்றதெனச் சொல்லவும் வேண்டுமோ ? இருவரும், "நீடு வாழ்க, புத்திரப்பேறடைக, பதினாறும் பெற்று பெருவாழ்வு பெறுக." என மனப்பூர்வமாய் மங்களாசி மொழிந்தனர். வேந்தரும் அவர்கள் பெருமைக் கேற்றவாறு பல்வகைச் சீர் வரிசைகளைச் சிறக்கச் செய்து அபிமானித்தனர். இவ்வனைத்துங் கண்ட அங்கு வந்திருந்த பலரும் ஒரே வாக்காய் அத்தம்பதிகளை நோக்கி "என்றும் மங்களம்பெறுக நற்புத்திரப் பேறடைந்து சிறந்து வாழ்க,, வென்று ஆசிர்வதித்து மங்களாட்சதை தூவினர். அதன்பின் நடக்க வேண்டிய கலியாணச் சடங்குகளைப் பூர்த்தி செய்து அன்று பகல் 4 மணிக்கு கானப்பிரசித்தி பெற்ற "ஜாசிலலிதாவைக்" கொண்டு சங்கீதக் கச்சேரி யொன்று சிறப்பாக நடத்தப்பட்டது. அவள் அன்று என்றுமில்லாதபடி தன் சமர்த்தெல்லாங் காட்டித் தனது இனியகுரலில் அழகும் உருக்கமுமாகப் பாடி யாவரையும் களிப்பித்தனள். அங்ஙனம் களிப்பித்த அவள் சிரமத்தைப் பாராட்டி 300 ரூபா விலையுள்ள காசிப்பீதாம்பரப் புடவை யொன்றும், ரொக்கம் ரூபா 500-மாக முத்து வேலப்பரால் சன்மானிக்கப்பட்டது. பின்னர் நான்கு நாளும் விவாகம் வெகு விமரிசையாக நடத்தப் பெற்று ஐந்தாம் நாள் அனைவரும் அரசரிடம் பிரியா விடைபெற்று அவரவர்கள் சொந்த ஊருக்கு மகிழ்வோடு சென்றனர். சுபம்.! சுபம் !!

முற்றிற்று.

# பிழையும், திருத்தமும்.

'ஒருவன்' என்று வந்துள்ள விடங்களிலெல்லாம் ஒருத்தி யென்றும்,

'நிலமை' என்று வந்துள்ள விடங்களிலெல்லாம். நிலைமை யென்றும்,

'வீற்று' என்று வந்துள்ள விடங்களிலெல்லாம் வீற்றிருந்து என்றும் திருத்திப்படித்துக் கொள்ளவும்.

106-ம்பக்கம் 'குணசுந்தரம் லலிதாவான விநோதம்' என்ற தலைப்பின் கீழ் 'உற்ற பால' என்று வந்த செய்யுளில் 'மன்னவா' என்ற கடைசிச் சீரை மன்னவாம் என்றும்,

113-ம் பக்கம் 'ஆண்வேடம்' என்ற தலைப்பின் கீழுள்ள செய்யுளை,

பண்டு முளைப்ப தரிசியே யானாலும்,
விண்டுமி போனால் முளையாதாம்—கொண்டபேர்
ஆற்ற லுடையார்க்கு மாகா தளவின்றி
யேற்ற கருமஞ் செயல்'' என்றும்,

121-ம் பக்கம் 'நினையாத நீக்கம்' என்ற தலைப்பின் செய்யுளின் மூன்றாவது அடியிலுள்ள 'துறுசூம்' என்றிருப்பதை துறுசூழ் எனவும், நான்காவது அடியிலுள்ள இறுதிச் சீரில் 'காண்கச்சி' என்றிருப்பதை காண்கச்சி எனவும் திருத்திப் படித்துக் கொள்ளவும்.

மற்றும் மறதியாலும், கைப்பிசகாலும், நேர்ந்துள்ள பிழைகளையும் வாசகர்கள் தயவுடன் திருத்திக் கொள்ளுமாறு வேண்டப் படுகிறது.

## அபிப்பிராயம்

ஸ்ரீமான் சி. கு. நாராயணசாமி முதலியாரவர்கள் தமிழ ராய்ச்சியில் சீமானவர். அவரது நுண்ணறிவின் பயனாக வெளிபோந்த தமிழ் நூல்கள் பலவாகும். அவற்றினை ஓதியுணர்ந்தோர் அவரது கல்வித்திறத்தினை வியவாமற் போகார். வெகு பழங்காலத்திருந்து அவர் இவ்வழியே ஒழுகித்தமிழ்த் தெய்வத்திற்கு ஆராதனைகள் செய்துவரும் அன்பினராவர். பழந்தமிழ்ப் பாடல்களிற் பொதிந்துள்ள சுவைநயத்தினை வசனவடிவில் விளக்கி இன்பந்தரும் இனியருமாவர். இந்நாளளவாக இவர் இத்துறையிற்றானே தமது தமிழ்த்தொண்டினை இயற்றிவந்தனராக, இவர் ஏன் தமிழ் நவீனகங்கள் இசைத்திடலாகாதென நெடுங்காலமாக நம்முள்ளத்தே ஓர் ஐயம் பரவிக்கிடந்து. சந்தித்த காலமெல்லாம் வந்தித்துப் பலகாலும் இதனை எடுத்தோதித் துணிவது எப்போதெனக் கேட்டுவந்தோம். அதற்காய ஆற்றல் தம்மிடத்தே யுண்டோவெனச் சந்தேகஸாகரத்திற் றானே கழித்தனர் பல ஆண்டு கன்னடத்திலும், களி தெலுங்கிலும், அருந்தமிழிலும், மலையாள பாஷையிலும் வன்மை மிக்க இவர் வாளா விருந்தறக்கண்டு வருந்திய எம்முள்ளம், தற்போது 'குணசுந்தரத்தைக் கண்டதும் இறும்பூது மிகுந்து மலர்ந்தது.

குணசுந்தரம் என்ற இந்நவீநகம் சிறந்த செந்தமிழ் நடை வாய்க்கப்பெற்ற தமிழின் அழகு நன்கு துலங்குவது தமிழ் பாடல்களின் பயற்சியுடன் வாசகர்க்கு அவ்வழியில் இன்பம் பயக்குமாறு இடனறிந்து இணைத்துள்ள இசைவு மிகமிகப் பொருத்தமே. கதையும் சிறந்ததாய், கற்பனையும் மேம்பா

டுற்றதாய், ஆற்றின் பிரவாக மெனத் தங்கு தடையின்றி வேகம் வெகுவாகி மனக்களிப்பு அதிகமாகி மனோல்லாஸ பூரிதமாய் பூர்த்திகொண்டு பரிமளிக்கின்றது. நல்வழியின் நலமும், அல்வழியின் அல்லலும், விபசார துராசாரங்களின் துன்பமுடிவும் மின்னும் பல் வகைத்தூய அறநெறிகளும் ஒன்றுகூடி நூலை நன்கு அலங்கரிக்கின்றன. மாயவஞ்சகி களாம் தீநெறி படர்ந்த காமத்தோஷை மார்தம் தொழிற்றிறங் களும் அத்தால் நேரும் தொல்லைகளும் தொகுத்துக் காட்டி யுள்ள சீர் அறிவுதிருத்தத்திற்குரியதே. பணமுள்ளோர் பல குணமில்லாராய்க் கெடுங்காட்சி இந்நூல் முற்றிலும் பரவி நல்ல அநுபவத்தை நலமாக எடுத்துத் தெறிவிக் கின்றது,

ஸ்ரீமான் முதலியாரவர்கள் நாவல் வகையினுள்ளும் நனி சிறந்தவரேயாவரென இதனை யோதுவோர் உடனே உணர் வார். உணர்ந்து இன்னும் அவர்க்கு ஊக்கம் காட்டி உன்னதம் தந்து இவ்வழியிலேயே அவர் என்றும் செல்லு மாறு செய்விப்பரென நம்புகின்றோம். குணசுந்தரம் தமிழ் நாடெங்கணும் பரவி நறுமணங்கமிழப் பெறுவதாக இன் னும் பல பல நவீனங்கள் அவர் பெயருடன் தோன்றி புல்ல 'நாவலர்', பாவலர் ஆவராக திருவருள் முன்னிற்க. மங்களம்.

சென்னை
2-8-23

எஸ். ஜீ. இராமாநுஜலு நாயுடு
"பிரஜாநுகாலன்" பத்திராதிபர்